மச்சமுனி நாயனார்

அருளிய

# திருமந்திரம்-800

(கருத்துரையுடன்)

இணைப்பு : ரோமரிஷி வைப்பு சூத்திரங்கள்



பதிப்பாசிரியர்

எஸ். பி. ராமச்சந்திரன்



தொலைபேசி எண் : 4800249

**தாமரை நூலகம்**

7, N. G. O. காலனி,
வடபழனி, சென்னை-600 026.

தாமரை வெளியீடு 72
முதற் பதிப்பு : டிசம்பர் 1991
இரண்டாம் பதிப்பு : ஜனவரி 1997
பதிப்புரை பெற்றது.

நூலைப் பற்றி

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | மச்சமுனி நாயனார் திருமந்திரம் . 800 |
| பதிப்பாசிரியர் | : | எஸ்.பி.ராமச்சந்திரன் |
| வெளியிட்டோர் | : | தாமரை நூலகம், 7,என்.ஜி.ஒ. காலனி, வடபழனி, சென்னை 600 026. |
| பதிப்பு ஆண்டு | : | ஜனவரி 1997 |
| உரிமை | : | பதிப்பகத்திற்கு |
| நூல் வடிவம் | : | 18x12 1,2 செ.மீ. |
| அச்சுத்தாள் | : | 10.7மாண்டியா வெள்ளைத்தாள். |
| அட்டை | : | 13.2 சேஷசாயி |
| எழுத்துக்கள் | : | 10 புள்ளி |
| மொத்தபக்கங்கள் | : | 216 |
| பிரதிகள் | : | 1,000 |
| பைண்டிங் | : | செக்ஷன் |
| விலை | : | ரூ40.00 |
| அச்சிட்டோர் | : | கிரியேடிவ் ஆப்செட், சென்னை 600 034. |

# பதிப்புரை

ஒருசில பாடல்களைப் படித்தவுடனே இந்த நூலை அச்சுக்குக் கொடுத்துவிட வேண்டும் என்ற தூண்டுதலை உண்டாக்கிய முதல் நூல் இதுதான் என்று சொன்னால் மிகையாகாது. அவ்வளவு அற்புதமான பாடல்கள்! சந்தம்! ஓசைநயம்! வர்ணிக்க முடியாத அழகு படைத்தவை இந்தப் பாடல்கள்.

முதலாவது நூலைக் கொடுத்து உதவிய டாக்டர் மிஸஸ் பார்வதி N. சர்மா M S அவர்களுக்கு எப்படி நன்றி கூறுவது என்றே புரியவில்லை. நூலைப் பார்த்தவுடன் இந்த நூலை ஏற்கெனவே தஞ்சை சரஸ்தி மஹால் வெளியிட்டுள்ளது. புஸ்தகம் என்னிடம் இருக்கிறது என்றார் கோவிந்தராஜன்.

இரண்டு புஸ்தகங்களிலும் ஏராளமான பிழைகள் இருந்தன. பிழைகளைத் திருத்தி அச்சிட்டபின் உரை எழுதும் போது பல இடங்களில் வார்த்தைகள் பின்னிக் கொண்டிருப்பதால் பிழைகள் நேர்ந்திருப்பது தெரிந்தது.

சில பாடல்களில் வைப்புச் சரக்குகள் பாடபேதத்தால் விடப்பட்டும் இருந்தன. ஒவ்வொரு பாடலாக ஆராய்ந்து, மற்ற சித்தர்கள் எப்படிச் சொல்லியிருக்கிறார்கள் என்பதையும் பரிசோதித்துப் பார்த்து நீண்ட பிழை திருத்தம் அச்சிடவும் அவசியம் ஏற்பட்டது.

இந்த நூலுக்கே மணிமகுடம் வைத்தாற் போல் விளங்குவது திரு. R. கோவிந்தராஜன் உரை. தமது அனுபவத்தால் சுருங்கக் கூறி விளங்க வைத்துள்ள முறை பாராட்டுக்குரியது.

எங்களால் முடிந்தவரை இந்த நூலைச் செம்மையாகத் தயாரிக்க முயன்றிருக்கிறோம். குறைநிறைகளைச் சுட்டிக் காட்டினால் மிகவும் நன்றியுடையவர்களாக இருப்போம்.

இந்த நூலின் முதல் பிரதியைக் கொடுத்து உதவிய டாக்டர் மிஸஸ் பார்வதி N. சர்மா அவர்களுக்கு மீண்டும் ஒரு முறை நன்றி தெரிவித்துக் கொள்கிறோம்.

எஸ். பி. ராமச்சந்திரன்
பதிப்பாசிரியர்

# பொருளடக்கம்

## பிழைத்திருத்தம்

| பக்கம் | பாடல் | வரி | இப்படி இருக்கவேண்டும் |
|---|---|---|---|
| 1 | 44 | 4 | அருமை வளம்பதியாம் பசு பாசமே |
| ,, | 45 | 1 | பாசம் நிறைந்த பதி பசு மூன்றையும் |
| ,, | 46 | 3 | சோமனைத் தரித்த சுந்தரன் |
| 18 | 58 | 2 | கடைக்கண் நீர்மையால் |
| 19 | 60 | 2 | விண்டேன் மனந்தனில் வெகுளி களெல்லாம் |
| 33 | 145 | | தலைப்பு பெருங்காயம் |
| 34 | 150 | 2 | பொத்துடும் வங்கம் பேர் அது ரண்டும் |
| ,, | ,, | 4 | சத்தமும் கெந்தி தாளகம் சேரே |
| 40 | 187 | 3 | துள்ளிய ரசமும் தொய்வாகக் கூட்டியே |
| 42 | 199 | 4 | ஒளிவான பூருவு மொன்றாய் |
| , | 200 | | தலைப்பு தீமுருவல் பாஷாணம் |
| 43 | 203 | 4 | தீமுருவல் பாஷாணமாமே |
| 44 | 214 | 3 | சாரமாய் மூடியே சாத்து மண் சீலைதான் |
| 45 | 215 | 3 | [illegible] கட்டியே |

| பக்கம் | பாடல் | வரி | இப்படி இருக்க வேண்டும் |
|---|---|---|---|
| 45 | 217 | 1 | சாரமும் காரமும் தன்னோடு தாரமும் |
| ,, | ,, | 2 | ஓரிடை சூதமு முருகப் |
| ,, | 220 | 4 | பூணவே துத்தம் புகழ் வெள்ளை |
| 46 | 223 | 4 | பத்திட லிங்கமும் பாஷாண தாரமே |
| 47 | 227 | 3 | பாரமாயேற்றிப் பதிய மன்சிலை செய் |
| 50 | 246 | 3 | வானவர் சூதம் வளர் வீர நாகமும் |
| ,, | 250 | 4 | சுத்தானலிங்கந் தரு சூத நாகமே |
| 51 | 256 | 4 | அனலிட்டிறக்கி ஆத்தி யெடுத்திடே |
| 53 | 264 | 1 | பச்சையும் நாகமும் பதிவான சாரமும் |
| ,, | 265 | 1 | அடைத்திடு குப்பியை |
| 54 | 271 | 2 | —நிலைக்கு மருந்தது |
| ,, | 272 | 1 | லிங்க ரசமுடன் நேர்சரி |
| 57 | 292 | 4 | பொன்னான தரமும் பொட்டிலுங் காரமே |
| 58 | 293 | 3 | சாரமண் சீலை |
| ,, | 294 | 1 | முதிரக் குளிர்ந்த பின் |
| ,, | 297 | 1 | எண்ணூறும் பார்த்தவர்க் கிடர் இனியில்லை |
| ,, |  | 3 | கண்ணூர் திறந்து கற்பூரத் தீபமாக |
| ,, | 298 | 3 | வாசி தன் ஒளிபோல் வசனித்தேன் |
| 59 | 302 | 1 | துவங்கும் வழியைச் சொல்லுவேன் கேளு |
| 60 | 305 | 3 | அத்தி நற் கற்கடம் |
| , | 306 | 2 | வாதவைக் கிராந்தம் |
| ,, | 307 | 3 | கோசாம கண்டருக் |
| 61 | 316 | 4 | பகலெவாச் சாரமும் பதிகாசிச் சாரமே |
| 62 | 317 | 23 | கார வெண்காரம் கதித்த நல் சூடனும் பார கற்பூரம்பதிவாய முரியும் |
| 62 | 319 | 1 | லவணம் பொன்னம்பரு நாறு மீனம்பர் |
|  |  | 2 | தவனுரைதானக்காச்சு லவணமுடன் |

| பக்கம் | பாடல் | வரி | இப்படி இருக்க வேண்டும் |
|---|---|---|---|
| 62 | 322 | 2 | பத்திக்கும் பூரகம் பதிவான சத்தியாம் |
| 64 | 330 | 1 | தேக்கு தவளைக்கல் சிலாவங்கஞ் சிலாநாகம் |
| 66 | 342 | 1 | சித்தி சிவமது |
| 68 | 355 | 1 | வளகி யேரண்ட |
| 75 | 399 | 4 | சோதி பயமெனத் தூன்றிய நாதமே |
| 78 | 414 | 3 | சீருள்ள மெழுகதில் சித்து விளைந்திடும் |
| | 416 | 4 | நின்றிடும் கற்பம் நேர்தனைக் கண்டிடே |
| 80 | 428 | 3 | தழைத்திடு நாதம் தன்னொடு வீரம் |
| 86 | 465 | 4 | சேமத்தில் வாசி சித்திக்கு நல்தீபமே |
| 89 | 482 | 4 | அழுத்தி வெருகடி |
| | 484 | 4 | சிறக்குஞ் சிவமாய் சிவமான அண்டமே |
| 91 | 494 | 4 | நெளித்த புழுவுட லோரா |
| 97 | 530 | 2 | பத்தான மூலியில் பழுத்திடும் லோகங்கள் |
| 98 | 534 | 4 | ஊசரந் தன்னிலுகந்து அரைத்திடே |
| 104 | 572 | 2 | தாகமாய் நூற்றில் தாக்கி |
| | 573 | 4 | உடமானமாக வுண்டு |
| 105 | 579 | 4 | விதி மதி யொன்றாய் விளங்கிடும் திண்ணமே |
| 109 | 601 | 3 | கூட்டியுருட்டிக் குணமா யெடுத்திடு |
| 111 | 611 | 1 | மையான மைசெய் மார்க்க |
| | 613 | 2. | பார்த்திடும் போதில் பகலிலே |
| 113 | 623 | 1 | திறமா யுவருப்பில் சிவக்கு |
| 117 | 650 | 2 | நிற்கும் வகை கேள் நேரானவீரமும் |
| 118 | 654 | 4 | சினத்துடன்—சேர் பலம் அன்பதே |
| 119 | 660 | 4 | நன்றான—நாவிலொன்று சாரமே |
| 120 | 668 | 3 | திடங்கொண்ட—முட்டைக் கருவினில் |
| 123 | 678 | 2 | பற்றியாங்—பருமுத்து மஸ்தியும் |
| | | 3 | சித்தியாய ரெண்டும் |
| 123 | 685 | 1 | கூட்டியுமிழ் நீர் விட்டுமே |
| 133 | 747 | 3 | சீரோடு—பிந்து சேர்க்கத் திறமுடன் |

உ
ஸ்ரீ சற்குருவே நம:

# மச்சமுனி நாயனார்

அருளிச் செய்த

# திருமந்திரம்-800

## காப்பு

ஆதி பராபரத்தாய் மலரடி
நீதியில் வேத நிர்மய மானது
சோதியில் நாதந் துலங்குஞ் சுடரொளி
சாதியில் நந்தி தன்பதங் காப்பே. 1

காப்பான நந்தி கருணை பராபரங்
கூப்பான குண்டலி குகையி லடங்கிடுங்
தாப்பான பிரமன் தன்னொடு தன்பதம்
வாய்ப்பாய் என்நெஞ்சில் மகிழ்ந்துகொண்டேனே. 2

கொண்டேனே மாலுங் குடியாக நெஞ்சினில்
கண்டேன் மலர்ப் பதங் கருத்தாய் மனந்தனில்
சென்றே னடுவனில் சித்த மகிழ்ந்திட
நின்றேன் துருவம்நேர் நிலைசித்தமே. 3

சித்தம் பெருகி சிவமான ருத்திரன்
பத்தம தாகப் பதிவாய் என் னெஞ்சினில்
சுத்தமாய் நின்று துருவத் திடையினில்
நித்தியங் கண்டு நின்றேன் அறிவினால். 4

அறிவா மயேச்சுர மாதிச் சுடரொளி
நெறியாக வந்த நேர்மையில் என்மனம்
குறியாகச் சென்று கூடிக்கசிந்து நலம்
பிறியாத வாசிப்பேர்இன்ப சித்தியே. 5

சித்திக்கும் அந்த் சிவமாய் சதாசிவம்
முத்திக்கு நல்ல மோட்சம் இதுஎன்று
பத்திப் பிடித்துப் பரமாம் வெளியிலே
சுத்தம தான சுடரொளி தீபமே. 6

தீபம தாகச் சிவாநந்தி பூரணஞ்
சாபந் தவிர்த்துத் தனையறி மந்திரம்
தூபமதாகித் துலங்கி நின்ற வாசியில்
நீபதமாக நிலையறி போதமே. 7

போதம தான பூரண வாசியில்
நாதம் நிறைந்து நன்மலர் பூத்துச்
சூதம தாகித் துலங்கும் பராசக்தி
நீதம் வளர்ந்து நின்னருள் கண்டிடே. 8

கண்டது அந்தக் கருணைக் கடைக்கண்
நின்றது மேலே நிலையறி பூரணங்
கொண்டிட வந்தக் குறியினில் தீபம்
உண்டு நீபார்த்து வுயிரறி வாசியே. 9

வாசி யுடனாசி மதிநிறை கண்செவி
தேய்வுடன் பரிசந் தெய்வ நிலையிது
தோய்வாக் கண்டு துலங்கிய ஐம்புலன்
சேயுட் சிவமதில் சென்றிட முத்தியே. 10

முத்தி வளர்ந்தது மும்மலச் சத்தியில்
பத்தி நல்மனதாய்ப் பரிபூ ரணமாய்
சித்தம் பெருகிச் சிவசக்தி ரெண்டையும்
அத்தன ருளால றிந்துநீ பார்த்திடே. 11

பாத்திடக் காயம் பரம வெளியினில்
காத்திடப் போகாக் கமல மலரினில்
சேர்த்திடும் வாசி தீபச் சுடரினில்
நீத்திடுந் தேகம் நிர்மல மாகுமே. 12

நிர்மல மாகிநேர் புருவ மையம்
நன்மல ரான நாத மனோன்மணி
தன்மன தென்றுதான் அதுவாகி
உன்மன தாலே யூரறிவீரே. 13

அறிவான போகம் அருளான தீபம்
நெறியான வாசி நேர்மூல வன்னி
குறியான நாதங் குருவான போதம்
பரியான தேசிப் பதிவான மூலமே. 14

மூலம தான முத்தி நடுவணை
ஞால மதாகி நடுநிலைப் பத்தி
சூலம தான சுடரதில் சென்று
சீலமதாகிச் சிவமதுக் கொள்ளே. 15

சிவமான அகாரந் திருவான பூரணம்
தவமாய் மனதில் தானுருக் கொண்டால்
அவமான தேகமழியாச் சிவமாம்
நவமாங் கிரகம் நவம்பெற முத்தியே. 16

முத்தி உகார முதலான சத்தியாம்
பத்தி யீதெனவே பதிவாய் மனதினில்
சத்தியுமாகத் தானுருக் கொண்டால்
சித்தம் பெருகிச் சிவனுரு வாமே. 17

ஆம்சிவ சத்தி அருளான போதம்
நாமயம் நீக்கி நலம்பெறப் பூசிக்கில்
வாமம் பெருகி மதிவலஞ் சென்று
தாம்சிவ மல்லால் தனிச்சிவ மில்லையே. 18

இல்லையே கள்ளம் ஏகவிருதயந்
தொலலை கனோடிச் சூழலுஞ் சுழிதனில்
சல்லைக ளில்லைத் தான் அவனாகுந்
தில்லையில் வாழுந் திருநடன மாமே. 19

திரு நடமான சிவமான சோதியை
குருவிடமாகக் குறியினில் கண்டு
உருவிட மென்று உண்மையதாக
மருவிட வாச மயங்காத வாசமே. 20

வாச மனோன்மணி மயங்காத பூரணி
நேசமதாக நின்னருள் கண்டு
பாசமதாகப் பதியினில் செலுத்தி
தேசம தெங்குஞ் செலுத்திடு திரமே. 21

திரமான தீட்சை செப்புவேன் கேளு
கரமான நெல்லிக்கனி யதுபோல
சரமான வாசி சங்கர கௌரி
வரமான தீட்சை மகிழ்ந்திடக் கேளே. 22

கேளு அம்மென்று கெடியாக மண்டலம்
நாளுடன் செபிக்கில் நமனது விலகுஞ்
சேலுடன் தேகந் திரமது வாகும்
மாலுடன் சித்தும் வந்திடுந் தானே. 23

தானது ரெண்டாந் தீட்சையைக் கேளு
ஆனது உம்மென் றன்புட னீயும்
வானது நோக்கி மண்டலஞ் செபித்தால்
கோனவ னருள்தான் குடியிருப்பாமே. 24

குடியினில் மூன்றாந் தீட்சையைக் கேளு
முடியினில் சென்று முழுமன தாக
அடியினில் சிம்மென் றன்புட னீயும்
வடிவுடன் நன்றாய் வணங்கிடு முத்தியே. 25

முத்தியில் நாலாந் தீட்சையைக் கேளு
அத்த னருளை யன்புட னோக்கி
உத்தம நம்மென் றுரிமையாய்ச் செபிக்கில்
சத்தஞ் சிவமாய்த் தானவ னாமே. 26

தானது அஞ்சாந் தீட்சையைக் கேளு
ஆனது தம்மென் றன்புட னீயும்
வானுட நோக்கி மகிழ்ந்துருக் கொண்டால்
ஊனுடன் தேகம் உறுதியு மாமே. 27

உறுதியா மாறாந் தீட்சையைக் கேளு
நெறி தவறாயல் நேர்மையில் நின்று
சுருதியி லங்கென் றுடர்ந்துருக் கொண்டால்
பருதி போல் தேகம் பக்குவமாமே. 28

பக்குவ மேழாங் தீட்சையைக் கேளு
திக்கும் பொருளாய்த் தானேரம் மென்று
சிக்குமிடந் தன்னில் சென்றுரு செபித்தால்
திக்கு விசையஞ் செய்யலு மாமே. 29

செய்யவே எட்டாங் தீட்சையைக் கேளு
பையவே பிரம பதியிட மாகிக்
கையது நெல்லிக்கனி யதுபோல
வையகந் தன்னிற் கம்மென நில்லே. 30

நில்லே நிலையில் நினைவுடன் நின்றால்
தொல்லைகள் அகலுஞ் சோதிகள் காணுங்
தில்லையில் வாழுந் தெரிசனங் காணும்
நல்லது எட்டுச் சித்துகள் நன்மையே. 31

நன்மையா மொன்பதாங் தீட்சையைக் கேளு
உன்னமரும் மெனவே யுகந்துருக் கொண்டால்
சின்மயமான தெரிசனங் காணும்
தன்மை யீதெனவே சார்ந்திட முத்தியே. 32

சார்ந்திடப் பத்தாங் தீட்சையைக் கேளு
கூர்ந்திடு மந்தக் குறியை நீபார்த்து
ஆர்ந்திடு மம்மென் றனுதினம் நோக்கில்
தீர்ந்திடும் பிறவித் திருவுரு மாமே. 33

ஆமே யுருத மதிநடு குண்டந்
தாமே பிடதி தனிச்சிவமாகும்
ஊமை யுருவா யுகந்திடும் பிடதிக்
காமம் வினையுங் கதிரவன் முனையே. 34

முனையா நடுமனை மூதண்ட மானது
நனையாச் சுடரதில் நாதம் பிறந்திடும்
மனையா நடுமதி அண்டச் சுடரிலே
அணையா நின்றது ஆதியு மந்தமே. 35

ஆதியு மந்தமும் அமர்ந்த பிண்டமாய்
வீதி களானாய் விளங்கு நடுமனை
சோதிகள் நிறைந்து தூண்டாச் சுடரொளி
சாதிகள் தொண்ணூற் றாய்ச்சமைந்தனவே. 36

சமைந்தது தன்னைச் சாற்றுவேன்கேளு
அமைந்திடும் போதிலது செய்யுநன்மை
சுமந்திடு மாதர்சுழல் வையமதனில்
நிமிந்திடும் பொழுதில் நின்னருள் கண்டிடே. 37

கண்டிடு தேகங் காரணமாக
அண்டிடும் போதி லமர்ந்திடும் வாழ்க்கை
சென்றிடுஞ் சிசுவுஞ் சிவரூப மாகி
மன்றிற் சென்ற மகுத்துவந் தானே. 38

மகுத்துவ மெல்லாம் வழுத்திடக் கேளு
அகத்திலறிவு அமைந்திடும் போதில்
வகுத்திடும் பதியும் வளர்பசு பாசமுந்
தொகுத்திடும் போதந்தத் தொழில்செய்கு வாரே. 39

வார்பொரு ளறிவு வளர்பதிச் சேரில்
சீர சிவயேக சிவபதி சேர்வான்
நேர் பதியான நிர்ணயங் காண
சேர்பதிவான குணமது வாமே. 40

ஆமே மோன வறிவுகந்தாலது
நாமெனக் கோபம் நவின்றிடு மக்காள்
தாமெனக் கொடுமை க்ஷணத்தினில் இல்லைவான்
ஊமையு மோடி யொளிந்திடும் பாரே. 41

ஒளிந்திடும் பாசத் துள்ளறி வுகந்தால்
தெளிந்திடும் அறிவு நேரறியாமல்
சுளித்திடு மாய்கை சுழலது தனிலே
களித்திடுஞ் சிவமுங் காரணம்பாரே. 42

காரண மாகக்கர்ம முரைத்தோம்
நீறணிச் சடையோ னிறைமதி யாலே
சீரணி தேகஞ் செயலது கண்டீர்
பேரணி மூன்றின் பெருமைசொல் வேனே. 43

பெருமை சிறந்திடும் பேரஞ் செழுத்தின்
உருமையின் பாகத் துண்மையைக் கேளு
சிறுமையும் வருமையுஞ் சென்றிடு மந்த
அருமை வளம்பதி யாம்பதி பாசமே. 44

பாசஞ்சிறந்த பதியுடன் மூன்றையும்
வாசமதாக வழுத்துவோங் கேளு
நேசமாம் பதியும் நின்னருள் சிவமாங்
தேசமாம் பசுவுஞ் சீவனுமாமே. 45

ஆமெனப் பாசமடங்கிய தேசமாம்
தாமென வளர்ந்த சமர்த்தை நீகேளு
சோமனை தரித்த சுந்தரன் கிருபையால்
நாமவனான நன்மை சொல்வேனே. 46

சொல்லுவேன் அந்தச் சோதியாம் பதியும்
நல்லுறவாக நயம்பட நின்று
உள்ளும் புறமும் ஒடுங்கும் பசுபாசத்
தெள்ளிமை கண்டு தெரிவது வுண்மையே. 47

உண்மையாம் பசுவும் பாச மிரண்டும்
நன்மைய தாககாடும் பதியினை
திண்மைப் பசுவும்பாசந் தனைக்காணும்
வண்மையாம் பாசம் பசுவினை யறியா. 48

அறியாமல் பாச மறியவே வேண்டில்
நெறியான ஆசான் நேர்மையைக் கண்டிடும்
குறியாயவர் பதங் குணமுடன் வேண்டில்
பரியான பாசம் பசுதனை யறியுமே. 49

ஆமென்ப பாசம் பசுதனை யறியில்
தாமென்ப பசுவுந் தலைவனைக் காணும்
நாமெனத் தலைவனை நாடியே காணில்
ஓமென சித்துக ளொருகோடி சித்தியே. 50

சித்தி களான தேக முயிரைப்
பத்தியே காலனாப் பதவிகள் கண்டால்
முத்தியு மில்லை மோட்சமு மில்லை
சத்தியு மில்லைத் தண்மையு மில்லையே. 51

தன்மயமான தரு வஞ்செழுத்தின்
உண்மைகள் தன்னை யுரைக்கிறோங் கேளு
நன்மை அகாரம் நடுவெனத் தோன்றி
உண்மை ஏகாரம் நிலைத்திடு மென்மையே. 52

அண்டத்தில் விந்து அதிலோங் காரமாய்க்
கண்டத்தில் நின்ற கருணை யறிந்திலர்
பிண்டத்தில் மூன்றும் பெருமையினாலே
நின்றுத்த அஞ்சும் நேரெழுத்தாமே. 53

ஆமே அகார மமர்ந்திடுஞ் சிவமாந்
தாமே உகாரந் தன்னுயிராகிடும்
ஓமே ஓங்கார எழுத்து உடலாம்
நாமே வகுத்து நலமுரைத் தோமே. 54

உரைத்ததோர் பாதம் உண்மை வெளிப்பட
நிரைத்த கருவில் நிருணயஞ் சொல்வேன்
மரைத்ததோர் ரேசக மலரினில் பூரகம்
அரைத்தது கும்பக மமர்ந்ததுகாலே. 55

காலான வாறு கருவான மூலம்
மேலான வன்னி மெய்யான தீபம்
பாலான அப்பு பதிவான பூரணம்
சேலான போதஞ் சிவயோக மாமே. 56

## சிவயோகம்

சிவயோகியாக தீபச் சுடரொளித்
தவமா யிருந்து தன்னிலை கண்டால்
நவமான சிகாரம் நடுவானவீடு
அவமானமில்லா அனுக்கிரகம் பாரே. 57

பாரே நீ வாசிகைப் பஞ்சாட்சரநிலைக்
காரே அந்நிலையைக் கடைக்கண்ணு னிலையினால்
சேரே பிரமஞ் சிவபதந் தன்னிலே
கூரே வசியன் குண்டலிதன்மையே. 58

தன்மை யதான சதுரகிரி தனில்
உண்மையாய்ச் சென்று வசந்தமேல் திட்டினில்
நன்மையா மந்த நடுவாங் குகைதனில்
சின்மயமா மகத் தீசனைக் கண்டேனே. 59

கண்டே னகத்திற் கருணை தரித்திட
விண்டேன் கனந்தனில் வெருளிக ளெல்லாங்
கொண்டேன் குருவுங் குணமாய் மனந்தனில்
நின்றதோரெழுத்தும் நினைவுஞ்சொன்னாரே. 60

சொன்னார் கருவுஞ் சோடச முழுதுங்
கண்ணெ திரான காரணஞ் சொல்லி
முன்னோர்கள் செய்தமுறையையுஞ் சொல்லி
விண்ணாளுமென்று விதித் துரைத்தாரே. 61

உரைத்தார் வயித்தியம் உண்மையாம் வாதம்
நிறைத்தார் வசியம் நேரோடு அஞ்சனம்
மறைப்புடன் சரக்கு வைக்கு முறையும்
வரத்துடன் வாலைமவுனஞ் சொன்னாரே. 62

சொன்னார் கைபாகஞ் சொல்லி னிறைபாகம்
பண்ணார் கணக்கின் பாகமுஞ் சொல்லி
விண்ணாளு மென்று வேண்டினவரமுங்
கண்ணாரச் சொல்லி கருமச்சனென்றார். 63

மச்சேந் திரனேமன் பெருவாக்காய்
நிச்சயமாக நினைவை யறிந்தால்
அச்ச மகன்ற அருள்மா முனியே
வைத்த பொருளை மார்க்கமாய்க் கண்டிடே. 64

கண்டபொருளைக் காரண மாக
இன்று நான் சொன்ன எண்ணூறு மந்திரம்
விண்ட பொழுதினில் விபர மறிந்தபேர்
அண்டமும் பிண்டமு மறிபவர் தானே. 65

அறிவாகச் சொன்ன ஆதிநிகண்டு
நெறியாகக் கண்டுநேர் நிலைபெற்றோர்
திரிவார் மலைகள் தேசங்க டோறும்
குருவாய் நிறைந்த குணமறிவானே. 66

குணமா யிருந்துக் கூறினோஞ் சூத்திரம்
தனமாகக் கண்டு தானறிவோர்கள்
கனமான யோகங் கருதுவானப்பா
இனமாஞ் சுருக்க மெண்பதும் பாரே. 67

எண்பதுக் காதி எண்ணூறு மந்திரம்
தன்பதிவாகத் தானறி வோர்கள்
முன்பதி யான முதலா நடுமனை
உன்பதி வான வுடனறி வாலையே. 68

வாலை பூசை

வாலைதன் பூசை வழுத்துவோங் கேளு
காலமே நீயுங் கால்முகஞ் சுத்திசெய்
ஞானமாய்த் திருநீறு நயம்படப் பூசியே
சீலமாய் நீயுஞ் செபமது செய்யே. 69

செபமது செய்து சிவமான விந்துவைத்
தவமது வாகத் தன்னருள் போற்றி
நவமது வாசலா லீயெனவே
பவமது தீரப் பாத்திரம் வேண்டே. 70

பாத்திரம் வேண்டிப் பரமவெளி தனில்
நேத்திரந் தானா நின்னருள் கொண்டு
தோத்திரம் பண்ணி சுந்தரிபூசை செய்
மாத்திரைப் பொழுதினில் வருவாளதன் வாலையே 71

வாலையைக் கண்டு வணங்கி நீமைந்தா
காலையு மாலையுங் கருத்தாய் வணங்கினால்
ஆலைய மாகு மவனுருத் தானுங் 72
தாழ்வது மில்லைத் தவமதுவாமே.

தவமது வாக சாத்துவோங் கேளு
உவமான மில்லை யோங்கார வட்டத்துள்
சிவமான விந்துவைச் சிம்மென்று பூசைசெய் 73
நவமாந் திரேகம் நலச்சிவ யோகமே.

யோக நிலைமை யுறுஞ்சிவத்தியே
ஆகமமாக அறிந்துநீ பூசித்தால்
தேகஞ் சிவமாம் சிவமாஞ் சிவயோகம் 74
பாகமாய் நின்று பணிவது சித்தியே.

சித்தி வயிரவஞ் செப்புவேன் கேளு
முத்திக்கு வித்தா முதலாம் வயிரவம்
பத்துக் குள்ளாகப் பரம வெளிதனில் 75
புத்திக் குளாமென்று புனிதமாய் நின்றிடே.

நின்றிட வயிரவம் நேரே நிர்வாணவாய்க்
கண்டிடும் போதில் கருணை புரிந்திடு
சென்றிடு மந்த தெரிசின மாகிடும் 76
அண்ட மகனி லமர்ந்திட முத்தியே.

முத்திக் கொழுந்து முனைகொண்ட தீபம்
நித்திப் பிடிக்கும் பதிவான வாசியை
நித்தமும் நோக்கி நேர்நிலைக் கண்டால்
சித்தம் பெருகி சிவனவ னாமே. 77

ஆமே சிவன் தானறிவான் பூரணந்
தாமெனக் கண்டு தன்னருள் பத்தி
வாமமாய் நின்ற மதியை யறிந்தபின்
காமனை வென்ற கதிரவனாமே. 78

கல்லுப்பு

கதிரவன் முன்னே காமம் பெருகி
மதிதனைக் கண்டு மலரது பூத்துப்
பதிதனில் வளர்ந்துப் பாரினில் காரமாய்த்
ததிதனில் போற்றத் தன்மையின் சின்னமே. 79

சுன்னமாய் நின்ற சுரபூபதி தான்
தன்மையினாலே சதாசிவ மானார்
தன்மை பெருகி நாதமதனில்
உண்மையினாலே யுகந்திடும் நீறே. 80

நீறான அப்பு நிலையான வுப்பூ
சீறாகக் கூடி சிவமாக நின்று
கூறாக ரெண்டு மொன்றாகக் கூடிக்
காறான காரங் கல்லுப்பு மாச்சே. 81

முப்பூகுரு

உப்பான கல்லு வுவரான பூரணம்
அப்பான விந்து ஆதிராமயம்
செப்பாக போதஞ் சிவநாத விந்து
முப்பாம் வழலை முடிதனில் காணுமே. 82

காணுமே வழலைக் கயிலாச பூரணங்
தோணுமே அந்தத் தொடுகுறி போலவே
வீணல்ல அந்த் மெய்யான உப்புவை
ஆணவம் நீக்கி அந்துப்பு வேண்டுமே. 83

வேண்டுமோ நாத மெய்யான விந்துவும்
தூண்டுகோ லான துடியான கல்லுப்பு
ஆண்டுகொள் மூன்று மறைந்திடும் விந்துநீர்
வேண்டி யரைத்து மெய்யாக வட்டிடே. 84

வட்டது போலே வடிவா யுருச்செய்து
திட்டமாய் ரவியில் செம்மையாய்க் காய்ந்தபின்
வட்டம தோட்டில் வைத்திடும்பத் தெரு
திட்டமாய் நீதிசிவகுரு வாமே, 85

குருவான முப்பூக்கூட்டி முடித்திட
திருவான மாதுசெய்வது உண்டாம்
உருவாம் அருவதும் ஓடிஒடுங்கிடுங்
தருவான வைப்புச் சரக்குச் சொல்வேனே. 86

சீனவைப்பு

சொல்லுவேன் சீனந்தொடு குறிபோல
நல்லுறவா முப்புங் கல்லுப்பு ரெண்டும்
அல்லும் பழச்சாறாந்தயிர் விட்டுப
பல்லுறவாகப் பாண்டத்தில் மூடே. 87

மூடியே சீலைமண் முழுதுமே பூசி
நாடியே ஆவின் பதிதனில் தாக்கி
கூடியமண்டலங் குறிப்பாக வைத்து
நேடி யெடுக்கச் சீனமு மாச்சே. 88

ஆச்சடா சீன மதிசூடன் வைப்பு
நீச்சடா சொல்வோம் நினைவுடன் கேளு
பேச்சடா சீனும்வெடியுடன் ரெண்டும்
பாச்சடா மூலம் பதிவுடன் சேரே. 89

சேர்த்தே பிடித்துச் சிதம்பரம் பூட்டு
பார்த்தே பிடித்துப் பாண்ட மதிட்டு
காத்தே மண்டலங் கருவாகப் பூமியில்
ஆத்தி நீயெடுக்க ஆலாத்தி யாமே. 90

ஆமே நல்லுப்புங் கல்லுப்பும் ரெண்டுங்
தாமேபடிகங் தன்னொடு அண்டம்
நாமென உழுத்து நவமணிக் குண்டும்
வாமென மாவார் வகையுட னிடியே. 91

வெண்காரம்

இடித்துடன் பால்வார்த் தியல்புடம் கிண்டித்
தொடுத்துடன் பானையில் தோன்றியே மூடிக்
கடுந்துடன் மண்டலங் காத்து நீவாங்க
வடுத்தவெண்காரம் விளைவி துவாமே. 92

சாரம்

விளைவான காரம் விபர மதுகேள்
தளைவா மதுநீர் தன்னோடு நீறும்
வளைவாம் முரிமத கரிநீறுங்
குளைவா யொன்றாகக் கூட்டி நீசேரே' 93

சேர்ப்பது வெடியுஞ் சிவமான சுன்னமும்
கோத்தினோடே குழுறள றித்து
கார்த்திடு மண்டலங் கருவாய்ப் புதைத்தபின்
சார்த்திடுஞ் சரக்குச் சாரம தாமே. 94

துருசு

சாரமாந் துருசு தன்னொடு முறைமைகேள்
காரமதான கல்லுப்புத் தன்னீரை
வீரமா முலவிசையுடன் சேர்த்துப்
பாரமாந் தயிருப் பழமுட னீரே. 95

நீருட னுப்பு நிலையுடன் கூடிப்
பாருடன் செப்புப் பாத்திரந் தன்னிலே
நீருடன் சேர்த்து நினைவுடன் மண்டலம்
வாருட னெடுக்க வகையுடன் துருசே. 96

துருசு பாஷாணம்

துருசு பாஷாணஞ் சொல்வது கேளு
பரிசுடன் வெடியும் பச்சையுஞ் சீனமும்
தெரியுடன் சரியாய் நேர்ந்தது சூதங்
குறியுட னொன்றாய்க் கூட்டிநீ சேரே. 97

சேர்த்துப் பொடித்துத் திமிரக் கருவிடு
பார்த்துநீ பன்றி நெய்யது கூட்டி
வார்த்துப் பிசைந்து வட்டகை தனிலிடு
மாத்துரு வட்டகை மயங்காதே பூரமே. 98

பூரத்தினாலே பொடியு முடியும்
வாறொப்பாய் செய்து வைத்திடு மருந்ததில்
நேரொப்பாய் மூடி நேருடன் எடுத்திட
பாரொத்தக் கட்டிப் பாஷாண மாமே. 99

கெவுரி

ஆமே கெவுரி அதினுட முறைமைகேள்
தாமே வெடியுங் தன்னொடு நாகமும்
வாமென சூதம் வகையுடன் காரமும்
தாமே பொடித்துத் தான்பன்றி நெய்யே. 100

நெய்யுடன் மஞ்சள் கருவுடன் கிண்ணியில்
பையவே வைத்துப் பதிவாக மூடி
துய்யவே தீயில் சுழல வெரித்திட
அய்யனே மஞ்சள் கெவுரியாங் காணே. 101

வீரம்

காணவே வீரங் கருவுடன் சொல்லுவேன்
சீனமும் வெடியுஞ் சிறந்திடுஞ் சாரமும்
பேணவே கல்லுப்பும் பிலமான இந்துப்புந்
தோணவே துருசுந் துகைசரி கூட்டிடே. 102

கூட்டிடச் சரியிடைக் குருவாம் ரசமதை
மாட்டிப் பொடித்து மறவாபரை யெடுத்
தாட்டியே காசிக்குப்பி நடுவினில்
ஊட்டி மேல்சீலை யொன்பது செய்திடே. 103

செய்திடு பாண்டத் தியல்பாம் மணலிட்டு
கொய்திடு குப்பிகைக்குள் ளமைத்த தின்மேல்
மொய்திடு மணலை மூக்கள வாயிடு
எய்திடு அனலை யெரித்திடு சாமமே. 104

சாம மெரித்துத் தண்மையாய்க் குளிர்ந்தபின்
ஓமெனக் குப்பியை யுடைத்துக் கருவெடு
தாமெனக் கருவில் தன்னொடு ஆதியும்
வாமெனப் பாரையும் வாளன்பேதியோ. 105

பேதிக்க ஒன்றாய்ப் பெருக்கப் பொடித்திடு
வாதிக்கக் குப்பியில் வைத்துமுன் போலெரி
சாதிக்க ஆறுசாம மெரித்தபின்
ஆதிக்க வீர மசையாது வீரமே. 106

வீரமே செய்ய வேண்டினார் சித்தர்கள்
பாரமென் றெண்ணிப் பாடினார் முன்பின்னாய்
சராமாய்க் கொங்கணர் சாத்தினார் வீரமும்
ஆரு மறியா ரவன் பாடல் முத்தியே. 107

முத்தியா மச்சமுனிபாட லெண்ணூறும்
சித்தியாய்ப் பார்த்துத் தேறினான் கோங்கணன்
பத்தியு முத்தியும் பார்த்து பதவியில்
சித்தம் பெருகி சிலம்பு கண்டாரே. 108

கண்டதெண் ணூற்றுக் கருவான மந்திரங்
கொண்ட வர்மன்தில் குருமொழியாக
விண்டிடப் போகா விண்ணிடிதான் விழும்
சண்டனுக் கிரையாய்த் தான்மாளுவானே. 109

மாளுவான் பெண்ணின் மயக்கந் தன்னில்
ஆளுவான் மூட னவனுற வாகாக்
கோளுங் குடிலமுங் கூறுவான் மூடர்கள்
கால நிலையறியாக் கதைகள் சொல்வாரே. 110

சொல்லுவார் மூடர் துகளற மாட்டார்
நல்லவர் போல நலமொழி கூறி
கொல்லுவா னுயிரைக் கூத்துவன் போலே
தொல்லைகள் செய்து சுழலுவான் பாரே. 111

பாரதன் னுயிர்போல் பண்புடன் பாரார்
ஈரமற்றவர் போலிறைச்சிகள் தின்பார்
சாரமற்றவர் போல்பாதிப்பான் பூசையில்

நேருற்ற பூரணம் நிலையறி யார்களே. 112

நிலையா திருளில் நின்னரு ளென்று
வலையான மாய்கையில் மயங்கித் தவித்து
துலையாச் சுழியைத் துகுவம ரென்று
கலையான வாசியைக் கழிப்பான் கசடனே. 113

கசட னுறவைக் காட்டுகிறேன் மைந்தா
நிசமாப் பிரம்ம நிலையிது வென்று
கிரமாஞ் சுழியைக் கிருபையால் காட்டி
திரமா மிதுவெனச் செப்புவான் பாரே. 114

பாரினில் மாந்தர் பலவித மாகக்
கூருடன் சொல்லி குலைவல களிப்பான்
நேருடன் நிலையும் நிலையுட வழியுஞ்
சீருடன் மூலச் செயல றியானே. 115

அறியான் புருவ மதிநடு தீபம்
குறியான் வாசிக் குணம தறியான்
உருவான காயத் துண்மைப் பெருவெளி
திருவான மூலஞ் செயலி துவாமே. 116

செயலி துவான சித்திர நாடி
நயமுடன் சொல்வே னடுமுதுக தனில்
சுயமுடன் மூலச் சுடர துதோன்றி
இயல்புடன்பிடரியில் எய்திடும் பாரே. 117

பாரே பிடரி பதிவாம் பிடரியில்
நேரகத் தீசர் நிலையது வாகுஞ்
சாரதில் பிரமந் தன்னொளி வாகும்
பார்தில் நீயும் பரிபு ரணமே. 118

பூரண மாம்பரிபூரணந் தன்னை
கார்பு ருவமையாங் கருணை பெருவெளிப்
பார்குரு நாதன் பரவெளி யதனில்
சாரதில் தீபந் தன்னொளி காணே. 119

## லிங்கவைப்பு

தானான லிங்கந் தன்மையைக் கேளு
கோனான சூதங் குருவங்கம் ரெண்டும்
ஊனாக ஒன்றாய் உடன்சே ரதில்குரு
தேனான சீனஞ் சேரதில் பாதியே. 120

பாதியைச் சேர்த்துப் பதிவாய்ப் பொடிசெய்து
ஆதியாங் குப்பி யதிலிட் டெரித்திடே
நீதியாய் சாமம் நினைவா யெரித்திட
சோதிபோ லிங்கஞ் சுந்தர மாமே. 121

சுந்தர மாகித் துலங்கு மெண்ணூறும்
மந்திரந் தன்னை மகத்தான கொங்கணர்
தந்திரமாகத் தன்மனம் நோக்கி
அந்தரம் தன்னிலாதி கண்டானே. 122

ஆதிசரக்கு மறுபத்தி னாலும்
வாதிகள்மெச் சவைத்தனர் கொங்கணர்
நீதிகளோடே நினைவை யறிந்தால்
சோதித் துருவந் துலங்கு வதறிவே. 123

## சிங்கி வைப்பு

துலங்கிய சிங்கித் துலங்கு வேன்கேளு
நிலங்கரு நாகம் நீர்வெடி யுப்பு
திலங்குரு தீகமும் சீனமுங் கூட்டி
பலங்கரு வாகப் பதியுடன் பொடியே. 124

பொடிதனைக் குகையில் பொருந்தவே யிட்டு
அடிதனில் துளையிட் டதின்கீழ்க் குகைவைத்
திடமுடன் புடமதில் சென்றது வுருகி
வடித்திடும் படியில் குகையினில் தானே. 125

தானது எடுத்துத் தண்மையாய்ப் பார்த்தால்
தேனதி னிறமாய் சிங்கி யுமாகும்
ஆனதோர் சிங்கி ஆதி சரக்கது
கோனவ னருளால் குருமுறை பாரே. 126

பூரவைப்பு

முறையான பூர முடிக்கும் வகைகேள்
நிறையான பூரம் நேர்கொடி சீனம்
கறையான காரமுங் கணக்குச் சரியாய்
துறையாகக் கூட்டித் தோண அரைத்திடே. 127

அரைத்திடு சந்தனக் கிஷாயந் தன்னிலே
கரைத்திடு கூழ்போல் கலசந் தனிலிடு
நிறைத்த வால்மிளகுப் பொடியதில் சேர்த்து
திரத்துடன் பூமியில் சேரு மண்டலமே 128

மண்டலஞ் சென்று வகையுட னெடுத்தால்
கொண்டிடு பூரங் குருவாக நிற்கும்
அண்டர்கள் மெச்சு மாதி சரக்கிது
தொண்டர்கள் செய்யுந் துறையி துவாமே. 129

சாம்பிராணி வைப்பு

ஆமே சாம்பிராணி அதினுடை முறைமைகேள்
தாமே குங்கிலியந் தன்னோ டாக்கும்
வாமெனக் கருவாய் பட்டையுங் கூட்டு
நாமென இடித்து நன்றாய்ப் பொடித்திடே 130

பொடிதனை யெடுத்துப் போட்டிடு பானையில்
அடியுட னெய்யி லமர்த்திப் பிசைந்திடு
வடிவுட னடுப்பில் வைத்து எடுத்திடு
படிவுட னுருகும் பதந்தன்னைப் பார்த்திடே. 131

பார்த்திருந் தானபதிவா யுருகிடில்
மாத்திடும் பாயில் வளம்பெறச் சுண்டிடும்
போர்த்திடுங் கட்டி பிலமா யிறுகிடும்
சார்த்திடும் பேரு சாம்பிராணி தானே. 132

நாக வைப்பு

தானென் றநாகந் தன்மையைக் கேளு
கானென்ற வெள்ளி காரியஞ் சூதங்
கோனென்ற மூன்றுங் குணமா யுருக்கிநீ
பானென்ற கல்வம் பதமாய்ப் பொடித்திடே. 133

பொடித்திடு மருந்து போடும் விதங்கேள்
தடித்திடும் வெடியுந் தாளகங் கெந்தியும்
அடித்துடன் பொடித்து அமைத்திடு குகையினில்
நொடித்திட அடுப்பில் நோக்கி யெரித்திடே. 134

எரித்திடும் போதில் இதமா யுருகிடும்
குரித்து வுருகுங் குழம்பது தன்னை
வரித்திடு மச்சில் வார்த்திடு (சண்விழுங்)
தரித்திர மேது தன்னாகஞ் சித்தியே 135

சித்திக்கு மந்த செயமா மெண்ணூறும்
முத்திக்கு நல்ல மோட்ச ம்தாமே
புத்திக்குள் நின்ற பொருளது தோன்றுஞ்
சத்திய மாகத் தன்னருள் காரே. 136

கார்ப்பது மென்னூற் கண்மணி போலே
பார்ப்பது பதனம் பதன மதாக
சேர்ப்பது குகையில் திரமுடன் வைத்து
கூர்ப்புட னீயுங் குருவெனக் காரே. 137

காரு இந்நூலைக் கசடருக் கீயா
நேரெனப் பார்த்து நிலையறி வார்க்கீ
யாரவரெனிலு மமர்ந்து நீபேசு
சார்வது பிடரித் தன்சுழி முனையே. 138

முனையினில் தீபமுச்சுட ராகும்
மனைதனைக் கண்டு மகிழ்ந்துநீ பாரு
சுனையினில் நின்ற துருவத் திலேற்றி
அணைதனில் நின்று அருளது காரே. 139

### கார்வங்கம்

கார்வங்க ரசிதங் கருத்துடன் கேளு
வேர்வங் காரமும் வெடியுடன் தாளகம்
நேருட னொன்றாய் நிமித்திப் பொடிசெய்து
பாரத்தக் குகையில் பதியது எரித்திடே. 140

எரித்திடும் போதி லிளகி யிறுகிடும்
பதித்திடு வங்கா ரசித மென்றுங்
குறித்திடுஞ் சித்தர் கூட்டு வகையிது
வரித்த பொருளின் விபரமி தாமே. 141

தாமென வெள்ளி ரசித மிதுகேள்
நாமு னவின்ற நல்வெள்ளி ரசமும்
ஓமென கெந்தி ஒளிர்வங்கந் தாளகம்
ஆமெனக் கூட்டி அவிழ்த்துப் பொடித்திடே. 142

பொடிதனைக் குகையில் போதர வாயிடு
அடிதனில் தீயை அழுத்தி யெரித்திடப்
படிதனி லுருகிப் பக்குவ மாகுந்
திடமுட னாறிச் செம்மை யதாமே. 143

ரசிதம்

ஆமென வெள்ளி அமர்ந்திடும் ரசிதந்
தாமெனக் காணத் தன்னருள் வேணும்
நாமெனு நிலையும் நடுநிலைப் பார்த்தால்
ஓமென வந்த வுண்மை யிதாமே. 144

இங்குகாயம்

உண்மையா மிங்கு வுரைக்கிறோங் கேளு
நன்மையா உள்ளி நயமுடன் கடுகுஞ்
செம்மையாய்க் கூட்டி சேர்த்தரை மைபோல்
உண்மையாய் வெய்யிலில் உலர வைத்திடே. 145

உலர்த்திடும் வேப்பம் பட்டைத் தயிலம்
நலந்திகழாக நயமா யெடுத்திடு
செலந்தனில் சரக்கைச் சேர்த்துப் பிசைந்திடு
குலந்தனி லாதிக் கூட்டி யுருட்டிடே. 146

உருட்டியே பிங்கான் தாழியில் சேர்த்திடு
இருட்டினில் மண்டலம் இருத்தி யெடுத்திடக்
கருத்துடன் சமைத்து காரண மாகித்
திருத்தமாய்க் காயஞ் செம்மையாய் வீசுமே. 147

வீசுமே காயம் வீறுக ளேறிக்
கூசுமே நாசிக் குமுற வெரித்திடும்
வாசிகள் வீறை வாங்கித் தகட்டிடுந்
தேசுள்ள தேக வுறுதியே. 148

உறுதிகள் சொன்னோம் உவமை எண்ணூறும்
நெறியுடன் பார்த்து நேர் நிலைபெற்றோர்
கருவுடன் குருவுங் காரண மாகத்
திருவருள் பெற்ற சித்தமுமாமே. 149

## தொட்டி வைப்பு

சித்தாங் தொட்டி செப்புவேன் கேளு
பெத்திடும் வங்கம் போது ரெண்டும்
சுத்தி ரெசமுஞ் சுகமுடன் கூட்டி
சத்தமுங் கெந்தியுங் தானகஞ் சேரே. 150

சேர்த்திடுங் துருசுஞ் செம்மையாய் எழும்
பார்த்தொரு னிறையாய் படியப் பொடித்திடு
வார்த்திடு குகையில் வளமா யெரித்திடப்
பார்த்திடத் தொட்டிப் பாஷாண மானதே. 151

ஆமென எண்ணூ றடிமுடி பார்த்தால்
தாமெனத் தோன்றுங் தன்மை வெளிப்படும்
வாமென அந்த மதியா மமுர்தமும்
ஓமென மூல மொளிதருங் தீபமே. 152

தீபம தான சிவசத்தி ரூபமும்
தீபமாய் நின்றுதேகமுஞ் சித்தியாம்
தீபத்தில் மூலஞ்சென்றிட வாசியாம்
தீபஞ் சிவமாய் சென்றிடு யோகமே. 153

யோகத் துக்காதி ஒன்றான அட்சரம்
தேகத்துக் காதி சிவசத்தி மூலமாம்
யோகத்துக் காதி யென்னென்று சொல்லுவேன்
தாகத்துக் காதி தண்ணீரதிகமே. 154

### வெடியுப்பு

அதிக சரக்கு ஆதி யிலவணம்
மதியான ஊசரம் வடித்த நீர்காச்சி
நிதியான சம்பழ நீரதைத் தாக்கிடில்
விதியான கம்பி வெடியுப்பு மாச்சே. 155

உப்பான பூநீ றுரைக்கும் வகைகேள்
வெப்பாஞ் சவுடு வேண படியெடு
அப்பினில் போட்டு அலையக் கரைத்ததைக்
கொப்பமாய் ரவியில் கூர்மையாய்க்காச்சிடே. 156

காச்சிடப் பூவுங் கருவான பூநீறாம்
மாச்சிடப் பூநீர் வளமான சரக்குப்
பாச்சிட அந்தப் பதிவாகக் கட்டுண்ணும்
மூச்சிடப் போகா முனையான தீயென்னே. 157

### பூநீர் சவுக்காரம்

தீய சவுக்காரஞ் செப்புவேன் கேளு
மாயாதி பூநீர் வளர்வெடி சாரமும்
தோய வடிநீரில் சுண்டிடக் காச்சு
வாயுற எண்ணை வடித்து வுருட்டே. 158

உருட்டிய காரம் ஓம்சவுக் காரமாம்
மருட்டிடுஞ் சரக்கை வாட்டி யெரித்திடு
திருட்டுகள் பேசித் திரிகிற வாதியை
மெருட்டு மிக்காரம் வேதைகள் கோடியே. 159

### சாரலவணம்

கொடியான சார லவண மதுகேள்
நெடியான பூநீறும் நேர் கரியுப்பு
படியான தேசியில் பதமாய் எரித்திட
மடியாத சாரலவண மிதாமே. 160

சத்தி சாரம்

தாமெனச் சத்தி சார மதுகேள்
நாமென நீரில் நல்வெடுச் சாரமும்
ஆமெனப் பூவு மதுகரி யுப்புடன்
சாமெனக் காச்ச சத்திநல் சாரமே. 161

எவாச்சாரம்

சாரமா மெவாச் சார மதுகேள்
காரமாம் வெடியுங் கல்லுநீ ருப்புடன்
பாருடன் பூவும் பதமாய் அமுரியில்
நேருடன் காச்ச நிசமெவாச் சாரமே. 162

காசிச்சாரம்

நிசமான காசிச் சாரமது கேள்
வசமான பூநீர் வளர்வெடி நீருப்பு
திசமான எவாச்ச்ாரமுங் கூட்டியே
பசமான தேசியில் பதமா யெரித்திடே. 163

எரித்திடக் காச்சி யிதமான சாரமாங்
குறித்த சரக்கை குணமாகக் கட்டுண்ணும்
விரிச்சடையன் வேதாந்த சாரத்தைத்
தரித்த எண்ணூறில் தானவ னானதே. 164

ஏகபடிச்சாரம்

தானான ஏகச் சாரமது கேள்
வானாம் வெடியும் வளமான கல்லுங்
கோனாம முரிக்கொடிய நீருப்புடன்
தேனான காசிச்சாரமுஞ் சேர்த்திடே. 165

சேர்த்திடு ஆனைச் செலமிது தன்னிலே
பார்த்துக் கரைத்துப் பதமா யெரித்திடப்
பூத்துப் பொலிந்து பொன்றியே சுண்டிடும்
ஏத்திடுஞ் சரக்கு யேகபடிச் சாரமே. 166

### சீன லவணம்

சாரமாம் சீனம் லவண மதுகேள்
வாரமாம் பூநீர் வளர்கல்லு நீருப்பு
காரமாம் வெடிசரிக்காடி யிலெரித்திட
பாரமாஞ் சீன லவண மிதாமே. 167

### கெந்தி லவணம்

தாமென கெந்தி லவண மதுகேள்
ஆமென வெடியு மதினுட சாரமும்
நாமென வுப்பும் நலமான சீனமும்
வாமென அமுரியில் வளமா யெரித்திடே. 168

எரித்திட வுப்பு மிறுகிச் சிவந்திடுங்
தரித்த தோர்கெந்தி லவண மிதப்பாற்
குறித்த தோர்ரசமுங் குணமா யிறுகிடு
மரித்த ரசமு மகத்தான சித்தியே. 169

### இந்துப்பு

சித்திக்க வேண்டியே செப்புவே னிந்துப்பு
மூத்திரச் சீனமு முதலான கல்லுப்பும்
வெத்தி வெடியுடன் மேலான சாரமும்
சுத்த நீருப்புடன் சுகமாகக் கூட்டியே. 170

கூட்டிடுங் தேசி ஆவினீர் தன்னோடு
ஆட்டிக் கரைத்து அனலி லெரித்திட
நீட்டி யெரித்து நினைவா யிறக்கயில்
நாட்டியே பூநீர் நலமாய ரையிடே. 171

அரையிட்டு மூடி அனலில் வெதுப்பிட
இரையிட்ட வாயவை யிறக்குமிந் துப்புவரம்
துறையிட்ட நோயைத் துரத்தும் ஒடுக்கிடும்
நிறையிட்ட மாது நிர்ணய மாகுமே. 172

### சிந்துலவணம்

ஆகுமே சிந்து அதிக லவணம்
வாகுடன் சொல்வோ மகிழ்ந்து நீகேளு
பாகுடன் சாரம் படிகமாஞ் சீனம்
தாசமாம் வெடியுந் தனிப்பூ வழலையே. 173

வழலையோ டொன்றாய் வாகுடன் கூட்டி
நிழலை கண்டஞ்சு நீரதிற் கரைத்து
சுழல் படாமல் சுண்ட எரித்திட
சிலையொத்த சிந்து லவண மிதாமே. 174

### அட்டுப்பு

ஆமே அட்டுப்பு அன்புடன் சொல்வோம்
தாமென பூநீர் தனிவெடி சீனம்
நாமெனச் சாரம் நலமான இந்தும்
காமன்தன் னீரில் கணக்கா யெரித்திடே. 175

எரித்திடும் போது இயல்பதங் கண்டு
குறித்தநற் சட்டியில் குணமா யிறக்கிடு
சுரித்துட னாறிச் சுழன்றது கட்டியாம்
அரித்துட னுப்பு அட்டுப்பு மாமே. 176

### கல்லுப்பு

ஆமே கல்லுப்பு அன்புடன் சொல்வோம்
தாமே நீருப்புத் தன்னோடு சாரமும்
நாமே வெடியும் நலமான பூநீறும்
வாமமாங் தேசியில் மயங்க எரித்திடே. 177

மயங்க எரித்து வளமாகச் சுற்றினால்
தயங்கியே யுப்புத் தானங்கே கட்டிடுஞ்
செயல்கொண்ட வுப்புத் திருவான கல்லுப்பு
நயங்கொண்டு பார்த்தால் நாட்டங்கள் காணுமே. 178

சூடனுப்பு

நாட்டமாஞ் சூட னலமான உப்புகேள்
தாட்டிகமாம் வெடித் தன்னோடு சீனமும்
காட்டிய சாரங் கடியகல் லுப்புடன்
ஆட்டிய பூநீற தினிடைக் கூட்டிடே. 179

கூட்டிப் பொடித்துக் குருவான வாளைநீர்
நாட்டிக் கரைத்து நலமா யெரித்திட
பூட்டிய வுப்புப் புதுமையாய்க் கூட்டியே
சூட்டி யெடுக்கச் சூடனுப் பானதே. 180

சவுட்டுப்பு

உப்பான சவுட்டுப்பு வுறவா முறைகேள்
அப்பான பூநீறதி லிந்து காரமும்
வெப்பாம் வெடியும் வெண்சீன சாரமும்
செப்ப முடனே தேசியி னீரிடே. 181

தேசியி னீரில் சிறக்கக்கரைத் துப்பின்
மாசி யில்லாமல் வைத்து எரித்திட
நேசமாய் வற்றி நின்றதோ ருப்பது
வாசம் நிறைந்த வளர்சவுட் டுப்பிதே. 182

உப்புக்கட்டு

உப்பில் கட்டுப்பு வுகந்துநான் சொல்வேன்
செப்புங் கறியுப்பு சேரும் வெடியுப்பு
கொப்பான சீனங் கொடிய நவாச்சாரம்
அப்பான நீரி லடங்கக் கரைத்திடே. 183

கரைத்திட் டடுப்பில் கனலிட் டெரித்திட
விரைத்தது வுப்பு வெண்மையாய்க் கட்டுண்ணும்
நிரைத் திட்டமாக நின்றதோ ருப்பது
வுரைத்திடப் போகா உண்மை கட்டுப்பதே 184

உண்மையாய்க் காரசார முறைத் திட்டோம்
நன்மையாய்ப் பார்த்து நடுநிலை பத்தினால்
உண்மை பெருகி யோடுந்துறைக் கெல்லாந்
தண்மையாய் காரசார முறையிதே, 185

### வைப்புப் பாஷாணம்

முறையான வைப்புப் பாஷாணஞ் சொல்லுவேன்
நிறையாகக் கண்டு நின்னருள் பெற்றால்
துறையான வைப்புத் துலங்குமெண் ணூறில்
வரையாஞ் சரக்கு வைப்புச் சொல்வேனே. 186

### தொட்டிப் பாஷாணம்

சொல்லுவேன் தொட்டிப் பாஷாணந் தன்னை
வெள்ளி காரீயம் வெண்சாரை நாகமும்
துள்ளிய ரசமுந் தோய்வாகக் கூட்டியே
தெள்ளிய துருசுஞ் செய்சாரங் கூட்டிடே. 187

கூட்டிப் பொடித்துக் குகைதனி லுருக்கிட
நாட்டிய தொட்டி நலப்பா ஷாணமாம்
பூட்டிய பூட்டுப் புதுமைக் குருவாகும்
தாட்டிக மான சமத்தை அறிந்திடே. 188

### செம்புத் தொட்டி

அறிவான செம்புத் தொட்டி யதைக்கேளு
நெறியான நாகமும் நேரச வங்கமும்
குறியான லிங்கமுந் தாளகங் கூட்டியே
சரியாய்ப் பொடித்துச் சாத்திடுங் குகையிலே. 189

குகையை யெடுத்துக் கூர்மையாய்க் காய்ச்சிட
வகையுடன் சேர்த்து வளமா யிறுகிடுந்
தகையுடன் குகையில் தானது பார்க்கத்
தகையுடன் செம்புத் தொட்டியு மாமே. 190

அயத் தொட்டி

ஆமே அயத்தொட்டி அன்புடன் சொல்லுவேன்
தாமென வங்கமும் தன்னொடு நாகமும்
நாமெனச் சூதமும் நல்லதோர் கெந்தியும்
ஓமென லிங்கமும் உடன்தாரங் கூட்டியே. 191

தாரமுடனே சரக்கைப் பொடித் திட்டுக்
காரமாய்க் குகையில் கட்டி யுருக்கிட
சாரமா யுருகித் தன்னில் அடங்கிடும்
வாரமா மயத் தொட்டியு மாமே. 192

புத்துத்தொட்டி

ஆகுமே புத்துத் தொட்டி யதைக்கேள்
நாகம் வெள்வங்கமும் நயமான லிங்கமும்
பாகுடன் தாளகம் பதிவாம் வெடியுப்பு
வாகுடன் கூட்டி வகையாய்ப் பொடித்திடே. 193

பொடித்த பொடியைப் பொதுவாங் குகையினில்
வடித்த அனலில் வாகுட னுருக்கினால்
அடுத்து இறுகி அன்புடன் கட்டுமே
தொடுத்த தோர்புத்துத் தொட்டி யிதாச்சே. 194

ரெத்தசிங்கி

ஆச்சென்று ரெத்த சிங்கியைக் கேளு
வாச்சிடு துருசும் வளமான கெந்தியும்
மூச்செனத் தார முடிவான லிங்கங்
காச்செனக் காரம் கண்டிடைத் தூக்கிடே. 195

தூக்கிப் பொடித்துத் துருவான செம்பினில்
தாக்கியே முடித்து அனலிட் டெரித்திடு
பாக்கியம் போலே பதிவா யுருக்கிட
சிக்கிர மிரத்தச் சிங்கியுமாமே. 196

### ஏமசிங்கி

சிங்கியா மேம சிங்கியைக் கேளு
தங்கிய தாரந் தன்னோடு லிங்கம்
பொங்கிய கெந்திப் பொலிவான துருசு
மங்கிய கார்நாகம் வளரக் கூட்டிடே. 197

கூட்டிப் பொடித்துக் குருவாகச் செப்பினில்
நாட்டியே மூடி நயமா யெரித்திட
ஆட்டிய மருந்து அடைவா யுருகியே
பூட்டிய ஏமம் பொலிவான சிங்கியே. 198

### ரசிதசிங்கி

பொலிவா மிரசிதம் பொங்கிய சிங்கிகேள்
மலிவான தாரம் வளர்வீர துத்தமும்
தெளிவா மனோசிலை சிங்கியும் வெள்ளையும்
ஒளிவான பூரு மொன்றாய்ப் பொடித்திடே. 199

ஒன்றாய்ப் பொடித்து வுருவான வெங்கலம்
நன்றான செப்பினில் நயமாக மூடியே
குன்றாக தீயில் குணமா யெரித்திடப்
பன்றா மிரசித சிங்கியைப் பார்த்திடே. 200

### பாஷாணம்

பாருநீ உருகையில் பாஷாணந் தன்னையே
சீர்பெருங் கெந்தி திருவா மனோர்சிலை
கார்பெறு தாரங்க னத்த பாஷாணமும்
ஏர்பெறுந் துருசு ஏகாந்த வீரமே. 201

வீரத்துடனே விளங்கிய நாகமும்
பாருத்த ரசமும் பதிவாய்ப் பொடிசெய்து
நேரொத்தக் குடவ னேரந்தச் சிமிழிலே
சேரத் துவைத்துச் சிக்கென மூடியே. 202

மூடியே முழத்தில் முக்கியப் புடமிடு
வாடி யுருகி வளமையாய்க் கட்டும்பார்
நாடி யெடுக்க நலமணி யாகவே
பாடி நீமுறிவிலாப் பாஷாண மாகுமே. 203

கார்முகில் பாஷாணம்

ஆகுமே கார்முகி லப்பனே சொல்லுவேன்
நாகமும் வீரமும் நல்லபா ஷாணமும்
பாகுடன் லிங்கமும் பச்சையுங் கூட்டியே
வாகுடன் தாரமும் வரிசையாய்க் கூட்டிடே. 204

கூட்டிப் பொடித்துக் குகையா மயச்செப்பில்
நாட்டியே மூடி நயமாம் புடந்தனில்
வாட்டி யெடுக்க வளமா யுருகியே
ஆட்டிய கார்முகி லதிகபா ஷாணமே. 205

பாஷாண லிங்கம்

பாஷாண லிங்கம் பகருவேன் மக்களே
கூசாமல் வீரங் குருவா மனோசிலை
பேசாத வங்கம் பெரிதான கெந்தகம்
ஆசான துருசு அதில் ரசங்கூட்டிடே. 206

கூட்டிப் பொடித்துக் குப்பியில் தாக்கியே
ஆட்டி மண்சீலை அஞ்சரை தாக்கிடு
தீட்டிய தாழியில் செம் மணலிட்டு
மாட்டிடு தீயை வளரஞ்சு சாமமே. 207

சாம மெரித்துத் தானொரு குப்பியில்
ஏம நிறம்போலிருக்குநல் லிங்கமும்
தாமத மில்லை சதகோடி வேதையாம்
காமனை வென்ற கருணைக்கண் பார்த்திடே. 208

## வெள்ளைப் பாஷாணம்

பார்த்திடு வெள்ளைப் பாஷாணந் தன்னை
நீத்திடும் வெள்ளை நேரச தாளகஞ்
சாத்திடும் வீரஞ் சதிராம் வெடியுப்பு
ஆத்திடு மொன்றா யரைத்துப்பொடித்திடே. 209

பொடிகளைக் குப்பியில் போட்டுமண் சீலைசெய்
வடிவுள்ள தாழியில் வைத்து மணலிடு
சடிதியில் தீயைத் தாக்கினால் சாமமும்
முடிவாகக் காய்ந்தால் முத்துபோல் கட்டுமே. 210

கட்டி பிறுகி கனத்த பாஷாணமும்
திட்டமாய்க் குப்பியில் சேர்ந்து இறுகிடும்
வட்ட மதியென வளர்கயி லாசமும்
கிட்டங்கின் றேயதிற் கிருபையா மாதியே. 211

ஆதியாம் வெள்ளை யறிந்தவன் சித்தனாம்
சோதியில் நாதந் துலங்கு மவனிடம்
நீதியில் தீபம் நேர்நிலை யாகிடுங்
கோதிலா ஞானக் குருவரு ளாமே. 212

## கெவுரி

குருவாங் கெவுரி கூட்டிடும் வகைகேள்
திருவாம் வெள்ளை சிறந்திடு வீரமும்
உருவான நாகமு கந்திடுந் துள்ளியும்
தருவான பச்சையுந் தன்னோடு தாரமே. 213

தாரமோ டொன்றாய் தகர்த்து பொடித்திடு
பூரமாஞ் செப்பு அகலி லடக்கியே
சாரமாய் மூடியே சாதகு மண்சீலைதான்

ஆரமாஞ் சட்டியில் கடுக யெரித்திடே. 214

மரித்த பதந்தா னெள்ளும் பொரிந்திடு
குறித்த பதத்தினில் குணமா யிறக்கியே
தரித்த மருந்துநீ தன்மையாய்க் கட்டியே
பறித்த கெவுரிப் பாஷாண் மாகுமே. 215

வீரம்

ஆகுமே வீரத் தடவுகள் சொல்லுவேன்
வாகுடன் வெள்ளை வார்சிலை லிங்கமும்
பாகுடன் பச்சையும் பாங்கான கெந்தியுந்
தாகமாய் வெட்டியுந் தன்னொடு சாரமே. 216

சாரமுங் காரமுந் தன்னோடு காரமும்
ஓரிடை சூர் முருகப் பொடித்திடு
நேரிடு காசி நிலைத்த நல்குப்பியில்
வாரி செலுத்தி வகையுடன் மண்ணிடே. 217

மண்ணிடு தாழியில் வைத்து எரித்திடு
உன்னி யுருகி யுறைந்திடுங் கட்டிபோல்
வன்னி நிறைந்து வளர்சாமம் நாலினில்
தன்னிமை யாகத் தானதை யெடுத்திடே. 218

எடுத்திடு குப்பி யிதமாய்க் குளுந்தபின்
விடுத்ததைப் பாரு வெண்மதியாகிடும்
அடுத்த சரக்கு ஆதி குருவிதாம்
படுத்ததோர் வீரம் பாஷாண மானதே. 219

கோழித் தலைக் கெந்தி

ஆனதோர் கோழி அதிக நல்லகெந்தியை
பூணவே சொல்வதைப் புத்தியாய்க் கேளு
தோணவே தாரந்தொடு சிலை பச்சையும்
பூணவே தும் புகழ்வெள்ளை லிங்கமே. 220

லிங்கமும் வீரமும் நேர்சம னாகமும்
சங்கையா யெடுத்துத் தானிடு குப்பியில்
அங்கம தாக அமர்ந்திடுந் தாழியில்
சங்கை யுடனே தாக்கி யெரித்திடே. 221

எரித்திடு சாம மியல்பா யெரிந்தபின்
குறித்த சரக்குக் குணமாகக் கட்டுண்ணும்
பரித்திடுங் குப்பியைப் பதமா யுடைத்தெடு
தரித்திடுங் கோழித்தலைக் கெந்தி யானதே. 222

சுரைக்காய் கெந்தி

கெந்தி சுரைக்காய் கெந்தியைக் கேளு
அந்தங் துருசு ஆனதோர் துத்தமும்
வந்திடு நாகம் வளர்ரச வீரமும்
பந்திட லிங்கமும்பாஷாண மானதே. 223

தாரமொடு சிலைசத்தியுங் கூட்டியே
வீரமா மொன்றாய் வேண்டிப் பொடித்திடு
சாரமாங் குப்பியில் தானிட் டெரித்திடு
காரமா யொன்றாய்க் கட்டி யுருகுமே. 224

கட்டி யுருகிக் கனகம் போல் நின்றிடுஞ்
சட்டமாய் குப்பியை தகர்த்து எடுத்திடு
நட்டம் வராது நாரணி சத்துகள்
தட்டில்லா சுரைக்காய் கெந்தியுந் தானே. 225

பவளப்புத்து

தானாம் பவளப் புத்து சமத்துகேள்
தோனான கெந்தி பங்கொடுஞ் சிலைதாரமும்
பூணாத பச்சையும் புகழ் ரச நாகமும்
காணாத வீரமுங் கடுலிங்க சாரமே. 226

சாரமோ டொன்றாய் சதிராய் பொடித்திடு
காரமாங் காசிக் கருவான குப்பியில்
பாரமே யேற்றிப் பதியா மண்சீலைசெய்
வீரமாய் தாழியில் விட்டு மண்ணிடே. 227

மண்ணிட் டடுப்பில் வளமாய் எரித்திடு
விண்ணிட் டுப்போனால் கெந்திடு மேனிகள்
கண்ணிட்டு மவுனக் கருவா யெரித்திடு
தண்ணிட்டுநாலு சாமங் தணலிடே. 228

தணலிட் டெரித்துச் சதிராய் குளிர்ந்தபின்
மனதுற் றுக்குப்பியை வாகா யுடைத்திடு
புனலொத்து நின்ற புதுமை பவளம்போல்
பனரொத்து நின்ற பவள பாஷாணமே. 229

சிங்கிபாஷாணம்

பாஷாண மான பதிவா மரிதாரம்
ஆசாரமாக அருளுவோ மின்னங்கேள்
கூசாத பச்சைக் குழிவான லிங்கமும்
பேசாத வெள்ளையும் பெரிதான வீரமே. 230

வீரமும் நாகமும் மேல்சிலை தாரமும்
காரமுஞ் சாரமும் கதித்திடுஞ் சூதமும்
பாரமா யொன்றாய்ப் படியப் பொடிசெய்து
சாரமாங் குப்பியில் தானிட்டு மண்ணிடே. 231

மண்ணது பூசி வளமான தாழியில்
நண்ணயமாக நடுவி லிருத்தியே
பண்ணிடு தாழியில் பதிவா மணலிட்டு
எண்ணியே நாலுசாம மெரித்திடே. 232

எரித்திட் டெடுத்து இதமாய்க் குளிர்ந்தபின்
குறித்திட்ட நேகங் குருவை வணங்கிடு
மரித்திட்ட குப்பியை வாகா யுடைத்திடு
பரித்திட்ட தாரப் பாஷாண சிங்கியே. 233

கோடாசுரி பாஷாணம்

சிங்கி கோடாசுரி பாஷாணஞ் சொல்லுவேன்
தங்கிய வீரமுந் தன்னொடு நாகமும்
பொங்கிய பச்சையும் பொது ரச லிங்கமும்
அங்க மனோசிலை அரிதாரங் கூட்டிடே. 234

கூட்டிடுங் கெந்தியுங் குருவான வெள்ளையுந்
தாட்டிக மாகச்சதிராய்ப் பொடித்திடு
காட்டிடு செப்புக் குப்பி நடுவிலே
போட்டிடு சீலைப் பொருந்தேழு செய்திடே. 235

செய்திடுந் தாழி சிறப்பொடு நடுவினில்
வைதிடுங் குப்பியை வாகாய் மணலிட்டு
எய்திட் டெடுத்து இயல்பா யறுசாமங்
கொய்திடு அனலைக் குறுக எரித்திடே. 236

எரித்திடும் தாழி யியல்பாய்க் குளிர்ந்தபின்
விரித்திடு குப்பியை வேண்டி யெடுத்திடு
குறித்த கோடாசுரி குணமாய்ச் சிவந்துதான்
தரித்ததோர் வேதைக்குத் தானவ் னாகுமே. 237

பஞ்சபட்சி சரக்கு

தானவனான தரும்பஞ்ச பட்சியை
கோனவன் தன்னால் குறிப்புடன் சொல்லுவேன்
ஆன பூரகமும் அப்பினில் ரசமும்
வானவர் போற்ற மகாரசங் கூட்டிடே. 238

கூட்டிய ரசமுங் குருபச்சை வெள்ளையுந்
தாட்டிக மான தளைவாய் மனோசிலை
நாட்டிய வீரம் நலமான லிங்கமும்
மட்டி யொன்றாக மடியப் பொடித்திடே. 239

பொடித்திடு மருந்தைப் போட்டிடு குப்பியில்
தொடுத்திடு சீலை சுருக்கமா யேழு செய்
விடுததிடு தாழியில் வேண்டி மணலிட்டு
கொடுத்திடு தீய்தான் குறுக்காறு சாமமே. 240

சாமமே மெத்தத் தணலாறி நின்றபின்
ஆமெனக் குப்பியை அடைவா யுடைத்தெடு
நாமென நின்ற நடுபஞ்ச பட்சிதான்
காமனை வென்ற கடுந்தீயு மானதே. 241

குங்குமப்பாஷாணம்

தீயான குங்குமப் பாஷாணஞ் சொல்லுவேன்
மாயான கெந்தியு மனோசிலை தாரமும்
தாயான பச்சைத் தருலிங்க வீரமும்
காயாத வெள்ளைக்கடுந்துத்தஞ் சாரமே. 242

சாரமாம் நாகந்தனில் கருவங்கமும்
பாரமாய்க் கூட்டிப் படியப் பொடித்திடு
காரமாம் நீரில் கடுகப் பிசறியே
வாரமாங் குப்பியில் வாரி யடைத்திடே. 243

அடைத்திடு குப்பிக்கஞ்சு மண்சீலைசெய்
உடைத்திடாத் தாழியிலூ ன்றிமணலிடு
களத்தினில் அக்கினி காரணமாக
திட்டப்பட அஞ்சுசாம மெரித்திடே. 244

எரித்திடு தாழி யியல்பாய்க் குளிர்ந்தபின்
குறித்திடு குப்பியைக் குணமா யுடைத்திடு
தரித்திடும் மஞ்சள் தன்னிறம் போலவே
பரிந்திடுங் குங்குமப் பாஷாண மானதே. 245

இரத்த பாஷாணம்

ஆனதோ ரிரத்தபாஷாணம் ஆண்மைகேள்
பேணு மனோசிலை பெரிதான சிங்கியும்
வானவர் சூதம் வளரவிர் நாகமும்
காணவே லிங்கங் கடிதான கெந்தியே. 246

கெந்தகம் பச்சை கெம்பீர வெள்ளையும்
பந்தம தாகப்படியப் பொடித்திடு
அந்த மயந்தி னரிதான குப்பியில்
சொந்தமா யிட்டு சுற்றேழு சீலையே. 247

சீலைமண் செய்து சிறப்பாகத் தாழியில்
ஆலயமாக அமர்த்தி மணலிடு
வாலையைப் போற்றி வைத்திடு சூளையில்
கோளைகள் நீங்கிக் குணமா யுருகுமே. 248

உருகித் திரண்டு வுருமையாய்க் கட்டுண்ணும்
தருகி மறுநாள் தான தெடுத்திடு
மருவிக் குப்பியை வளமா யுடைத்திட
கருகிய ரத்தப் பாஷாண சக்தியே. 249

கோமுகப்பாஷாணம்

சத்தான கோமுகத் தன்மைதனைக்கேளு
வித்தான வீரம் விளங்கு மனோசிலை
முத்தான வெள்ளை முழுநீலந் தாரமுஞ்
சுத்தான லிங்கமுஞ் தூரமுநாகமே. 250

நாகமுங் கெந்தியும் நயமாகக் கூட்டியே
பாகமா யொன்றாய்ப் பதியப் பொடித்திடு
ஆகமாச் செப்பு அகலிலடக்கியே
தாகமாந் தாழியில் தனித்து மணலிடே. 251

மண்ணிட்டு தாழியை வளமா யடுப்பினில்
கண்ணிட்டுப் பார்த்துக் கருக வெரித்திடு
விண்ணொத்து நின்ற வேதனைப் போற்றியே
பண்ணா திறக்கிப் பதிவா யெடுத்திடே. 252

எடுத்திடு செப்பை இதமா யுடைத்திடு
கடுத்த சரக்குக் கனமா யுருகியே
தொடுத்ததோர் கட்டியாய் தோன்ற விருத்திடும்
படுத்த கோமுகப் பாஷாணப் பண்பிதே. 253

துருசுப்பாஷாணம்

பண்பாத் துருசுப் பாஷாணஞ் சொல்லுவேன்
நண்பான லிங்கம் நாக ரசமுடன்
வெண்பாத பச்சையும் வெள்ளையுந் தாரமும்
நண்பான வீரமும் நல்ல கெவுரியே. 254

கெவுரியோ டொன்றாய் கெணிதமாய் கூட்டியே
சவுரிய மாகத் தகர்த்துப் பொடிசெய்து
கவுரிய செப்புக் கலசந் தனிலிடு
பவுரிய பாண்டத்தில் பதித்து மணலிடே. 255

மணலிட்டு செம்மி மதியைத் தொழுதுபின்
கனலிட் டடுப்பில் கதிக்க வெரித்திடு
கணலிட்டு நாலு சாம மெரிந்தபின்
அனலிட் டிறக்கி ஆக்கி யெடுத்திடே. 256

எடுத்த கலச மியல்பா யுடைத்திட
கொடுத்த மருந்து துருவமாய்க் கட்டியே
அடுத்த துருசு மதிநிற மாக்கிடும்
படுத்த துருசுப் பச்சைப் பாஷாணமே. 257

துத்த பாஷாணம்

பச்சை யாந் துந்தப் பாஷாணஞ் செய்கைகேள்
இச்சை துருசு இதின்ரசங் கெந்தகம்
கொச்சை மனோசிலைக் கூர்வெள்ளை தாரமும்
நிச்செய வீரம் நேரான லிங்கமே. 258

லிங்கமுடன் துத்தம்நேராய் பொடிசெய்து
அங்கமாய் நாகமரிதான குப்பியில்
சங்கையுடனே சமர்த்தாய்ப் பொடித்திட்டு
தங்க நற்குப்பிக்கு சமத்தாய் செம்மணலிடே. 259

செம் மணலிட்டு சேருள்ள குப்பியை
தன்மய செப்புத் தாழி தனிலிடு
நன்மைய தாயனல் நன்றா யெரித்திடு
உண்மை நாலுசாமம் உகந்துஎரித்திடே. 260

எரிந்த் பதந்தானெள்நெல் பொரிந்திடும்
தெளிந்து இறக்கி சீராய் குளிர்ந்தபின்
அறிந்து நல்குப்பியை அன்பாய்எடுத்திடு
மருந்துடன் குப்பியும் வாகாயொன் றாகுமே. 261

ஒன்றாகக் கூட்டியுருகத் திரண்டிடும்
நன்றாக நீயும் நயமா யெடுத்திடு
குன்றாக சத்துக் குருவி தும்மகளே
பன்றான துத்தப் பாஷாண வித்தையே. 262

## ரசிதப் பாஷாணம்

வித்தான ரசிதப்பாஷாணஞ் சொல்லுவேன்
பத்தானவெள்ளைத் துலங்கும்ரசமுடன்
சுத்தான வீரமும் பாஷாணந் தாரமும்
முத்தாமனோசிலை முழுநீலம்பச்சையே. 263

பச்சையும் பாகமும் பதிவான காரமும்
இச்சையாக் கூட்டி யிசையப் பொடித்திடு
நிச்சயமாக நேர்வெள்ளிக் குப்பியில்
உச்சிதமாக வூட்டி யடைத்திடே. 264

அடைத்திடு குப்பி அயமான பாண்டத்தில்
திடத்துடன்வைத்து செம்மிமணலிடு
படைத்திடுஞ் சத்தியைப் பண்பாகப் பூசித்து
கடத்தினி லக்கினிக் கருவா யெரித்திடே. 265

எரித்திடுஞ் சாமம் ஈராறு கூட்டியே
துரித்த அனல்போல் துலங்க வெரித்திடு
குறித்த சரக்குங் குப்பியுங் கூட்டியே
தரித்த மெழுகு போல்தானே யுருகுமே. 266

உருகித்தி ரண்டு ஒடுங்கி யிருத்திடுங்
தருகியே பாண்டந் தானே குளிர்ந்தபின்
மறுகி யிராதே மனதா எடுத்திடு
பருகி ரசிதப் பாஷாணச் சிங்கியே. 267

## சூதபாஷாணம்

சிங்கியாஞ் சூத பாஷாணஞ் சொல்லுவேன்
தங்கிய சூதமுந் தாரமும் வீரமும்
பொங்கிய கெந்தியும் பொற்சிலை பச்சையும்
லிங்கமும் வெள்ளையும் நேரான்காரமே. 268

காரமோடொன் றாய் கதிக்கப்பொடி செய்து
சீர்கார் வங்கச் சிமிழி லடக்கியே
நேர்பெரு ஞ்சட்டியில் நிறுத்து மணலிட்டு
கூர்பெரு நாதனைக் குறித் தடுப் பேற்றிடே. 269

ஏற்றியே தீபமீராறு சாமந்தான்
காத்திருந் தெரித்திடு கடுங்கனல் தாவவே
சேர்த்த மருந்துஞ் சிமிழி முறுகிடும்
வாத்தி யிறக்கி வரிசையாய்ப் பார்த்திடே. 270

பார்த்திடு ம்போது படிகம் போல்கட்டியே
நேர்த்தியதாக நிலைக்குமருந்து
போற்றியே பாரு புதுமைகள் கண்டிடுஞ்
சாற்றிய சூதபாஷாணஞ் சித்தியே. 271

### கெந்திப்பாஷாணம்

சித்தியாஞ் கெந்திப் பாஷாணத் தன்மைகேள்
முத்தியு வெள்ளையு மு துவீர பச்சையுஞ்
சத்திய மனோசிலை சிவ துத்தநாகமும்
பத்திய கெந்தமும் பரமான லிங்கமே. 272

விஞ்சும் ரசமுடனே சரிக் கூட்டியே
அங்கமதாக அழுத்திப் பொடித்திடு
சங்கை யுடனே தாம்பிரக் குப்பியில்
உங்கக் கொடுத்து உறுதி மண் சீலையே 273

சீலை வலுவாய் சிமத்து மண் தாழியில்
ஆலையுமாக அமர்த்தி மணலிடு
வாலையைப் போற்றி வைத்து நல்தீயெரித்
தூளுமுருகித் துவள இறுகுமே. 274

இறுகுமே ஆறுசாமம் இயல்புடன்
மறுகி யிறக்கி மறுநாளெ டுத்திடு
குறுகிய குப்பியைக் குணமா யுடைத்திடு
திருகிய கெந்திப் பாஷாணஞ் செம்மையே. 275

நீலிப்பாஷாணம்

செம்மையாம் நீலிப் பாஷாணஞ் சொல்லுவேன்
உம்மை கெவுரியுடன் லிங்க வீரமும்
வண்மைய கெந்தி வளர்சீலை தாரமும்
நன்மைய சூதமும் நாகமுங் கூட்டியே. 276

கூட்டிக் குமுறக் குழையப் பொடித்திடு
போட்டிடு குப்பியில் பொருந்த மணலிடு
நாட்டிடு தாழியில் நல்மணல் கொட்டியே
மாட்டிநீ தீயை மயங்க வெரித்திடே 277

எரித்திட சாம மிரண்டரை தனிலே
குறித்த சரக்குங் குறுகவே கட்டுண்ணும்
எரித்த அனலு மிதமாய்க் குளிர்ந்தபின்
தரித்த நல்குப்பியைத் தகர்த்து எடுத்திடே. 278

எடுத்திடு கட்டியை யின்பங் குளிரவே
கொடுத்திடு லோகங் குமுறப் பழுத்திடும்
தொடுத்திடும் பூசையைச் சுந்தரம் போலவே
முடித்திடுஞ் சோதி முழுநீல வர்ணமே. 279

வர்ணம் நிறைந்த வாசியைப் போற்றியே
தருணம தாகித் தன்னிலை பற்றிடு
சொர்ணமதால் சோதனைகண்டபின்

சரணம தென்று நீ தாளிணைப் பூசியே. 280

### காகபாஷாணம்

பூசிய காகம் புனைந்த பாஷாணம்
பேசுவே னன்றாய்ப் பிரியமாய்க் கேளுங்கள்
வீசிய கெந்தம் விரிந்த மனோசிலை
மாசில்லா வீரம்வடி வெள்ளை தாரமே. 281

தாரமுஞ்சூத முந்தன்னாகமும்பச்சையும்
பாரமாய்க்கூட்டிப் பதியப் பொடித்திடு
காரமாயயச் செப்பிலடக்கியே
சாரமாய்ச் சட்டி தனி லிட்டெரித்திடே. 282

எரிப்பது நாலுசாம மெரித்தபின்
குறிப்புடன் சட்டிகுளுறவெடுத்திடு
தரிப்புட னயச் செம்பைத் தகர்த்திட
கருப்புள்ள காக பாஷாணமாகுமே. 283

### கருணை பாஷாணம்

காணவே சொர்னக் கருணைப் பாஷாணத்தை
பூணவேசொல்வோம் புத்தியாய்க்கேளுங்கள்
தோணவே லிங்க முந்தொடு சிலை தாரமும்
பேணவேசூதமும் பெரிதானநாகமே. 284

நாகமும் வீரமும் நலமானகாரமும்
பாகமா யொன்றாய்ப் படியப் பொடித்திடு
ஆகமாங் தங்க மகலி லடக்கியே
வேகமாய்த் தாழியில் விடுத்து மணலிட்டிடே. 285

மண்ணிட் ட மர்த்தி வாயை யடுப்பினில்
கண்ணிட்டு நோக்கிக் கதிக்க எரித்திடு
தன்னொத்து நின்ற சரக்குடன் தங்கமும்
ஒண்ணொத்துக் கூடி [illegible] இறுகுமே. 286

இறுகி மணிபோ லிருக்கும் பரியது
மறுகிய லோகத்தில் மாட்டிடத் தங்கமாம்
உருகியகல் மணியொன் றான பூரணம்
தருகிய சொர்னப் பாஷாண தங்கமே. 287

லவண பாஷாணம்

தங்க லவண முகிலான சத்துகேள்
பொங்கிய காரமும் புகழான சாரமும்
தங்கிய வீரமுந் தருவான பூரமும்
அங்க மனோசிலை அரிதான சூதமே. 288

சூதமும் லிங்கமுந் துடியான வெடியுடன்
நீதமாய்க் கூட்டி நிறுத்துப் பொடித்திடு
பாதமாங் குப்பியில் பதித்துமண் சீலைசெய்
சீதமண் தாழியில் செலுத்திமண் செம்மிடே. 289

செம்மி மணலிட்டு சீரா யடுப்பினில்
கம்மி யிராமல் கதிக்க அனலிடு
வெம்மி முச்சாமம் வெந்து இறுகிடும்
கொம்மயக் குப்பியைக் குணமா யெடுத்திடே. 290

எடுத்திடு குப்பியுமி ளகியுருகியே
தொடுத்திடுங் கட்டியாய்ச் சுருங்கி யிறுகிடும்
அடுத்திடும் வேதைக்கு ஆதி மயமிது
படுத்த லவணப் பாஷாண சுன்னமே. 291

நாக பாஷாணம்

சுன்னம்நாகந் துலங்கும் பாஷா ணத்தை
திண்ணமாய்க் கேளுஞ்சிவ மான சூதமுங்
கன்னான லிங்கமுங் கார்வங்கப் பச்சையும்
பொன்னான காரமும் போட்டாலுங் காரமே. 292

காரமோடொன் றாய்க்கடுகப் பொடித்திடு
பாரமாங் குகையில் பதித்து மேல்மூடியே
காரமண் சீலை சமமாய்ப் பொதிந்தபின்
சீராய கெசப்புடம் செய்கனல் மூட்டிடே. 293

முட்டியனலது முதிரத்த ளர்ந்தபின்
நாட்டுங் குகையை நயமாயு டைத்தெடு
பூட்டு மருந்தது யொன்றி யுருகியே
வாட்டிய ஈயம்போல் வலித்து இறுகுமே. 294

இறுகி மணி போலிருந் திடுங்கட்டி தான்
பருகிய நாகப் பாஷாண மானது
சொருகிடு லோகங் தோன்றப் பழுத்திடும்
குருவுரை கண்தான் கூட்டி முடித்திடே. 295

முடித்த பாஷாணம் முப்பத்தி ரண்டுமே
வடித்த மிளகுபோல வைக்குமுறை சொன்னேன்
அடுத்த முறையிது ஆருமொழிந் திலார்
எடுத்த முடிவிது எண்ணூறும் பார்த்திடே. 296

எண்ணூறும் பார்த்தவர்க் கிடரும் வினையில்லை
தண்ணூற் றிந்து தானே துலங்கிடும்
கண்ணூர் திறந்து நற்பூரத் தீபமாம்
விண்ணூர் மடபதி மெய்யான தேசியே. 297

தேசிகன் சொன்ன சிவஞான போதகம்
நேசம தாக நினைவி லறிந்த பின்
வாசிதன் னொளிபோல் வுன்னித்தே வெண்ணுறு

பேசிய மந்திரம் பெரிதாம் பொருளிதே. 298

பொருளிது வென்று போற்றினார் சித்தர்கள்
திருவன மந்திரஞ் செகத்தி லறிந்தால்
உரிதான் மானிட ருறுதி தப்பியே
தருவா நிலைதனைச் சாரார் பாவியே. 299

பாவிபல நூல் படித்துப்பலந் தன்னைத்
தாவி யறியாமல் சளப்பட் டுருளுவான்
கூவிய சொல்லைக் குறியாய் மதியாமல்
ஆவிபதறி ஆசிப்பான் கோவியே. 300

கோவில்கள் சென்று கொலவல தழிப்பான்
தாவிதமான சமய மறிந்திலான்
நாவிபொருளை நலமென் றுணர்ந்திடான்
தூவிய தீபந் துலங்காத் துரோகியே. 301

துலங்கும் வழியைச் சொல்லுவேன் சுந்தரா
நலங்கொண்டு மூல நடுவைப் பிடித்திடு
மலங்கொண்டு அந்த மதியை யிறக்கியே
தலங்கொண்ட பூரணந் தானது நந்தியே. 302

நந்திக் கொழுந்து நடுவான மூச்சுடர்
உந்திக்கு கீழே யொளிகொண்ட வெண்மதி
அந்திக்கு முத்தி அறிவான் பூரணம்
சிந்தித்து வாசியைத் தீபத்தில் வைத்திடே. 303

வைப்புச் சரக்கு வகையுடன் சொன்னேன்
தப்பு வராமல் தானவை யறிந்திடு
அப்பினி லுப்பு அமர்ந்திடும் வாறுபோல்
செப்பிய மந்திரஞ் சேரவுஞ் சித்தியே. 304

பாஷாணத்தின் பெயர்

சித்தி யதாகச் சிறந்து பிறந்திடும்
முத்திச் சரக்கின் முறைமை சொல்லுகிறேன்
அத்திநற் கடகம் அறிவான கோளகம்
வெத்திய தாரம் விசையான சூதமே. 305

சூதான கெந்தித் துடிவீர பாஷாணம்
வாதயக் காந்தம் வடித்த பாஷாணம்
சீதம ரார்தம் சீர்ப்பந்த பாஷாணம்
தேயயத் தொட்டிக் குதிரைப் பாஷாணமே. 306

பாஷாணஞ் சங்கமாம் பகுத்த கெவுரி
பாஷாண துத்தம் அயக்காந்த பாஷாணம்
கோசாம லண்டருக் கொடி லிங்கபாஷாணம்
தாக்கம் ரெண்டாங் தாளக மெண்ணுமே. 307

எண்ணு மனோசிலை யெகாவின் பல்லோடு
கண்ணுங் காலாங்கிக் கற்பறி அஞ்சனம்
விண்ணுங் கச்சாலம் வீரசி தங்கமாம்
சின்ன கார்முகில் சிலாமத மென்னுமே. 308

என்னுமப் பிரகம் ஏகாந்த வெள்ளையுஞ்
சொன்ன தெண்ணான்கும் சுகமாய்ப் பிறந்தது
தன்னருள் தன்னால் தனித்த பாஷாணத்தை
உன்னியே பார்த்து வுறுதியாய்க் கண்டிடே. 309

உறுதி யெட்டெட்டு வுகந்த பாஷாணத்தில்
சுருதியாய் வைப்பில் சொன்ன எண்ணான்குதான்
குருமுறை தானென்று குவிந்து மனங்களில்
பெருமை எண்ணூறைப் பேணிப் பணிந்திடே. 310

பேணிப் பணிந்து பிலமாக நின்றிடு
ஆணிப் பொன்மாற்று அதிக தெரிசனங்
காணிக்கை கொண்டு கடல்மலை யோடினும்
ஏணித் துருவம் போலெண் ணூறுகிட்டுமே. 311

எண்ணூறு மந்திர மிருளை யகற்றிடும்
எண்ணூறு மந்திர மேகநிரா மயம்
எண்ணூறு மந்திர மின்பச் சுடரொளி
எண்ணூறு மந்திர மேகாந்த தீபமே. 312

ஏகாந்த தீப மிருளை யகற்றிடும்
ஏகாந்த தீபமெண் டிசை யண்டமாம்
ஏகாந்த தீப மிருதய மானது
ஏகாந்த மாகஎண் ணூறும் பார்த்திடே. 313

எண்ணூறு போல யெதுவுஞ் சொல்லாதையா
கண்ணூர் வராது கருணை வளர்ந்திடும்
நண்ணும் பொருளிது நற்குறி தீபம்போல்
பண்ணும் பலபொருள் பாசிதுக்கொவ்வாதே. 314

ஒவ்வாக் கசடர் ஊணில் மிகுத்தவர்
செவ்வாக மன்றி சீரமி கெட்டவர்
கள்வாப் பொருளைக் கவ்வின மாந்தர்கள்
எவ்வாறு கந்தாலும் எளிதா யிகழ்ந்திடே. 315

காரசாரம்

இகழாத காரசாரத் தியல்பு கேள்
அகலா வழலை யாதி பூநீறுடன்
இகழாத சாரமும் இயல் சத்திசாரமும்
[illegible]வாச் சாரமும் பதிக [illegible]சாரமே. 316

சாரமேகம் பச்சார மாஞ் சீனமும்
காரம் வெண்காரங் கதித்தால் சூடனும்
பார கற்பூரம் பதிவாய் முரியும்
சீருகல் லுப்புச் சிறந்த இணங்கனே. 317

இணங்கிய இந்துக் கேதுவாம் வளயலும்
குணங்குஞ் சவுடுக் கோதிலா லவணம்
வணங்கிய கெந்தில வணமதி னொடு
பிணங்கும் பிடாலுப்பு பேர்சிந்து லவணமே. 318

லவணம் பொன்னம் பரம்நாறு மீன்பார்த்தவன்
கூடனுரை தானக் காச்சுல வணமுன்
மவுனத் துடனே காரசாரங்கள் தான்
புவனந் தனில்வளர் பொருளிரு பத்தஞ்சே. 319

அய்யஞ் சுகார சாரத் தடைவுகள்
மெய்யஞ்சு பார்த்து வேண்டி யெடுத்திடு
செய்யுந் தொழிலுக் கிது மூல மாகிடும்
வையகந் தன்னில் வளருப்புக் கண்டிடே. 320

கண்டிடு மூலங் கருணை பராபரம்
நின்றிடு மந்த நேர்மை தன்னிலே
சென்றிடும் வாசி தீபக்கொழுந் தினில்
ஒன்றிடுந் தேக முறுதியாஞ் சித்தியே. 321

உபரசத்தின் பெயர்

சித்திக்க ரேசகம் சிவமய மாகிடும்
பத்திக்கும் பூரகம் பதிலான சத்தியாம்
முத்திக் கும்பக முதலாம் பராபரம்
சுத்திக்கு மூலஞ் சுடரொளி தன்னிலே. 322

தன்னிலை வன்னி தானங் தொடுகுறி
விண்ணிலை யந்தம் விபர மறிந்திடு
முன்னிலை யான முத்தி நடுமனை
வண்ணலை கண்ணன் கருணைகண்
பார்த்திடே. 323

பார்த்திடும் பாசம் பண்ணூற்றி ருபது
சாத்திடக் கேளு தன்னருள் தன்னினால்
மாத்துறு பச்சை வருபொன் னிமிளையும்
காத்திடுங் கஞ்ச லோக நிமிளையே. 324

நிமிளை ரசிதம்நேர் காந்த நிமிளையும்
கமழ் பொன் னப்பிரகங் கடிய சிகப்புடன்
தமிழ்கிஷ்ண சுவேதங் தன்னூசி காந்தம்
அமுழ்வாக் கரந்த மான உருளையே. 325

உருளை கல்காந்த முஙந்த கல்நாறு
தரு சாத்திரவேதி சலாசத்து கல்மதம்
கரு அஞ்சனக்கல் கருங்கலப் படிகமும்
வளர்சுத்த நீரிவளர் ரச வற்கமே. 326

வற்கங்கெ ருடன் வருபட் சியோடு
சுத்த எலும்பு சுகமான செங்கல்
நத்தை கிளிஞ்சி நல்லாமை முட்டை
உத்தமம் நன்று வுடனாக வண்டதே. 327

வண்டானை கொம்பு மாடுடன் பண்ணியும்
கண்டாங் கலங்கொம்பு கதித்த பூனாகமுங்
ஒன்றான இந்திரமுடன் பல்லுச் செவ்வட்டை
நன்றான தவளை நற்கோழி காடியே, 328

கரடுநல் சங்கு கதித்த நல்சிப் பியும்
சரடு நவ ரெத்தினங் தனில்வகை யொன்பதும்
நிரடு கெண் டகச்சிலை நெரு சுடலைக்கல்
மரடு மஞ்சனக்கல் மாக்கல்லு தேக்கல்லே. 329

தேக்கு வளைக்கல் சிலாவாகஞ் சிலாநாகம்
வாக்கன்ன பேதிவளர் சத்தி பேதியுங்
தாக்குபொன் பேதி தருமாங் கிஷபேதி
பூக்குமுவர் மண்பூசுக் கல்கிட் டமே. 330

கிட்டங் கருமணல் செம்மணல் சுத்தமண்
திட்டமுன் னால மட்டுக்கால் சீறுங் கருவண்டு
பட்டெலி முள்ளுப்பரும் பன்றி முள்ளுடன்
சட்டங்கடல் நுரைத்நான் மீனெ லும்புமே. 331

எலும்பு முள்சங்கு இயல்பு கோரோசினை
கரும்புத் தாம்பழங் கருணாகப் பச்சையும்
செழும்புகழ் மரகதஞ் சேர்வெள்ளை சுக்கான்
சமுங்கறத் தண்டுக் கரக் காச சிலையே. 332

சிலைவளர் காண்டா மிருகங் கல்பாச்சியும்
கலைமதார் சிலைக்கடுக் கடுமாங் கிஷச்சிலை
மலைவளர் சாளக் கிராமங் துளிர்கல்
துலைதெரி படிகக்கல் தூல்வி யேகாவியே. 333

காவியச் செம்புமணல் நாகமண் ணுடன்
தூவிய வங்கமண் துள்ளு வெள்ளீயமண்
மேவிய வெள்ளிமண் மேருவாம் ஏமமண்
தாவிய லோகமண் [illegible] சிறக்குமே. 334

இறகு கருஞ்சுக்கான் இயல்பான காணக்கல்
குறு குறுந்தக்கல் கூறுவே னின்னங்கேள்
திருகு மிரசிதசிலை யேமசிலை யொடும்
மருவு நாகச்சிலை வளர்வங்கச் சிலையே. 335

வங்கம் வெள்ளீயச் சிலை யாமயச்சிலை
அங்கத் திராச்சிலை யணிவெங் கலமலை
தங்கு பித்தளை மலைத் தனிச் செம்பு மாமலை
சங்கமு பரசந்தா னூற் றிருபதே. 336

நூற்றிருபது ரசம் நுண்மையாய்க் கண்டபின்
தாக்கிய வாதமுந் தனிவசியஞ் சனம்
மாத்துமறப் புடன்வகை நாலுஞ் சித்தியாம்
தேத்திய மூலஞ் சித்தெனக் காணுமே. 337

காணும் புருவமும் கமலத் தமுர்தமும்
தோணுகற் றீபந் தொடு குறிதன் னிலே
பேண வேவாசி பிரணவத்திருத் திடில்
ஆணுகம் நீங்கி அதீகமாஞ் சித்தியே. 338

சித்திக்கு மூலஞ் சீருடன் சொல்லுவேன்
முத்திக்கு வதில் முன்னிலைப் பத்தியே
பத்திய தாகப் பாரம் பதியென
சித்தம் பெருகி நீ சிம்மென்று நின்றிடே. 339

நின்றிட தியானம் நிலைக்கு மிதிதனில்
விண்டிடப் போகா விண்ணடிதான் விழும்
அண்டமும் பிண்டமு மடங்குந் தியானமாங்
கண்டிடு மாதிக் கருணைப் பொருளிதே. 340

கருணைப் பொருளிதைக் காக்கச் சிவமது
கருணைப் பொருளிதாய் கண்டிடச் சொல்லு
வோங்
கருணை அங்உங் மங்கென்று காரணமாக்
கருணை வளர்த்திடக் காற்சிலஞ் சித்தியே. 341

சிந்தி சிவமது சிம்மதி லெட்டிட
முந்திக் கொழுந்து முனைகொண்டு உலாவியே
பத்திச் சுழியைப் பளீரென் றிருந்திடும்
நித்திய தீபம் நிலைக்கு நிலையிதே. 342

நிலையதைக் கண்டு நினைவாய் ஜெபித்திடு
நலைபன் னிரண்டுங் கருத்தி லடங்கிடுங்
நலைதனில் தீபந் தானே துலங்கிடுங்
நுலையிலலை நெற்றித் திருவமு தாமே. 343

தாமே துருவந் தன்னிலைக் கண்டபின்
ாமே துண்டு நடுமனை சித்தியாம்
பூமென வாசி ஆனந்த போதமாம்
ாமம் பெருகி வளரும் பூரணமே. 344

ரணமான புதுமலர் வாவியைத்
ாரண மாகத் தனதா யறிந்தபின்
ரண மாகச் சிந்தை திறப்படும்
ாரணஞ் செய்து மதியைக் களைந்திடே. 345

ளைந்திடும் போது காரண ரவியை
ளைந்து நீபோற்றி [illegible]யைக் கண்டால்
ளைந்திடும் பிறவி வேரது அற்றிடும்
ளைந்திடும் வாசி [illegible] 346

ஏணி பழுவை யிதமா யறிந்தபின்
ஆணித் தரத்தா லசையா திருத்திடும்
பூணித் தமரில் புகுந்துற வாகினாய்
தோணிக் கரசன் துலங்குவான் சித்தியே. 347

சித்தியாம் பூரணஞ் செப்பு வகைகேள்
சத்தியுஞ் சிவமுந் தன்னொடு பூரணம்
நித்தியம் போற்றி நிலைமை யறிந்தபின்
பத்தி நின்றையம் பதறி யொடுங்குமே. 348

ஒடுங்க நிலைதனி லோடி யொடுங்கினால்
அடங்கிய வாசி யதனுள் ளடங்கிடும்
மடங்குந் தீரோ தகை மாசற விந்துவில்
ஒடுங்குங் கதிரொளி யுண்மை யதாகுமே. 349

துருசு சத்துரு மித்துரு

ஆகுந் துருசு அடங்கிய சத்துரு
பாகுஞ் சவடுப் பருந்தொட்டி அஞ்சனம்
வேகுமிணாங் கன் வெண் சீனஞ் சூடனும்
பாகுலப் பிரகம் பாஷாணங் கல்லுப்பே. 350

உப்பு இந்துப்பு உறுகாந்த நாகமும்
தப்புநல் வங்கஞ் சவுக்காரந் தன்னொடு
மெய்ப்பாந் துருசுக்கு வேண்டிய சத்துரு
ஒப்பான மித்துரு வுண்மையைக் கேளுமே. 351

கேளரி தாரங் கெடிசார தாரமும்
வாழுநற் சூதம் வளர்கெந்தி வீரமும்
நாளுங் கபரி நற்சிலை பூரமும்
தாளுங் கெவுரி தனபலரசலை லிங்கமே. 352

காரசத்துரு மித்துரு

லிங்கமுட னேரான மித்துரு
அங்கம தாக அறிவா லறிந்துநீ
சங்கையுடனே சத்துரு கொன்றிடும்
பங்கமா மித்துரு பதறீ யெழும்புமே. 353

எழும்பிய சாரத்தியல் பான சத்துரு
நலம்பெறச் சொல்லுவே நல்லகல் லுப்புடன்
கொழும்பீ யிந்துப்புக் கூறும் படிகியம்
வளம்பிய காந்தம் வங்கம் வளகியே. 354

வளகியென் றண்ட மடிந்திடுஞ் சுக்கான்
பழகுநல் சுன்னம் பாரில் கடல் நுரை
அழகு கிளிஞ்சி அப்பிரகந் தன்னொடு
உளையுஞ் சவுடுவுடன் கார ஈயமே. 355

ஈயமோ டெல்லா மிலங்கிய சத்துரு
தாயக யாகத் தண்மைய றிந்திடும்
நேயம தாக நின்றிடு மித்துரு
வாய்மைய றிந்து வகையுடன் கேளுமே. 356

கேளடா தாரங் கொடுசிலை கெந்தியும்
வாளடா வீரம் வளர்வெடி காரம்
நாளுடன் லிங்கம் நல்ல கெவுரியுஞ்
சேலுடன் நாகஞ் செப்பு நிமிளையே. 357

நிமிளை காரீயம் நின்றகல் நாருடன்
குவளை அவத்தங் கொடிய நல்மித்துரு
தமியை யறிந்து தனதாய் வகையுடன்
உமிழுமை மேலாம் லுகந்துநீ பாருமே. 358

### வெடியுப்பு சத்துரு மித்துரு

பார்வெடி யுப்புப் பணியு நல்மித்துரு
காரியம் ரெண்டுங் கடிவதோர் சூடனுஞ்
சார்சவுடு தனிப்பச்சை வெள்ளியுங்
கோர்இரும்புக் கூர்காந்த தொட்டியே. 359

தொட்டிய செய்பு சூர்சிலை கெந்தி
கட்டிய காந்தங் கடுஞ்சிங்க ராசா
கொட்டிய வண்டங் கொடுஞ்சுரைக் கெந்தியும்
விட்டதீ முறுவல் வேண்டுஞ் சத்துருவே. 360

சத்துரு தன்னை சாத்தினோம் நன்றாய்
மித்துரு வாத விளங்கிடக் கேளு
சுத்தும் படிக்குச் சொரிந்த கல்லுப்பு
முத்திய காரமுடி லிங்க வீரமே. 361

வீரான துத்தம் விளங்கிய தாரமும்
காரானைத் தந்தங் கடல்நுரை நாகமும்
நாரா நிமிளை நல்ரோமங் கம்பிளி
பாரான மித்துருப் பார்த்து முடித்திடே. 362

### கல்லுப்புச் சத்துரு மித்துரு

முடித்த கல்லுப்புக்கு முன்னான மித்துரு
அடுத்த இரும்பு அதிபூரம் செம்புடன்
தொடுத்த வெங்காரஞ் சொன்ன கெவுரியும்
கடுத்தநல் நாகமுங் காந்தமு ந்தாரமே. 363

தாரநிமிளைத் தனி வெள்ளைப் பாஷாணம்
பாரஅப் பிரகம் பருலிங்க வங்கமும்
நேரான மித்துரு நிலைமை பலித்தபின்
பேரான சத்துருப் பெருமையைக் கேட்டிடே. 364

கேட்டிடு வீரங் கெடியர சலத்தமும்
வாட்டுஞ் சவுடுவரு சிங்கி தன்னொடும்
பூட்டும் பவளப் புத்து மனோசிலைத்
தாட்டும் பழம்புளித் தன்னொடு சத்துரே. 365

காரமித்துரு சத்துரு

தன்னொடு கார சத்துரு தன்னையே
வின்னமில்லாமல் விளங்குஞ் சலாசத்து
உன்னும் புளியண்ட முடன்சூடன் பூரமும்
சுன்னவகையெல்லாஞ் சுழல் காரசத்துரே. 366

காரத்தின்மித் துருக்கட்டுடன் சொல்லுவேன்
பாரத்து பரசம் பாஷாண வர்க்கங்கேள்
சீரொத்த லோகங்கள் சிறந்தமித் துருவிது
நேரொத்துப் பார்த்து நினைத்து முடித்திடே. 367

தங்கசத்துரு மித்துரு

நிலைத்த நல்சீனத்தின் நேர்மையின் சத்துரு
உரைத்ததோர் காரத்தி னுண்மை யறிந்திடு
அலைத்த நல்மித்துரு அப்படி யாகிடும்
பிலத்துடன அறிந்து பேணிக் கண்டிடே. 368

கண்டிடு தங்கத்தின் கதித்த நல்சத்துரு
விண்டிடு நாகம் விளங்கிய லிங்கமும்
பண்டுறு பச்சையும் பருத்த நூல்நிமிளையும்
இண்டுநல் கெவுரியும் இணங்கனும் வெள்ளையே 369

வெள்ளை சவுடு விளங்கிய தாளகந்
துள்ளிய சிந்துத் துலங்குமனோ சிலை
கொல்லு முப்பிரகங் கொடிய கிளிஞ்சியும்
துள்ளிய குதிரைப் பல்சூதமு மண்டமே. 370

அண்டமாங் கெந்திய கோர்முகி காந்தமும்
பொன்றிய வீரமும் பொன்னம்பர் சத்துரும்
நன்றிருசத் துருநயமாய்ப் புனைந்திட
கொன்றிடு மென்று குறித்திடுந் திண்ணமே. 371

திண்ணமதாகச் செப்புவேன் மித்துரு
சொன்னசத் துருவதைத் தொகுத்து அகற்றியே
என்ன சாக்கிலிது மித்துரு வெனத்
தன்னமைபாகச் சாதிப் பார்த்திடே. 372

பார்த்திடுஞ் சூதம் பரிசிக்குஞ் சத்துரு
சேர்த்திடு வெள்ளை கெவுரி நல்சிங்கியும்
சாத்திய சத்தி சாரங் குதிரைப்பல்
காத்திடிரும்பு கடுவெடி காந்தமே. 373

காந்து பொன்னம்பர்க் கடுபூர சூடனும்
நீந்துகல் சவுடு நிமிளை பூனீறுடன்
பாந்துரு வாகப் பத்தி சத்துருஞ்
சேந்த நிந்ததனை செலுத்துவர் திண்ணமே. 374

அயசத்துரு மித்துரு

திண்ணம தாகச் சிறந்திடு மித்துரு
நன்னப் பிரேகம் நாகமுங் காரியம்
அன்னய கெந்தகம் அணிசிலை வங்கமுங்
தின்னமா தொட்டியுஞ் செய்தார வீரமே. 375

வீரகல் வெள்ளியும் விளங்கிய செம்புடன்
கார் பச்சைச் சாரங் காரமுங் துத்தமும்
பாரஞ் சனக்கல் பாரதீ முறுவலுஞ்
சேரவிது வெல்லாஞ் சேர்ந்த மித்துரு
வென்னே. 376

என்னமோ வென்று இறுகாத யிரும்புக்கு
வின்னமா சத்துரு வெண்காரம் வெங்கலம்
கன்ன அப்பிரேகங் காரணயத் தோடுடன்
என்ன நிமிளையு மேற்சிலை வங்கமே. 377

வங்கங் கிளிஞ்சி வளர்கெந்தி சாரமும்
அங்கந் திராச் சீங்கியான கெவுரியும்
பொங்கிய வெள்ளைப் பூக்கும் பூனீறுஞ்
செங்கை சலாசத்து சேரவுஞ் சத்துரே. 378

சேரு மிரும்புக்குந் திறமான மித்துரு
நேர்வெள்ளி நாகமும் நெடியகபரியும்
பார்காரந்த பூரம் பழுத்திடுஞ் செம்பு
கூராச வர்த்தங் கொடிய பூநாகமே. 379

நாகமாந் தங்கம் கெந்தி செம்பும்
வாகுடன் சூடன் மயூர செம்புடன்
பாகுடன் கூட்டம் பருத்த இரும்புக்கு
தாகமித்துரு வென சாத்து மெண்ணூறிதே. 380

காந்தசத்துரு மித்துரு

எண்ணிய காந்த மியல்பால் நாலுக்குந்
தண்ணிய மித்துரு சத்துரு கேட்டிடு
நண்ணு மிரும்புக்கு நாட்டும் வகையதை
உண்ணி யுறைத்து வுண்மையாய்ப் பார்த்திடே. 381

நாக சத்துரு மித்துரு

பார்த்திடு நாகம் பதறிய சத்துரு
போத்துங் கிளிஞ்சிப் பொருந்திய அண்டமும்
காத்து வெடியுங் கல்லுப்பு வங்கமும்
ஆத்துப் படிக மருளான சங்கமே. 382

தங்கந் தராவிதனிவெள்ளி வெங்கலம்
பொங்கு கண்டோடு புதுவீர சிங்குடன்
அங்கமிளகு அவின் வெள்ளை பாஷாணம்
மங்கும் வழலை வளரன்ன பேதியே. 383

பேதித்த நாகப் பெருமைதன் சத்துரு
சோதித்துப் பார்த்துந் துருவத்தில் நின்றிட
வாதித்த மித்துரு வலுவை வகையதை
போதிப்போங் கண்டிடு பூரணந் தன்னிலே. 384

தன்னான காந்தமுந் தனி அப்பி ரேகமும்
பொன்னாம் நிமிளைப் பொருந்துஞ் சலாசத்து
சென்னிய சூதஞ் செப்புங் கெவுரியும்
கன்னான கெந்தியுங் கடும்பூ நாகமே. 385

நாகம யூரஞ் செம்பு கருநாகம்
பாக மிச்சாரம் பதிவா னிவையெலாம்
ஏக யிரும்புக் கியல் பான மித்துரு
ஆகமதாக அறிந்துகொள் ளுண்மையே. 386

காரியஞ் சத்துரு மித்துரு

உண்மையாய் காரீய முருளுஞ் சத்துருவகை
நன்மையாய்ச் சொல்லுவே னாடு மயக் காந்தம்
தன்மை கிளிஞ்சி தருவண்ட நாகமும்
வன்னங் கெவுரி வருநத்தை கெந்தியே. 387

கெந்தி கற்சுன்னங் கேளு சத்துருவிது
பந்திய மித்துரு பகருவது கேள்
அந்தி மயூர மதினுட செம்புவும்
குந்து பூநாகங் கூர்நாகச் செம்புமே. 388

செம்பு வெள்ளீயஞ் சேர்வங்க சூரமும்
வம்பு மித்துரு வெண்வகை யறிந்திட
அம்புவி தன்னி லறிவார் பெரியோர்கள்
நம்புவா ரப்பதம் நாட்டங்கள் காணுமே. 389

வெள்ளீயம் சத்துரு மித்துரு

காணும் வெள்ளீயங் கருவாம் செயம்பண்ண
வேணுமே சத்துரு மித்துரு ஒன்பதாய்
பேணு காரீயமும் பெருந் துத்தஞ் சூதமும்
ஊணுமே சத்துரு மித்துரு உகந்திடே. 390

உகந்த சரக்கை உரிமையாய்க் கண்டிட
மிகிந்திடுஞ் சத்துரு மித்துரு தன்னினால்
அகந்திடப் படவென் றமர்த்தி யிருத்திட
ஜெகந்தனில் சித்தனாய் சித்து பெருகுமே. 391

பெருகுஞ் செகந்தனில் பேரான சித்துகள்
தருகியே மித்துரு சத்துரு தன்னையே
உருகிய றிந்து வுண்மையக் காத்திடார்
திருகும் பிறவியில் செனித் துழல்வார்களே. 392

உழன்று தவித்து வுறுதிய றியாமல்
தழன்றே யறிவது தானே மயங்கிடுஞ்
சுழன்றிடு காயச் சுழியீ லமைந்திடுங்
கழன்றிடும் வாசிக் கதருஞ் சத்துருவதே. 393

சத்துரு மித்துரு தன்னை யறிந்துநீ
புத்தியுடனே பொருந்த அகற்றிடு
அத்தன ருளா லகற்றுவ ரென்றதால்

மற்றது மன துற வளருஞ் சாரணையிதே. 394

சாரணை தீர்ந்திடுந் தாக்கு மனோன்மணி
காரணமாகக் கருத்தி லடங்கிடுந்
தாரணமான தனுவும் பிலத்திடும்
பூரண வாசியும் புத்தியில் செல்லுமே. 395

புத்தியில் வாசிப் புகுந்து உறவாகினால்
நெற்றிக் கண்ணின்று நேரே துலங்கிடும்
நத்தும் புருவ நடுவின் இடமதில்
உய்த்து நீபாரு ஒளிகொண்ட தீபமே. 396

தீபந் துலங்குந் திறமது சொல்லுவோம்
பாப மிகுந்தப் பருபுளி வெண்ணெயும்
கோப மிகுந்தக் கொடும் பாக்கிலைச் சுன்னஞ்
சாபம் விளைக்குந் தனிமீனி றைச்சியே. 397

இறைச்சி முதலா யிவைக ளகற்றிநீ
நிறைச் செந்தமுது நேருடன் கொண்டிடு
உறைச் சிதுகற்ப முண்மையாம் பூரணம்
அறைத் திதுபாரு ஆனந்த போதமே. 398

போதமா நின்ற பூரணந் தன்னையே
நீதமாய்க் கண்டு நின்மனம் போற்றினால்
பாத மடிமுடிப் பத்திய தீபமுஞ்
சோதி மயமெனத் தூண்டிய நாதமே. 399

நாதமும் விந்துவும் நயமா யறிந்துநீ
நீத மாயந்த நிலையினில் வாசியை
பேதம் வாரமல் பிணைத்து இருத்தினால்
பூத மொடுங்கிப் பொருந்துஞ் சுழியிலே. 400

சுழியினில் வாசி சுழன் றுருகாமலே
வழிதுறை கண்டு வாசியை யேற்றிடு
அழிபடு தேக மாதி நிலைத்திடும்
முழிநடு சிக்கென முன்னிலைப் பின்னே. 401

பின்னிலைப் பிடறிப் பெருகிய பூரணத்
தன்னிலை யதுவெனச் சார்ந்து குறித்திடு
வன்னியும் வாசியும் வளருங் குகையது
கென்னியின் பாகந் தெட்சண மாகுமே. 402

ஆகுங்கல் தெட்சணம் அகமதி வீசனும்
வாகுட னறிவாய் வளரு நற்றீபமாய்
போகும் பெருகிப் பூரண கெங்கையாம்
ஏகமா யெங்கு மிருந்ததைக் கண்டிடே. 403

கண்டு பிடித்துக் கனலை யெறிந்திடு
அண்டியே ஆவி யதனுள் ளடங்கிடும்
மண்டிய வாசி மதியுடன் சேர்த்து
நின்ற ரவியிடம் நேர்ந்தது வுண்மையே. 404

உண்மை யிப்படி யென்று கந்து நீவாசியைத்
தண்மை யிதென்று சார்ந்து செலுத்தினால்
சின்மய மாகி சிறக்குஞ் சிவயோகம்
நன்மை யிதெனவே நாட்டங்கள் கண்டிடே. 405

நாட்டங்கண் கூசும் நன்றா புருட்டிமேல்
ஏத்திடு வாசி யேகாந்த போதமாம்
வாட்டங் களில்லை மனையுந் திடப்படும்
தேட்டங்க ளென்ன சிவயோகஞ் சித்தியே. 406

சிந்தை பஞ்சாட்சரந் தெவிட்டச் செபித்திடு
அந்தியுஞ் சந்தியும் அந்த நிலையில்நில்
சொந்தமாய் மூலச் சுடர தெழும்பியே
புந்தியில் நின்றது பூரண மாகுமே. 407

பூரண தீட்சைப் பொருந்து மெண்ணூறில்
பூரண மென்ற புதுமை யறிந்திலார்
பூரண மான புதுமை யறிந்தவர்
பூரண கெங்கையைப் போதிப்பார் கண்டிடே. 408

செயநீர்

கண்டறு பத்தினாலு சரக்குக்குங்
கொண்டிட செயநீர்க் குருமுறை சொல்லுவேன்
நின்றதோர் பூவில் நேர்வீர சாரமுஞ்
சென்றிடப் பொடித்துச் சேரு பீங்கானிலே. 409

பீங்கானி லிட்டுப் பேணிப் பரியில்வை
பாங்கான செயநீர் பருகிப் பெருகிடும்
தூங்காமல் நின்று சொலித்திடு நீரதை
வாங்கிடு குப்பியில் வளமதில் ரொம்பவே. 410

வளமதில் சரக்கை வாட்டித் துவைத்திட
செலமதில் நன்மையாய்த் தீர்க்கமாய்க் கட்டிடும்
நலமுடன் கட்டின நல்ல சரக்கினில்
பலன திலுண்டு பக்குவங் கண்டிடே. 411

கண்டிடக் கேளு கதித்த மெழுகுநீர்
உண்டிடும் பூவு முடன்சாரப் பச்சையும்
விண்டிடும் பூரம் விதிக்க வொன்றாகவே
சென்றிடக் கூட்டி செயநீர் விட்டாட்டியே. 412

ஆட்டி யெடுத்து அகண்ட பீங்கானில்வை
நாட்டும் பனியில் நல்ல சிவமாகும்
ஊட்டு கல்குப்பியில் உடன்வீரந் தாக்கிடுத்
தேட்டுடன் நீறுஞ் சிவந்திடும் பாருமே. 413

பாருஞ் செயநீரில் பட்டசரக்குகள்
நேருடனாட்ட நிலைத்த மெழுகதாம்
சீருள்ள மெழுகதில் சிந்து விளைந்திடும்
காருநல் லோகங் கதிக்கப் பழுக்குமே. 414

பழுக்கும் வகைகளைப் பகருவேன் மக்களே
அழுக்கு மனத்தை யறுத்து அகற்றிடு
இழுக்கும் பிறவித் துயரைக் களைந்திடுஞ்
செழிக்கு மூன்றுஞ் சிவயோகஞ் சென்றிடே. 415

சென்றிடும் போது சேரச்சிவமயம்
கண்டிடும் போது கல்மணல் ஏமமாம்
விண்டிடும் வார்த்தை விளங்கிய மந்திரம்
நின்றிடும் பற்பம் நேர்தனைக் கண்டிடே. 416

பற்பவகை

நேர் வெடியுப்பு நிலையான சீனமுங்
கார்சிப்பித் தோடுங் கதிக்கச் சரியிடை
வீருற்ற செயநீர் விட்டே யரைத்திடு
வாருறு சாமம் வகைநால ரைத்திடே. 417

அரைத்ததை வில்லை யாக்கி ரவியினில்
விரைத்திடப் போட்டு விரும்பி யெடுத்திடு
வுரைத்திட வோட்டில் ஒடுக்கி மண்சீலைசெய்
திரைத்துடன் கெசப்புடந் தீர்த்து எடுத்திடே. 418

துருசு சுன்னம்

எடுத்திடச் சுன்ன மென்னென்று சொல்லுவேன்
தொடுத்திடு முப்பூச் சுன்னத் தினையிது
அடுத்த சரக்கை அதட்டி நொருக்கிடும்
விடுத்த துருசு வெண்மையைக் கேட்டிடே. 419

கேட்டிடுஞ் சுன்னங் கெடியான வீரமும்
நாட்டிச் சரியிடை நல்ல நீர்கூட்டியே
ஆட்டியே பச்சை யந்த இடைக் கிதைப்
பூட்டி மண்சீலைப் பொருந்த அழுத்திடே. 420

அழுத்திக் கணக்கு அறிந்து புடமிட
வெளுத்திடுஞ் சுன்னம் விரும்பி யெடுத்திடு
துளுத்திடுஞ் சுன்னந் துருசுக் குருவதால்
நெளித்த சரக்கை நீற்றிடும் பாரே. 421

சாரச்சுன்னம்

பார் சாரச்சுன்னம் பகருவேன் மக்களே
வீரான பூவும் வெடியுடன் பச்சையும்
நேரான வீரமும் நேர்சரி யாகவே
காரான சாரமுங் கல்வத் தரைத்திடே. 422

அரைத்த மருந்தை அடைபோல் பிடித்துநீ
நிரைத்த குவியில் நீர்காயப் போட்டிடு
மறைத்திடு ஓட்டில் மண்ணது செய்துமே
திரத்துடன் புடமது செம்மையாய்ச் செய்திடே. 423

செய்திட்டுப் பாரு செயசாரம் நீறியே
கொய்திட்ட சுன்னங் கொடுஞ் சுருக்காய்விடும்
வைத்திட்ட வாதிக்கு மார்பாணி யானது
மெய்யுற்ற சாரம் விசையான சுன்னமே. 424

## கல்லுப்பு சுன்னம்

சுன்னமாய்க் கல்லுப்பைச் சொல்லுவேன் மக்களே
திண்ணமாஞ் சூடனுஞ் சேர்வெடி சாரமும்
வன்னமாம் பச்சை வளர்வீரந் தன்னொடு
சொன்ன கல்லுப்புடன் தோன்ற எடுத்திடே. 425

எடுத்திட் டரைத்திடு ஏகமாம் நீரதில்
தொடுத்திடு வில்லையைச் சுருள ரவியிடு
படுத்திடு ஓட்டில் பதிய மண்சீலைசெய்
கொடுத்திடு புடத்தில் கொடுஞ் சுன்னமாகுமே. 426

ஆகும் கல்சுன்ன மாரு மறிந்திலர்
வாருடன் பேசி வகையிடு மாந்தரைப்
பாருடன் கூடிப் பயின்று திரியாதே
ஆகம் நூலை யறிந்து பிழைத்திடே. 427

பிழைத்திட வேண்டிப் பேசினேன் மக்களே
நிலைத்திடுங் காரம் நேர்மையின் சுன்னத்தை
தழைத்திடக் கேளு தன்னொடு வீரம்
மலைத்திடும் வெடியும் ஆனதோர் பச்சையே. 428

பச்சைச் சரியிடைப் பகுந்த வெண்ணீறிதில்
இச்சையா யாட்டியெடுத்திடு வில்லைபோற்
வச்சிடு வோட்டில் வளம்பெறச் சீலைசெய்
நிச்சயமாக நிறுத்துப் புடமிடே. 429

புடமிதில் காரம் பொருந்திக் கழித்திட
அடைவுடன் சுன்ன மாரு மறிந்திலார்
திடமான லோகம் க்ஷணத்தி லுருகிடும்
விடமான காரம் வெண்சுன்ன மார்க்கமே. 430

**சீனச்சுன்னம்**

மார்க்கம தாக வழுத்துவோங் கேளு
தீர்க்கமாஞ் சீனச் சிறந்திடுஞ் சுன்னத்தை
யோக்கையாய் சொல்லுவோ மினிய பூச்சூடனும்
தீர்க்கமாய் வீரனுந் திறமான கம்பியே. , 431

கம்பியோ டொன்றாய்க் கணக்குடன் கூட்டியே
நம்பிய சீனம் நாட்டி அரைத்திடு
வெம்ப வுருட்டி வெயிலி லுலர்த்தியே
பண்புட னோட்டில் பதிந்து மண்சீலையே. 432

சீலைமண் செய்து திடமாய்ப் புடமிடு
ஆலையமாக அமர்த்தி யெரித்திடு
சூழநற் சீனந் துலாம்பர மாகவே
வேலை சாதிக்க வெண்சுன்ன மாகுமே. 433

**நாகச்சுன்னம்**

ஆகுமே நாக மதிகமாஞ் சுன்னத்தைப்
பாகம தாகப் பண்புடன் பார்த்திட
வாகுட னாகம்வளர் சூதங் கூட்டியே
ஏகமாம் வீரம் எழில்பச்சை பூரமே. 434

பூரமுங் கம்பியும் பொருந்த வொன்றாகவே
காரமாம் நீரில் கதிக்க அரைத்திடு
வாருடன் கூட்டி வட்டது பண்ணியே
நீரது காய நினைவா யுலர்த்திடே. 435

உலர்த்திடும் பில்லையை யோட்டி லமைத்திடு
பிலத்துடன் மண்ணது பேணிப் பிடித்திடு
குலத்துடன் [illegible] புடமிடு
நிலத்தினில் நாகம் நிலையாக சுன்னமே. 436

வங்கச் சுன்னம்

சுன்னமாய் வங்கத்தைச் சூட்டுவேன் மக்களே
தின்னமாம் வங்கமுஞ் செயசூத பச்சையும்
துண்ணாத வீரமுஞ் சூடனுங் கம்பியும்
ஒண்ணாகக் கூட்டி யுருட்டி யரைத்திடே. 437

அரைப்பது நன்றா யரைத்துத் திரட்டியே
விரைத்திட ரவியில் விரும்பி யெடுத்திடு
திறத்துட னோட்டில் திறமா யமர்த்தியே
நிறைத்திடு சீலைமண் நிச்சயமாகவே. 438

கருவங்கச் சுன்னம்

ஆகநூறு எருவி லமர்த்திப் புடமிட
வேகமாய் நீறிவெளுத்திடுஞ் சுன்னமாய்
ஆகமங் தோறு மறியா ரிச்சுன்னத்தைப்
பாகமாய்ப் பார்க்கப் பழுத்திடும் வேதையே. 439

காரியச்சுன்னம்

வேதைக்கு நல்ல விளங்கிய காரீயம்
வாதிக்குச் சுன்னம் வயணம் வழுத்துறோம்
நீதி சேரீயமும் னேர்சூதங் கூட்டியே
சாதிசேர் பச்சையுந்தன்னொடு வீரமே. 440

வீரமுஞ் சூடனும் விளங்கிய கம்பியும்
நேருடன் கூட்டு நெட்டடங் காட்டியே
சீருடன் வில்லை சிறக்கப் பிடித்துநீ
தாருட னோட்டில் தரித்துமேல் மூடியே. 441

மூடி மண்சீலை மூடித் தரித்துநீ
மாடுட னெருவில் வைத்துப் புடமிடக்
கூடுட நீயுங் குழன்று பொருமியே
ஓடி யெரிந்து வழுத்திடுஞ் சுன்னமே. 442

சுன்னப் பெருமையைச் சொல்ல முடியாது
விண்ணிடுஞ் சூதம் விரைந்து மடிந்திடும்
நண்ணிய வேதைக்கு நாடுந் திறவுகோல்
எண்ணுந் துறைக்கு இதுகுருபீடமே. 443

வெள்ளிச் சுன்னம்

குருவான பீடங் குறித்திடு வெள்ளியைத்
திருவான சுன்னமாய்த் தீரும் வரிசைகேள்
கருவான சூதமுங் கார்வங்கங் கூட்டியே
யுருவான வெள்ளியி லொன்றாய்ச்
செலுத்துமே. 444

செலுத்திப் பொடித்து சீர்வெடி யுப்புடன்
கொளுத்திடு சூடனுங் கார்பச்சை வீரனும்
அழுத்தமாய்க் கூட்டி அமைய அரைத்திடு
வழித்து வுருட்டி வட்டது பண்ணுமே. 445

பண்ணிய வட்டைப் பானுவில் சுன்னிட
நண்ணியே போட்டு நாடி யெடுத்துமே
தன்னியகலில் தரித்து மண்சீலைசெய்
சென்னியை நோக்கிச் சிவசிவா என்னுமே. 446

சிவசிவா வென்று செலுத்தப் புடத்திலே
தவமான சரக்கை கூட்டி யொன்றாகவே
அவமாகப் பொன்றி அலறி மடிந்திடும்
உவமான மில்லா உண்மையாஞ் சுன்னமே. 447

உண்மையாய் நின்ற உறுதி மதியதை
தண்மையாய் நீற்றுங் தகமை யறிந்தவர்
நண்ணும் கயிலாச வாசமாய் அழுத்தைத்
சுன்னமாய் நிசமாய் நிறுத்தும் முறைமைகேள்
448

## அயச்சுன்னம்

வாச மயத்தை வடிவுள்ள சுன்னமாய்
நேசமதாக நிறுத்து முறைமை கேள்
ஆசான வங்கமும் அதிசூத நாகமும்
பாசமாய்க் கூட்டிப் பருகப் பொடித்திடே. 449

பொடித்திட் டயத்தைப் போடு சரியிடை
வெடித்திடு முப்பூ வீரமும் பச்சையும்
கடித்திடுஞ் சூடனுங் கணக்குடன் கூட்டியே
வடித்த மெழுகுபோல் வணங்க அரைத்திடே. 450

அரைத்திடு பழச்சா றடைவுடன் செயநீர்
திரத்துடன் விட்டுத் தீர அரைத்திடு
வரத்துட னரைத்து வட்டது பண்ணியே
உரத்துடன் ரவியில் ஒன்ற யுலர்த்திடே. 451

ஒன்ற வுலர்ந்து வுருட்டிடும் வட்டதை
சென்றிட அகலில் சேர்த்து மண்சீலைசெய்
நன்றிது வென்று நாட்ட முணர்ந்து மேல்
சுன்றி யெருவில் சொருகிப் புடமிடே. 452

புடமது நிதானம் பொருந்திப் புடமிட
திடமுட னயமும் சேர்ந்து வெளுத்திடும்
விடமெனக் கொடிய வெண்சுன்ன மாகுமே.
தடமென்ன வேதைக்குத் தாயுமானதே. 453

## காந்தச் சுன்னம்

ஆனதோர் காந்த மதிகநல் சுன்னத்தைப்
பேணவே சொல்வேன் பிலமான காந்தமும்
தோணை இரும்புந் தொகுத்துப் பொடிசெய்து 454
நான் வெடியுப்பு வல்வீரப் பச்சையே,

பச்சை யுடனே பரமான சூடனும்
வச்ச இடைக்கு வளமாகக் கூட்டியே
நிச்சய தேசி நீரது விட்டாட்டியே
அச்ச மொடுங்க அரைத்து வழித்திடே. 455

வழித்துத் திரட்டி வளமாய்ப் புடமிடு
முழித்து மருட்டி முழுவெடிக் கூட்டியே
அழுத்தி அரைத்து அடையது சேர்த்துமே
செழுத்தி யெருவில் செயமாய்ப் புடமிடே. 456

புடமது நிசமாய்ப் போட்டு எடுத்திடு
வடிவுள்ள காந்தம் வளமாய் வெளுத்திடும்
அடிமுடி யொன்றா யமர்ந்திடுஞ் சுன்னத்தை
திடமுடன் காண்பவன் சித்தனு மாமே. 457

ஆகுமே சித்து அவன்தேகஞ் சித்தியால்
போகுமே வேதைப் பொன்வெள்ளி ரெண்டுக்கும்
வாகுடன் சுன்னம் வைப்புச் சரக்கது
பாகுடன் செய்து பலனறி வார்களே. 458

தங்கச்சுன்னம்

வாரான தங்கம் வளம் பெறச் சுன்னமாய்
காரான செய்தி கருமுறை சொல்லுவோம்
நேரான சூதமும் நேரிய வங்கமும்
பேராக ஒன்றாய்ப் பெலக்க வுருக்கிடே. 459

உருக்கிய சத்தி லொன்றுட னிரண்டுசேர்
நெருங்கிய தங்கம் நேராய் நொருங்கிடும்
முருக்கிய வீரனு முடிவெடி யுப்புடன்
கருக்கிய சூடனுங் காலான பச்சையே 460

பச்சையோ டொன்றாய்ப் பதியக் கல்வத்தில்
வச்ச சரக்கை வளமா யரைத்திடு
கச்சிடு நீருங் கருப்பழச் சாறுடன்
நிச்சய மாக நினைவா யரைத்திடே. 461

அரைப்பது மைபோ லரைத்துத் திரட்டியே
உரப்பட வில்லை யுலர்த்தி ரவியினில்
திரப்பட அகலில் செலுத்தி மணலிடு
மரைப்புடன் புடத்தில் வாட்டி யெடுத்திடே. 462

எடுத்து மறுபடி யிறுக அரைத்துமே
தொடுத்து முன்போலத் துலங்கப் புடமிடு
அடுத்த நல்தங்கம் அலர்ந்து மலர்ந்திடுந்
தடுத்திடு மேமமுந் தான்சுன்ன மானதே. 463

ஆனதோர் ஏமம் அடங்கிய சுன்னத்தால்
வானவர் முனிவர் வரைதெரிந் தேறினார்
கோனவ னான குருசுவாமி சுன்னந்தான்
பேணுவாய் லோகத்தில் பிழைத்திட ஏமமே. 464

ஏமத்தை நீற்ற எளிதோ வென்மக்களே
வாமத்தினாலே மனத்தை யறிந்திடும்
காமத்தை வென்று கருணைக்கண் பார்த்திட
சேமத்தில் வாசிக்கு நல்தீபமே. 465

கற்ப விவரம்

தீபங் கொழுந்து சிறந்திடு நாதந்
தூபத்தில் சூதந் துலக்கிய விந்து
நீபத்தி யாக நின்று நிலைதனில்
கோபத்தை நீத்தாற் கும்மெனும் நாதமே. 466

நாதமும் விந்துவும் நலமுடன் கூடினால்
போதம் நிறைந்த பூரணங் கண்டிடும்
நீதமாம் பூரணம் நேர்நிலை கண்டுபின்
வாதமும் வசியமும் வந்திடுஞ் சித்தமே. 467

சித்த மொன்றா யச்சிவபதங் கண்டபின்
முத்திக் கொழுந்து முனைகொண்டு லாவியே
பத்திய விந்து பரமான நாதமும்
உய்த்துப் புணர்ந்து வொன்றாக நின்றதே. 468

ஒன்றாகி ரெண்டா யுடனது மூன்றுமாய்
நின்றாடிக் கொண்ட நினைவை யறிந்திலார்
பண்டான செய்திப் பருதி மதிச் சுடர்க்
கண்டாரு மில்லைக் கற்பத்தின் சாரமே, 469

கற்பசாரம்

கற்பத்தின் சாரங் கருதுவோ மக்களே
உற்பத்தி யான வுகமை யறிந்திலார்
கற்பத்தில் நல்ல சாரை வெண்சாரை தான்
சிற்பத்தில் காண சிவயோகஞ் சித்தியே. 470

சித்தம் பெருகி சிவஞான போதமாம்
சித்தம் பெருகி சிவயோக தீபமாம்
சுத்தம தாகத் துலங்கும் பதிதனில்
சுத்தமாய் நின்ற சுடரான தீபமே. 471

தீபம் நிறைந்த சிவாநந் தமூலமாம்
தீபம் நிறைந்த சிவாய சிவமது
தீபம் நிறைந்த சிவாய சிவமதை
தீபத்தை நோக்கி செலுத்திச் செபித்திடே. 472

## செபகாலம்

செபித்திடக் காலஞ் செப்புவேன் மக்களே
குவித்தெழுந் தறையுங் கூறும் பஞ்சாட்சரம்
அவித்திடு மிரவி யனலு மெழும்பிடும்
தபித்திடுஞ் சிந்தை தளராது திண்ணமே. 473

தளராமல் நீயுந் தன்னிலைப் பத்தியே
தளரா மலந்தத் தானங் குறித்திடு
தளராத விந்தை கண்டு செலுத்தினால்
உழலாது காய முண்மையிது திண்ணமே. 474

திண்ணமாய் நின்று செபமது செய்தபின்
உண்ணவே கற்பம் உறுதி மனந்தேறும்
என்னமோ வென்று இருந்து மருகாதே
பொன்னணி மூலம் பொருந்திய வாசியே. 475

வாசி மனோன்மணி மருவிய சத்தியை
நேசமா மாலையில் நிறுத்தி செபித்திடு
தேசிகனான சிவமதுக் குறுதியாம்
பேசிய சத்தியைப் பிலமாய் செபித்திடே. 476

பிலமா மனத்தைப் பிடித்துற வாகினால்
குலமான தேகங் குன்றா தொருநாளும்
நலமான வாசி நாடி வளர்ந்திடுந்
தலமான தீபந் தன்னருள் போதமே. 477

போதம் நிறைந்த பூரண வாவியில்
நாதமும் விந்துவும் நாடி யிருந்திடும்
பாத மடிமுடிப் பத்தித் தெளிந்தால்
வாதமும் வசியமும் வண்ங்குவ தின்மையே. 478

தின்மையும் நன்மையுஞ் செகமய மாச்சுது
தன்மை யதனால் தானது கண்டிட
உண்மை வெளிப்படும் உறுதி யுகந்திடுஞ்
செம்மையும் வெண்மையுஞ் சேரும் வல்லாரையே. 479

வல்லாரை தன்னை வணங்கு முறையதை
நல்ல வுனக்கு நயம்படச் சொல்லுவோம்
நல்லாருங் கண்டு எளிதா யிருந்திட்டார்
வல்லாரு கந்து வரைகடந் தார்களே. 480

வல்லாரை

கடந்தார்கள் மோகக் கன்ம வினையதைத்
துடர்ந்தே அடித்துத் துருவத்தி லேறினார்
படர்ந்த வல்லாரையை பத்தி எடுத்துநீ
அடர்த்திடுங் காடியி லமர்த்திப் பிழிந்திடே. 481

பிழிந்திட்டு வைத்துப் பேணிப் பொடிசெய்து
கலந்திடுஞ் சக்கரைக் கணக்குச் சரியதாய்
நெளிந்திடு மனத்தை நேரதில் செலுத்தியே
அழுத்தி யொருகடி யன்பாய்ப் பொசித்திடே. 482

பொசித்திடு மண்டலம் பொருந்தி உள்கொண்டதால்
கசித்திடுஞ் சீதங் கழன்று இறங்கிடும்
நசித்திடும் பித்தம் நடுநிலை தன்னிலே
வசித்திடுந் தேகம் வரண்டு சிறக்குமே. 483

சிறக்குமே தேகஞ் சிறுகதி ரோடியே
உறக்குமே வாசி யுளநின்று லாவிடும்
நிறக்குமே மூல நிலைதனில் தீபஞ்
சிறக்குஞ் சிவமாய் சிவமால் அண்டமே. 484

## கடுக்காய்

அண்டங் கடுக்கா யாரு மறிந்திலார்
அண்டங் கடுக்கா யருமை யறிந்தவர்
அண்டங் கசடு அறுத்து அணைதனில்
அண்டத் தடுத்து அருபியு மாவனே. 485

அருபமாய் நின்ற ஆதி கடுக்காய்
குருமாப் பதிதனில் கூர்மை யறிந்தபின்
குருமாப் பதிதனில் கூர்மை யறிந்திடும்
பருமலாய் நின்றதைப் பார்த்து எடுத்திடே. 486

எடுத்திட் டமுரியி லியல்பா யமுத்தியே
விடுத்திட் டுலர்த்தி விதையதை நீக்கிடு
பொடித்திட் டத்தூளை போட்டிடு காடியில்
மடித்திட வைத்து மறுநாளி ருத்திடே. 487

இருத்தி மறுநா ளியல்பா யுலர்த்தியே
மருத்துநீ யிப்படி வளமாகச் செய்திடு
திருத்தமா யிம்முறை செய்திடும் பத்துதான்
வருத்தமாய்த் துருவம் வாங்கி வெளுத்துமே. 488

வெளுத்திடும் பொடியதை வெயிலி லுலர்த்தியே
அழுத்தமா முரலி லமுந்தி யிடித்திடு
செழித்திடும் பொடியைச் சேர்வச்சிர காயமாய்
வழித்துப் பரணியில் வைத்து விரையெடே. 489

எடுத்து விதையை யிதமா யுலர்த்தியே
அடுத்து நொருக்கி அள்ளிடும் பானையில்
படுத்திடு சட்டிப் பானை யளவதாய்
நடுத்தரமாக நாட்டிக் கமழிடே. 490

நாட்டித் தமரிட்டு நன்றாய் மண்சீலைசெய்
வாட்டி மண்சீலை வளமா யுலர்ந்தபின்
தாட்டிக மாகத் தனதாய்ப் புடத்திலில்
நீட்டித் தயிலம் நினைவாய் வடித்திடே. 491

வடித்த தயிலம் வளமான குப்பியில்
கொடுத்து நீமுடிக் குருவடி வணங்கிடு
அடுத்த கடுக்காய் சூரணந் தன்னிலே
அடுத்த தயில மடைவா யெடுத்திடே. 492

அளவென்ன சூரண மாகு மிருவிரல்
பிலமான தயிலம் வேணு மொருவிரல்
நலமா யெடுத்து நன்றா யுருட்டியே
செலமான நாவில் செலுத்தி முழுங்கிடே. 493

செலுத்தி முழுங்கித் திரமான மண்டலம்
அழுத்தமாய்க் கொண்டு அருளை வணங்கிடு
சலித்த மலமுஞ் சலமு மொன்றாக
நெளித்த பழுவுட னேரா யிறங்குமே. 494

நேரா யிறங்கி நிலைக்கு முள்வாசியுஞ்
சீராக நின்று சித்து வளர்ந்திடும்
பேரான நாசியில் பிலத்து நிலைத்தது
கூறான மூலங் குடியிருப் பாகுமே. 495

இருப்பான வீடு ஏக மிருதயம்
குறிப்பான மூலங் குண்டலி சத்தியாம்
நெருப்பான சத்தியை நினைவாய் வணங்கினால்
நெருப்பான தில்லை [illegible] 496

## காயாதி கற்பம்

காயாதி கற்பங் கருவொன்று சொல்கிறேன்
மாயாதி மூலமும் வளருமுள் மூலமும்
ஓயாத சத்தியொளி கொண்ட மூலமுஞ்
சாயாமல் மூன்றுந் தனக்குள் பார்த்திடே. 497

பார்த்திடும் ரவிமதிப் பகருஞ் சுடருடன்
சேர்த்திடு மொன்றாய்த் திறமான கல்வத்தில்
நீர்த்திடு நாத நீர்வளங் கொண்டரைத் ததை
போற்றி வழித்துப் பொருந்தத் திரட்டுமே. 498

திரட்டி ரவிதனிற் சீரா யுலர்ந்தபின்
உருட்டும் வட்டோட்டி லொடுக்கி மண்சிலைசெய்
சுருட்டி ரவிதனில் சுண்டி யுலர்ந்தபின்
மருட்டிய மாய்கையை வணங்கிப் புடமிடே. 499

வணங்கிப் புடமது வைத்திடுங் குக்குடம்
இணங்கி மும்மூல மிறுகி மலர்ந்திடும்
வணங்கி யெடுத்து வடிவான செம்பினில்
இணங்கி யதனை யியல்பாய்ப் பொசித்திடே. 500

பொசித்திடும் பணவிடை பொருந்து மதுவினில்
வசித்திடும் வாதமும் வளாய்ய பித்தமும்
நசித்து நடுங்கி நமனும் விலகிடும்
பசித்திடும் பூரணப் பற்பத்தின் தன்மையே. 501

தன்மை பொருந்துந் தனுவான தேகத்தில்
உண்மை ரசவற்க மூட்டு முறுதியாம்
நன்மையாய் நின்று நாடு சுரூபத்தில்
புன்மை யடவைப் பொருந்தி யுறிந்திடே. 502

அறிந்த மனத்தா லாதி திறப்படும்
அறிந்த மனத்தா லந்தந் திறப்படும்
அறிந்த மனத்தை அன்புடன் பொருந்தினால்
விரித்திடும் வாசி விசையி லொடுங்குமே. 503

சாரச் சுன்னம்.

ஒடுங்கிய தேக முறுதி திறம்பட
அடங்கிய பற்ப மறிந்து வுணர்ந்திடு
துடங்கிய சாரச் சுன்ன மருந்தினால்
மடங்கிய அத்தி வலுக்குந் திண்ணமே. 504

திண்ணமாய் மண்டலஞ் செலுத்திடு சாரத்தை
உண்ணப் பயந்து ஒடுங்கி யிராதே
வின்னங் களில்லை விரசுக் கொடுத்திடு
அண்ண லெனக்கு அருளின வாறே. 505

வெடியுப்பு சுன்னம்

வார்வெடி யுப்பு வளருமிச் சுன்னத்தை
காரிரு மண்டலங் கசிந்து வுணர்ந்திட
சீர்சதை மாங்கிசந் திரமாய் வலுத்திடும்
பார்நீர்ப் பணைப்புப் பதையா திருக்குமே. 506

இருக்குமே தேகமெந்த நாளாகியும்
உரைக்குமோ வாசி யுண்மை திறப்படும்
பறக்கும் நரைதிரைப் பாரில் பசளையாம்
சிறக்குமே தீபஞ் சிவாநந்தி மூலமே. 507

கல்லுப்புச் சுன்னம்

மூலங் கல்லுப்பு முடித்திடுஞ் சுன்னத்தை
காலமே மண்டலங் கருதி யுணர்ந்திட
சாலமே நரம்புத் தானுந் திருகிடும்
ஞாலமாந் தேகம் நலியா திருக்குமே. 508

காரச் சுன்னம்

நலியாத காரம் நாட்டிய சுன்னத்தை
எளிதாக மண்டல மெடுத்திடு தேகத்தில்
பழியான பித்தநீர்ப் பலனைப்புத் தெறித்திடும்
நெளியாது வாசி நேர்நிலை யுண்மையே. 509

சீனச் சுன்னம்

உண்மையாஞ் சீன முருகிய சுன்னத்தை
நன்மையாய் மண்டலம் நாடி யுணர்ந்திடும்
வெண்மை சிலேஷ்பனம் விளையா தறுத்திடும்
தன்மை யிதென்று சார்ந்திடு மூலமே. 510

தங்கச் சுன்னம்

மூலமாந் தங்க முகிழ்ந்திடுஞ் சுன்னத்தை
சாலவே மண்டலந் தானது வுண்டிடக்
கோலமாம் வாதங் கொடிய நீரற்றிடுந்
தூலமே யில்லை சுருக்கிடுந் தேகமே. 511

வெள்ளிச் சுன்னம்

தேகமாம் வெள்ளி செப்பிய சுன்னத்தை
ஆகமாய் மண்டல மறிந்து வுணர்ந்திட
தாகமா மூலந்தனில் சூடறுந்திடும்
வேகமாந் தேகம் விலைகொண் டிருக்குமே. 512

இருக்குமுன் தேகம் ஏகாந்த போதமாம்
இருக்கு முன்தேக மென்றுஞ் சிறுபிள்ளை
இருக்க நடக்க இளைபாதொரு நாளும்
கருக்கு மயிருங் காலனு மில்லையே. 513

அயச் சுன்னம்

காலா மிரும்புக் கருவான சுன்னத்தை
நாளெண்ணி மண்டலம் நயமாய்ப் பொசித்திட
தோலமாம் தசைவாயு கூடி லகன்றிடும்
மாலாம் வயசு மகாகோடி காலமே. 514

காந்தச் சுன்னம்

காலமே நீயுங் காந்தநல் சுன்னத்தை
பாலுடன் கூட்டிப் பருகிடு மண்டலம்
மேலுடன் காந்தலும் வெக்கை வெதுப்புடன்
தூலையும் பாண்டுந் துலைக்குங் கிராணியே. 515

கிராணியுஞ் சோகையுங் கண்கண்ட மாலையுந்
தீராத ஈளையுந் திறமான குன்மமும்
பேரான காந்தம் பெருமையைக் கண்டதே
நேராக நின்ற நிலையை விட்டோடுமே. 516

நாகச் சுன்னம்

ஓடுமே நாக மொடுங்கிய சுன்னத்தை
ஆடுடன் பாலில ருந்திடு மண்டலம்
கேடாங் கிராணி கிளம்பிய மூலமும்
வாடாப் பவுத்திரம் வளரஞ்சு குட்டமே. 517

குட்ட முடனே கொடிய வியாதிகள்
நட்ட மென்றெண்ணி நடுங்கி அடங்கிடும்
இட்டமாய் நாக மியங்கிய பற்பத்தால்
துஷ்ட வியாதிகள் துடரா திருக்குமே. 518

வங்கச்சுன்னம்

இருக்குமே வங்கத் தியல்பான சுன்னத்தை
கருத்துடன் வெண்ணெயில் காலமே மண்டலம்
திருத்தமாய்க் கொண்டு தீர்கமாய் நின்றிட
உருக்கும் வியாதியுடன் மேகந் தீருமே. 519

தீருமே மேகந் தினவு வரட்சியும்
வீறுடன் கைகால் வெளுப்புக் கறுப்புடன்
கூறுடன் தேகங் கொடிய தோர்காந்தலும்
வேறுட னற்று விலகி யொடுங்குமே. 520

### கார்வங்கச் சுன்னம்

ஒடுங்குங் கார்வங்க முருகிய சுன்னத்தை
அடங்கிநீ மண்டலம் அருந்திடு தேனினில்
முடங்கிய மேகம் மூச்சு சுவாசமும்
இடங் கெட்டோமென்று எழுந்திருந் தோடுமே. 521

ஓடும் விப்புருதி யொடுக்கும் பரங்கிகள்
நாடுங் காவம் நடுங்கிய சூலையும்
தேடுங் கைகாலில் திருகிய புத்துடன்
வாடி நடுங்கி மயங்கிக் குறிக்குமே. 522

### மூலிகையின் பெயர்

குறிநின்ற மூலிகை கூறினோ மெட்டெட்டுத்
தறிகின்ற மூலி தானதில் பத்துண்டு
நெருக்குங் கருநெல்லி நேர்சோதி விருட்சமும்
கருக்குங் கொடிவேலி கல்த்தாமரை யென்னே. 523

என்னுங் கருத்தாழை யேரும் போற்சீந்தியும்
சொன்ன கருநீலி சொர்னத் திராயுடன்
சன்னவா முண்டகஞ் சாயா விருட்சமும்
உன்னிய மூலிகை யொடுங்கிய பத்துமே. 524

பத்தான மூலிகைப் பாரும் பொதிகையில்
சித்தாதி கூட்டஞ் சென்றிடப் போகாது
பத்தாசை கொண்டு பார்க்கநீ வேண்டினால்
சித்தாதி தன்னிடம் சேர்ந்து வ்ணங்கிடே. 525

### கருநெல்லி

வணங்கி நிலைநின்றால் வாவென் றழைத்துப் போய்
இணங்கிய மூலிகை யின்பமாய்க் காட்டுவார்
மனங் குவிந்தந்த மார்க்கமாய்க் கண்டபின்
வணங்கு கருநெல்லி மார்க்கமாய்ப் பார்த்திடே. 526

வளமையைக் கண்டு வரிசையாய் மண்டலம்
நலமையாய்க் கொண்டு நாட்டங்கள் பெற்றிடு
இளமையாம் தேகம் ஏறுங் கெவனமும்
தலைமையாங் கொடிமுடித் தானமுங் காணுமே. 527

காணுஞ் சதுர கிரியது தன்னுளே
தோணுஞ் சுடரொத் தூண்டாத் தீபமும்
பேணுநீ நின்ற பெருமையைக் கண்டபின்
கோனவன் கண்டு குறிகாட்டு வானே. 528

குறிகண்ட போதே கூடுஞ் சிவயோகம்
அறிகின்ற கற்ப மனைத்து மகாசித்தி
நெறிநின்ற வாதமும் நேராம் வசியமும்
தெரிகின்ற போதே சிவசித்த னாமே. 529

சித்தான மூலியின் சித்துக ளுண்டதில்
பத்தான மூலியில் பலித்திடும் லோகங்கள்
சத்தான சரக்குகள் தானே வணங்கிடும்
ஒத்தாசை யாக வுரைக்கிறேன் வாதமே. 530

வாதமும் வசியமும் வகையுடன் சொல்லுகிறேன்
நீதமாய்க் கண்டு நிலைமை யறிந்திடு
நாதம் ஒடுங்கும் நடுநிலை தன்னிலே
போதமாய் நின்ற பொருளை யறிந்திடே. 531

பொருளை யறிந்திடப் பொருந்துஞ் சிவயோகம்
பொருளை யறிந்திடப் பூரணந் தேகமாம்
பொருளை யறிந்திடப் போகா தொருநாளும்
பொருளுக்குள் சித்திப் போற்றி மகிழ்ந்திடே. 532

## வாத முறை

மகிழ்ந்துமுன் சொன்ன வைப்புச் சரக்கதில்
பகுந்திடு வேதைப் பண்பதைக் கேளு
அகந்தனி லுப்பு ஆதி லவணமும்
முகந்திடு லவண முகில் பாஷாணமே. 53

பாஷாண வுப்புப் பதிவுடன் வாங்கி
ஆசாரமாக அன்னிரில் சுத்திசெய்
பேசாமல் வாசி பின்னது கூட்டியே
ஊசாரந் தன்னி லுருக அரைத்திடே. 53

அரைத்திடு வில்லையை அன்புட னோட்டினில்
அரைத்து மண்சீலை அழுத்திப் புடமிட
விரைத்துடன் லவணம் வெந்து வுருகிடும்
நிறத்துடன் லவணம் நேருடன் லிங்கமே. 53

லிங்கமும் லவணமும் நேருட னாட்டியே
அங்கமா யுருட்டு அப்படிப் புடமிடப்
பங்கம் வாராமல் பதிய வுருகிடுந்
தங்க மதுக்குச் சரியிடை தாக்கிடே. 53

தாக்கிய குகையில் சதிரா யுருக்கியே
பாக்கியம் வேண்டில் பதித்திடும் வெள்ளியில்
ஆக்கிய வெள்ளியில் அதில்பத்தி லொன்றிட
தீர்க்கமாந் தங்கந் தெசமாற் றிருக்குமே. 53

இருக்குங் குடவனில் எட்டரை மாற்றுமாய்
நெருக்கிய செம்பினில் நேரது ஆறதாம்
பெருக்கிய [illegible] கொடுத்திடு 53
திருக்கப் பத்துமேல் சென்றிட ஆறதே.

சென்ற களங்கில் சேர்பாதி கெந்தம்
நின்றதோர் வீரம் நீட்டிப் பொடித்திட்டு
வின்றதில் செயநீர் விடுத்தரைத் துருட்டியே
அண்டமா மோட்டி லடக்கிப் புடமிடே. 539

புடமிட்டுப் பாரு பொருமிச் செந்தூரமாம்
நடமிட்ட வெள்ளியில் நாட்டிடு வொன்று
திடமிட் டுருக்கித் தெளிந்தபின் பார்த்திடு
தடமுத்த தங்கந் தன்வய திருபதே. 540

இருளுரை செம்பி லேற்றிடு நூற்றொன்று
கருவுடன் மாற்றுக் கரைபதி னாராம்
உருவுடன் வங்கத்தி லூதிட ஏழுரை
தருவுடன் குடவனில் சாதிக்கப் பத்துமே. 541

பத்தியாய் நித்தம் பணவிடை கொண்டிட
நித்தியமாக நிலைத்திடுந் தேகமுஞ்
சித்தியு முத்தியுஞ் சேர்ந்து திடப்படும்
மூத்தி பெருகி மூதண்டங் காட்டுமே. 542

நாக பாஷாணம்

காட்டுமே நாகம் கதித்த பாஷாணத்தில்
நாட்டிய வுப்பு நன்றாய்ப் பொடித்திட்டு
ஆட்டிய செயநீ ரதுவிட் டரைத்துடன்
கூட்டி யுருட்டிக் குணமாய்ப் புடமிடே. 543

குணமுட னாகங் குழன்று வுருகிடும்
இடமுடன் தங்க மீந்து வுருகிடும்
திணமுடன் ரெண்டும் சேர்ந்து வுருகியே
கனமுட னாகங் களங்க துவாமே. 544

களங்கது தன்னைக் காட்டிடு வெள்ளியில்
நலங்கொடு பத்தில் நாட்டி யுருக்கிடப்
பலங்கொண்டு வெள்ளிப் பழுத்திடும் பத்தரை
குலங்கொண்ட குடவனில் கூட்டிடுங் தங்கமே. 545

தங்கமாஞ் செம்பினில் தாக்கி யீரஞ்சுடன்
அங்கமா மாற்று அதிகம் புடத்தினில்
சங்கை யுடனே தானே பழுத்திடும்
எங்கும் இருந்து இருகச் செந்தூரியே. 546

கெந்தக பாஷாணம் களங்கு செந்தூரம்

செந்தூர மாகச் செப்புவேன் கெந்தகம்
அந்தமாம் வீர மதினிடை களங்கையுஞ்
சொந்தமாக் கூட்டிச் சுருள அரைத்திடு
விந்துநீர் தன்னால் மேவி யுருட்டிடே. 547

உருட்டி ரவியி லுலர்ந்தபின் ஓட்டினில்
கருத்துடன் மூடிக் கதிக்கமண் சீலைசெய்
உருத்துடன் படத்தி லொடுக்கி யெடுத்தீட
திருத்தமாய் நின்று செந்தூர மாகுமே. 548

ஆகுமே வெள்ளி யயர்த்திடு நூற்றொன்று
பாகமாய் நின்று பழுத்திடுங் தங்கமாய்
தாகமாய் வங்கத்தில் தடவிப் புடமிட
வாகுடன் கட்டி வலிந்து பழுக்குமே. 549

பழுத்திடும் லோகம் பத்தரை தப்பாது
அழுத்தமாய் நீயும் ஆசி பணயிடை
செலுத்திடுங் தேகத்தில் சிறுகதி ரோடிடும்
நெளித்திடும் வாசி நேர்மையை புக்குமே. 550

புக்குமே கெந்தகம் பொருந்திப் பாஷாணம்
சைக்குமே வேதை சமர்த்ததில் மெத்தவாம்
சிக்கிய வுப்புத் திறமான கெந்தியும்
ஒக்கவே கூட்டி யுருக அரைத்திடே. 551

அரைத்திடுஞ் செயநீ ரன்புடன் வில்லைசெய்
திறத்துட னோட்டில் செலுத்திப் புடமிடு
நிறத்துடன் கெந்தி நேரா யுருகிடும்
வரத்துடன் தூக்குநேர் வளர்தங்கஞ் சேர்த்திடே. 552

சேர்த்து வுருக்கத் திறமா யுருகிடுஞ்
சாத்திய கெந்தி சத்தத் திறமது
போற்றிய வெள்ளியில் பெருந்தா யிரத்தொன்று
மாத்து சகஸ்திர மார்க்கமென் சொல்லுவேன். 553

சொல்லுவேன் செம்பினீல் சொல்ல முடியாது
வெல்லுவேன் குடவனில் வேண்டிய மாற்றுமாம்
தல்லுறவார் வங்கஞ் சகஸ்திரத் தோன்றிட
துல்லிய மாற்று தோணக் கண்கூசுமே. 554

கூசுமே கெந்திக் குருவாங் களங்கத்தில்
நேசமாய் வீரமும் நேர்சரி கூட்டியே
வாசமாய் நீரில் வணங்க அறைத்ததை
தேசுவை நோக்கித் திடமாய் வழித்திடே. 555

வழித்திடு வில்லைபோல் வளமா யுலர்த்திடு
அழுத்திய ஓட்டில் வைத் தன்புடன் மண்ணிடு
குலத்துட னெருவைக் கொட்டிப் புடமிட
செழித்திடுங் கெந்தி செந்தூர மானதே. 556

ஆன செந்தூர மளவற்ற வேதையாம்
தோணவே லோகத்தில் தொட்டுத் தடவியே
ஆனதோர் தீயி லழுத்திக் கொளுத்தினால்
காணவே மாற்றுக் கணக்கது இல்லையே. 557

எல்லையை நோக்கி யிருந்து நீபூசித்து
நல்ல செந்தூரத்தில் நலமாய்ப் பணவிடை
கொள்ளவே தேகங் குறுகா தொருநாளும்
உள்ளவே யுள்ளி யொருகோடி யுள்ளியே. 558

துருசு பாஷாணம் களங்கு செந்தூரம்

உள்ளிய துருசு வுகந்த பாஷாணத்தை
ஆளித்த வுப்பு அதில்சூதங் கூட்டியே
வாளித்த நீரில் வணங்க அரைத்திடு
பாளித்துக் கூட்டிப் பதிவாய்ப் புடமிடே. 559

பதிவாய்த் துருசுப் பணஞ் சூதமுப்புஞ்
சதிராகக் கூட்டித் தானே யுருகிடும்
ததியான தங்கந் தானது சரியாய்
மதியுடன் கூட்டி மனதா யுருக்கிடே. 560

உருக்குங் களங்கம் உகமையென் சொல்வேன்
பருக்கிய வெள்ளி பத்தது தூக்கி
உருக்குங் களங்க மொன்றது தாக்க
நெருங்கிய மாற்று நேர்அம்பதாமே, 561

அன்புடன் செம்பினி லறுபத ரையதாம்
பண்புடன் குடவனில் பத்தரைக் காணும்
செம்புடன் லோகமுஞ் சேரப் பழுத்திடும்
நப்புங் களங்கத்தை நன்றாய்ச் செந்தூரியே. 562

நன்றாங் களங்கிடை நாட்டிடு கெந்தகம்
பண்டான வீரனும் பதியப் பொடித்திடு
குன்றாக நீரில் குணமா யறைத்திடு
சுண்ட வழித்துச் சுருள வுருட்டியே. 563

சுருள வுருட்டி சுகமா யுலர்ந்தபின்
அருளான வோட்டி லடக்கி மண்சீலைசெய்
மருவான சோதியை வணங்கிப் புடமிட
வுருவாஞ் செந்தூர முறுதியாய்க் காணுமே. 564

உறுதியாய் வெள்ளியிலொரு நூற்றுக்கொன்றிட
வுறுதியாய் நின்று வொளிகொண்ட தங்கமாம்
திருதிய லோகமுஞ் சேரப் பழுத்திடுங்
தருவிய வங்கத்தில் தடவிப் புடமிடே, 565

தடவிப் புடமிடத் தானே பழுத்திடுங்
குடவனு மிப்படிக் கூர்மையாய்க் கண்டிடும்
திடமுடன் மண்டலந் தின்னும் பணவிடை
அடவுட னுச்சி அசையா திருக்குமே. 566

தாளகக் களங்கு

இருக்கின்ற தாளக மென்னென்று சொல்லுவேன்
உருக்கிய வுப்பும் ஊன்றிடும் பச்சையும்
நிறுத்துடன் கூட்டி நின்றநீர் விட்டரை
கருக்குட னரைத்துக் கருவாக வட்டிடே. 567

வட்டது வோட்டில் வரைந்துமண் சீலைசெய்
திட்டமாய்ப் புடத்தில் செலுத்தி அனலிடு
இட்டமா யுருகி யிருக்கும் நல்லீயமாய்
யிட்டமாய்த் தங்கம் வைத்து யுருக்கிடே. 568

உருக்கு மிடையது ஓடா திருக்குமே
திருக்கென்ன வெள்ளியில் சேர்ந்திடு

நூற்றொன்று
அருக்கனும வெள்ளியும் அமர்ந்து வுருகினால்
சுருக்கென்ன மாற்றது சொல்ல ஒண்ணாதே. 569

சொல்லாத சோதித் துலங்கிடுஞ் செம்பினில்
நல்லாப் பழுத்திடும் நாடுங் குடவனில்
உள்ளாங் களங்கதிலு டன்சேரு கெந்தம்
தள்ளாத வீரனுந் தாக்கிப் பொடித்திடே. 570

பொடித்திட்ட நீரில் பொன்ற அரைத்திடு
அடித்திட்ட வில்லைபோ லாக்கி யுலர்த்தியே
வடித்திட்ட செப்பில் வைத்துப் புடமிட்டு
எடுத்துப் பார்சோதி யேகச் செந்தூரமே. 571

ஏகச் செந்தூரம் எடுத்திடு வெள்ளியில்
காகமாய் நூற்றில் தாக்கி யுருக்கினால்
வேகமாய் மாற்று வேணது தானுண்டு
ஆகமாய் வங்கத்தி லழுத்திப் புடமிடே. 572

புடமிடத் தங்கம் புடத்தங்க மாயிடும்
திடமான லோகத்தில் சேர்த்த நல் லேமமாம்
விடமான செந்தூரம் விரும்பிப் பணவிடை
யிடமான மாக வுண்டு மண்டலமதே. 573

மண்டலங் கொண்டிட் மாயவ னாகுவாய்
கண்டிடுந் தேகங் கதிர்போ லொளிவிடும்
எண்டிசை முழுது மேக கெமனமாய்
அண்டர்கள் போற்ற அருபமு மாகுமே. 574

பாஷாணக் களங்கு

அருபமாய் வீர மடங்கும் பாஷாணத்தில்
கருவான வுப்புங் காரமுங் கூட்டியே
வுருவான நீரி லுகந்தரைத் துண்டைசெய்
கருவான ஓட்டில் வைத்துப் புடமிடே. 575

புடமது கட்டிப் பொருந்த வுருக்கியே
திடமுள்ள தங்கஞ் சேருஞ் சரியிடை
அடவுடன் குகையி லமர்த்தி யுருக்கிட
விடமுள்ள தங்கமும் வீரமுங் கூடுமே. 576

கூடி யுருகுங் குருவாங் களங்கத்தை
நாடிய வெள்ளி நயந்திடு மன்பதில்
சாடி யுருகத் தங்கம தாகிடும்
வாடி யிராதே வளர்செப்பில் தாக்கிடே. 577

தாக்கிடு செம்புத் தானே பழுத்திடுந்
தாக்கிட லோகத்தில்தானே யணைத்திட
பாக்கியமாகிப் பழுத்திடும் வேதையாம்
பாக்கிய மென்று பதியி லிருந்திடே. 578

பதிவன்றி நீயும் பார்த்து மகிழ்ந்திட்டால்
நிதியொன்றுங் காணா நினைவு மழிந்திடும்
மதியுடன் விதியையும் வணங்கிப் பார்த்திடில்
விதிமதி யொன்றால் விளங்கிடுந் திண்ணமே. 579

திண்ணமாய் வீரம் செலுத்துங் களங்கத்தில்
உண்ணிய கெந்தியு முடன்வீரங் கூட்டியே
வன்னிய நீரில் வலுவா யரைத்திட்டு
மின்னிய வட்டாய் விளங்கிப் பிடித்திடே. 580

பிடித்திடு வட்டைப் பெருகிய செம்பினில்
அடைத்துப் புடமதி லன்புடன் வைத்திடு
வுடைத்திடு மருந்து உருகிச் செந்தூரமாம்
திடத்துடன் வெள்ளியில் சேர்த்திடத் தங்கமே. 581

தங்கமாம் வங்கத்தில் தடவிப் புடமிட
மங்கள மாக மறுகிப் பழுத்திடும்
அங்கமாய்ச் சுன்னம் அமைத்திடும் வாக்கியம்
எங்குங் கிடைக்குமோ ஏகாந்த தீபமே. 582

ஏகாந்த மாகி யிருக்குஞ் செந்தூரத்தை
ஏகாந்த மாக இருந்து பொசித்திட
ஏகாந்த தீப மென்னென்று சொல்லுவேன்
ஏகாந்த வாசி யிருதய மூலமே. 583

கெவுரிப் பாஷாணம்

மூலங் கெவுரி மொழிந்த பாஷாணத்தில்
சாலவே யுப்புத் தன்னொடு பச்சையுஞ்
சீலமாய்க் கூட்டி சேர்த்தரை விந்துவில்
பாலமாஞ் செப்பில் பதித்துப் புடமிட. 584

பதித்துப் புடமிடப் பருவமாய்க் கட்டிடுங்
கதித்திடு தங்கங் காட்டுஞ் சரியிடை
விதித்திடுங் குகையில் விளங்க வுருக்கிட
துதித்தது ஒன்றாய்த் துலங்க வுருகுமே. 585

துலங்குங் கெவுரித் தோன்றுங் களங்கதாம்
பலங்கண்டு லோகத்தில் பாச்சிடத் தங்கமாம்
களங்கத்தில் கெந்தியுங் கட்டிய வீரமும்
மலங்கவே கட்டி மாட்டிப் பொடித்திடே. 586

மாட்டிப் பொடித்து மடங்க அரைத்திடு
தீட்டிய நீரில் திரட்டி யுருட்டியே
நாட்டிடு செப்பில் நயந்து புடமிட
வாட்ட மில்லாமல் வளருஞ் செந்தூரமே. 587

வளர்ந்திடு லோகத்தில் மாட்டு செந்தூரத்தை
உலர்ந்திடு மேருவி லொடுக்கிப் புடமிட
பலந்தரும் லோகம் பழுக்குந் தங்கமாங்
கலந்திடு முத்திக் கருணையில் நின்றிடே. 588

நின்றிடும் வெள்ளை நிலைத்த பாஷாணத்தில்
கொன்றிடு முப்புக் கூர்பச்சை வீரனும்
ஒன்றதாய்க் கூட்டி யுருட்டி யரைத்திடு
சென்றிடும் விந்துவில் சேர்த்தரைத் துருட்டியே. 589

வெள்ளைப் பாஷாணம்

உருட்டிக் குகையி லுறுதிப் புடமிட
மருட்டிய வெள்ளை மயங்கி யுருகிடும்
திருட்டில்லா வெள்ளிச் சேரு சரியிடை
மெருட்டிய வெள்ளியும் வெள்ளையுங் கூட்டுமே. 590

கூட்டி யுருக்கிக் குணமாய்க் களங்கதாம்
நாட்டிய செம்பில் நாட்டிடு நூற்றொன்று
தேட்டி யுருக்கத் தெவிட்டாத வெள்ளியும்
சூட்டிக் களங்கத்தில் சூதமுஞ் சேர்த்திடே. 591

சேர்த்திடு வீரந் திரமாய்ச் சரியிடை
நேர்த்தியாய்க் கூடி நிலைத்திடு விந்துவில்
போற்றி யரைத்து போடு புடத்தினில்
ஆற்றி யெடுக்க அதிகமாம் பற்பமே. 592

பற்ப மெடுத்துப் பதிவான செம்பினில்
உற்பன மாக வுருக்கி நூற்றொன்றிட
அற்புத மாகி அலர்ந்து வெளுத்திடும்
தப்பித மில்லை தானான வெள்ளியே. 593

தானான வெள்ளி தான்கயி லாசமாம்
பூணாத மாற்றுப் புகழா யிரத்தெட்டு
தேனான வங்கஞ் சேர்த்துக் குகையிலே
கோணா துருக்கக் குருபற்பம் போட்டிடே. 594

பற்ப மதனில் பதித்த வுடனேநீர்
உற்பன மாக வுறுஞ்சி யுருக்கிடும்
அற்புத மான ஆன வெள்ளீயமும்
விற்பனமாங் குரு வெள்ளியு மானதே. 595

வெள்ளி யென் றெண்ணி மேவி யிராதே
தெள்ளிய செம்பில் செந்தூர மொன்றிட
துள்ளிய மாற்று சொல்லவும் போகா
தள்ளிய லோகந் தானிது வாகுமே. 596

## ரசசிங்கி

தான்ரச சிங்சித் தன்னுடன் பெருமைகேள்
வீரனுங் கெந்தி விசையரி தாரமும்
பேருந் துருசுப் பெருலிங்க வீரமும்
பூணு மகாவுப்பும் பொருந்தேழுங் கூடியே. 597

கூட்டி யரைத்திடு குருவான செயநீரில்
நாட்டி யறைத்து நன்றாய் வழித்திடு
மூட்டிடு வில்லைபோல் பொருந்தவே செய்து
வாட்ட ரவியில் வைத்து யெடுத்திடே. 598

எடுத்திடு வில்லை யிதமான செப்பினில்
அடைத்துப் புடமிட அன்புட னுருகிடும்
கொடுத்திடுந் தங்கங் கூட்டுஞ் சரியிடை
விடுத்திடு குகையில் வேண்டி யுருக்கிடே. 599

உருக்குங் களங்கத்தி லுடன்சேருங் கெந்தகம்
நெருக்கிய வீரமும் நேர்சரி காரமும்
திருக்கறக் கூட்டிச் சேர்த்தரை விந்துவில்
கருக்குள்ள நாதநீர்க் கருவும் விட்டாட்டிடே. 600

ஆட்டுங் கமலை யமர்ந்திடும் பாலிலே
நாட்டி யரைக்க நல்ல மெழுகதாம்
கூட்டி யுருட்டிக் குணமா யெரித்திடு
தீட்டும் பரிசனம் தீபமுந் தூபமே. 601

தூபிகள் போல்நவ லோக மடக்கியே
தாபித மான மண் தானது பூசிப்பின்
நாபி கமலத்தில் நல்தணல் வைத்துமேல்
கோபிதமாகக் கொடுத்திடு மெழுகதே. 602

மெழுகதில் செல்ல மேலே புகையெழும்
பலுகணி வாசல்ப் பார்த்து அடைத்திடு
நெகிழிடும் புகையில் நேரான லோகமும்
அழுகிப் புழுகி அழன்று பருக்குமே. 603

அழன்ற மெழுகதி லன்பா யெடுத்துநீ
தழன்றிடு மேனியில் தானே தடவிடு
வுழன்றிடுந் தேகம் முறுதிய தாகிடும்
கழன்ற நரம்புக் கடுக விறுகுமே. 604

இறுகிடுந் தேகத் திருந்த அழுக்கதைப்
பருகி யெடுத்துப் பாச்சிடு வெள்ளியில்
சொருகி லப்பழுக்குஞ் சொருப மெழுகது
மறுகி யிராதே மார்க்கத்தில் நின்றிடே. 605

மார்க்கமாய் நின்று மலையினில் சஞ்சரி
தீர்க்கமாஞ் சித்தர்கள் செய்த பொருளுகள்
பார்க்கப் பளீரெனும் பருமலை போலவே
ஏற்கையாய் நின்று எளிதாகப் பார்த்திடே. 606

எளிதாகப் பார்த்து ஏகமா மம்பரம்
நெளிதாக நீயும் நின்றதை ஆசித்தால்
வழியோடே சித்தர் வந்து வுனதிடம்
பழியா துயிரைப் பயிற்றுவார் பார்த்திடே. 607

அஞ்சன பாஷாணம்

பார்த்திடு மஞ்சனப் பாஷாணந் தன்னையே
கார்த்திடுந் தொட்டியுங் கற்பரி கார்முகில்
சேர்த்திடும் லிங்கஞ் செலாமத அஞ்சனம்
போற்றிட ஆறும் பொருந்தொன் றாய்கூட்டிடே 608

கூட்டிய சட்டிக் குமுறவே காய்ந்தபின்
போட்டு வறுத்திடு பொருந்த வாய்நீர்விட்டு
நாட்டி வருகையில் நற்சரக் காகுமே
வாட்டிக் கருக்க வலுவாய் சிவக்குமே. 609

சிவந்த சரக்கைத் திரமான கல்வத்தில்
சிவந்த நீர்விட்டு சேர்த்தரை சாமந்தான்
சிவந்த முலைப்பாலுந் தேனு மொன்றாக்கியே
சிவந்தனை நோக்கி சேர்த்தரை மையதாம். 610

மையான மையை மார்க்க மறிந்திலார்
மையான மையை வழித்துச் சிமிழில்வை
மெய்யான தேவி வளரஞ்சனா தேவி
மையமாய் நின்று வழிகாட்டு வாளே. 611

வழியென்ன வென்றால் மையான மையாம்
நெளிதான மையை நெற்றியில் பொட்டிடு
சுழியோடே நின்று சுழட்டி நீ பார்த்திட
தெளிவாக பூமி திறக்குங் கண்பார்த்திடே. 612

பார்த்திடு மேலே பதிவா யிருந்துநீ
பார்த்திடும் போதில் பகலே நட்சத்திரம்
பார்த்திடத் தோணும் பதிகோடி நாதமும்
பார்த்திடக் கிட்டப் பதிவா யிருக்குமே. 613

பதிவான நெய்யில் பதித்து மைதீட்டியே
பதிவாய்த் திலதம் பதித்து மலையின்மேல்
பதிவாக வேறிப் பதம்பெறச் செய்கையில்
பதிவா யிருக்கும் பாருயிர் பயிருமே. 614

உயிருடன் பயிரு முகந்து வசியமாம்
பயிருடனுயிரும் பகுந்துற வாகினால்
வெயிலுடன் பனியையும் விரும்பி யிருக்கலாம்
பயிலுடனோயிலாய்ப் பார்மலை கண்டிடே. 615

லிங்க பாஷாணம்

கண்டிடு மிலிங்கங் கதித்த பாஷாணத்தில்
விண்டிடுங் கெவுரி விளங்கிய பச்சையும்
நின்றதோ ருப்புநேர் சரிக்கூட்டியே
சுண்டிய நீரில் சுற்றி அரைத்திடே. 616

சுத்தி யரைத்துச் சுருள வழித்துமே
பத்தி யுடனே பதிவா யுருட்டிடு
வெற்றி ரவியில் விசையா யுலர்ந்தபின்
சித்தம் பெருகிடச் சேர்த்திடுஞ் செப்பிலே. 617

செப்பி லடக்கித் திடமாய்ப் புடமிட
ஒப்புர வாக வுருகித் திரண்டிடும்
அப்புறந் தங்க மதுக்கிடை சேர்த்துநீ
மெய்ப்பாய்க் குகையில் விரும்பி யுருக்கிடே. 618

உருக்கிய சத்து முடனின்ற தங்கமும்
நெருக்கி யுருக்கி நேராய்க் களங்கமாந்
திருக்கிய களங்கஞ் சேர்த்திடு வெள்ளியில்
பெருக்கிய மாற்று பேச ஒண்ணாதே. 619

ஒண்ணான களங்க முடைத்து நொருக்கியே
கண்ணான கெந்தியுங் காரமும் வீரமும்
திண்ணமாய்க் கூட்டி சேர்த்தரை விந்துவில்
உன்னி வழித்து வுருட்டித் திரட்டிடே. 620

திரட்டி ரவியில் சிக்கெனக் காய்ந்தபின்
உருட்டியே செப்பி லொடுக்கிப் புடமிடு
நெருட்டி மடங்கி நேராய்ப் பொருமியே
சிறுத்து சிவந்து செந்தூர மாகுமே. 621

ஆகுஞ் செந்தூர மளவற்ற வேதையாம்
பாகுடன் நீயும் பணவிடை மண்டலம்
வாகுடன் கொண்டு மனத்தை நிறுத்திட
தேகம் நிலைத்து திறமாங் கெவுனமே. 622

### உவருப்புச் செந்தூரம்

திறமாய் வகுப்பில் சிவக்கு முறமைகேள்
நிறமா யிலிங்கமும் நேர்பச்சை தாரமும்
உறமா மயத்தொட்டி யொடுங்கிய கெந்தியும்
வயமான காரமும் வல்வீரங் கூட்டிடே, 623

கூட்டி யொன்றாகக் குமுறப் பொடித்துநீ
நாட்டிடு வாய்நீரில் நன்றாய்ப் பிசரியே
தாட்டிகமாகத் தானயச் சட்டியில்
போட்டு நிலையாய்ப் பொறுந்த வறுத்திடே. 624

வறுத்திடும் போதில் வளமாய்க் கறுத்திடுங்
கறுத்திடுஞ் சரக்குக் கருத்தாய் வெளுத்திடும்
நிறத்திடன் வெளுத்து நின்று சிவந்திடும்
திருத்தமாய்ச் சிவந்து செந்தூர மாகுமே. 625

ஆகுஞ் செந்தூர மாரு மறிந்திலர்
பாகுட னண்ணல் பகுந்த மறையிது
வாகுடன் வெள்ளித் தகட்டில் மருவியே
ஆகமாய்ச் சாம்பலில் அழுத்திப் புடமிடே. 626

அழுத்திப் புடமதி லாறியெடுத்திட
பழுத்திடும் வேதைப் பார்க்கக் கண்கூசிடும்
கழுத்திடும் லோகமுங் கண்டு பழுத்திடும்
வழுத்தி மச்சன் வாக்கிது சித்தமே. 627

சித்தம் பெருகி செனிக்கு மெண்ணூறிதை
உத்தம ரிடத்தில் உகந்துநீ பேசிடு
மத்திப மான மாந்த ரிடத்தினில்
சற்று மிராதே தன்னிலை பற்றிடே. 628

தன்னிலை பற்றித் தான மறிந்துநீ
உன்னி யொடுங்கி யுறுதியில் நின்றிட
விண்ணிலே தன்னிலே வேத மனோன்மணி
சென்னி யினடுவே சிறந்திடுந் தீபமே. 62

## கோடாசூறி

சிறந்த ரவியில் சிறக்குஞ் ாரக்கை
மறந்து விடாதே மகாகோ டாசூரியுநீ
அறந்தருங் கார்முகி லானதீ முறுவலும்
நிறந்திடுங் கெந்தியும் லிங்கமு மானதே. 63

ஆன சரக்கு அஞ்சுஞ் சரியிடை
கோனவ னருளால் கூடிப் பொடித்திடு
தானமாம் வெங்கலத் தகட்டில் பரப்பியே
பூணவே செயநீர்ப் பொருந்தத் தெளித்திடே. 63

தெளித்து ரவியில் சுருள வளர்த்திடு
வழித்ததை கட்டி வாயினீர் விட்டுமே
அழுத்திப் பிணைத்து அமுக்கி ரவியினில்
கழித்தது காந்தியில் சுழன்று புகையுமே. 63

புகைந்து கருகிப் பொலிவாய் சிவந்துதான்
தகந்து பொருமித் தழன்று செந்தூரமாம்
உகந்த தெடுத்து வுரிமையாங் குப்பியில்
அகந்தனி லுயிர்போ லன்புடன் போற்றே. 63

போற்றிய வெள்ளியில் பூசிப் புடமிட
நேர்த்திய தாக நேராய்ப் பழுத்திடும்
ஆத்திய செம்பி லழுத்தி யுருக்கிட
தேத்திய மாற்றுத் திருவரு ளாகுமே. 63

திருவாம் ரவியில் சிவந்த செந்தூரத்தை
உருவான தேகத்தி லூட்டிப் பணிவிடை
குருவான இல்லங் குன்றா தொருநாளும்
கருவான வாசிக் களரா திருக்குமே. 635

இருக்குமே தேக மெந்த நாளாகிலும்
திருக்கறச் சத்தி சிவத்தைப் பணிந்திடு
நெருங்கிய வாசி நேராய் வணங்கிடுந்
திருக்கண்ட கண்ணுக்குத் தீவினை யில்லையே. 636

தீவினை யான சிந்தை திறப்படும்
தாவிய வாசித் தாண்டா தொருநாளும்
கூவிய அண்டங் குறியாஞ் சுழியினில்
மேவியே தாண்டி விளக்கொளி கண்டிடே. 637

பற்பம்

கண்டிடு பற்பங் கருணை துலங்கிட
விண்டிடக் கேளு விளங்கிய வீரமும்
நின்றிடு நாகமும் நேரான லிங்கமும்
துன்றிய காரமுந் துலங்குஞ் சலாசத்தே. 638

சத்து முதலாய்த் தானோர் சரியிடை
பத்தி யொன்றாகப் பதியப் பொடித்திடு
வெத்தியாஞ் செயநீர் விட்டு அரைத்துமே
முத்தியாஞ் சாமம் மூவிரண் டாட்டிடே. 639

ஆட்டி வழித்து அடைபோல் பிடித்துநீ
காட்டு ரவியில் கடுக வுலரவே
நாட்டிய வில்லை நன்றா யுலர்ந்தபின்
பூட்டிடு ஓட்டில் பொருந்த மணலிடே. 640

மணலிட்டு லர்த்தி மரகாய்ப் புடத்தினில்
அணலிட்டுத் தாவி யதிர வெளுத்தபின்
மனதொத்து நீயும் வணங்கி யெடுத்திட
தனலுற்று வெண்மையாய்த்தானது பற்பமே. 641

பற்ப மதனைப் பதிவா யெடுத்திடு
அற்புத வெள்ளி யிலணைத்துப் புடமிட
துப்புரவாகத் துலங்கப் பழுத்திடுஞ்
செப்பிய லோகமுஞ் சேரப் பழுக்குமே. 642

பழுத்திடும் பற்பம் பணவிடை கொண்டிட
செளித்திடுந் தேகம் நின்று நிலைத்திடும்
கருத்தினில் வாசியுங் கருவினில் சென்றிடும்
முழித்திரு கண்ணு முனையினிற் புக்குமே. 643

நாகபற்பம்

புக்கிய நாகம் பொருந்திய பற்பமாய்
சிக்கெனச் சொல்லுவேன் செம்மைய தாகவே
தூக்கிய ரசமுந் தாரமும் வீரமும்
தொக்குஞ் சலாசத்து துணையான காரமே. 644

காரமோ டொன்றாய்க் கதிக்க அரைத்திடு
வாரமாம் நீரில் வழித்து வுருட்டியே
ஈரமே சுண்ட இரவியில் வைத்திடு
சாரவே யோட்டில் தனித்து மண்சீலையே. 645

சீலை யழுத்தித் திறமா யுலர்ந்தபின்
வாலையைப் போற்றி வைபுடந் தன்னிலே
சூழவரித்துச் சுழன்று எறிந்தபின்
ஆலயமாக அர்ச்சித் தெடுத்திட்டே. 646

எடுத்திடு மல்லிகை யிணையான பற்பமாய்
தொடுத்த திருக்குஞ் சுகமா யெடுத்திடு
அடுத்த தோர் பற்பம் ஆதி குருவிது
முடித்த பொருளில் முதலாம் பொருளிதே. 647

பொருளான பற்பம் பொருந்த எடுத்துநீ
அருளான வெள்ளி யிலணைத்திடு தூற்றொன்று
குருவான தங்கங் குலையா தொருநாளும்
இருளான செம்பு ஏமமு மாகுமே. 648

ஆகிய பற்ப மதிலோர் பணவிடை
பாகுடன் தேனில் பதிவாக மண்டலம்
வாகுடன் கொண்டு மனதை நிறுத்திட
தேகம் வலுத்துச் சிவயோகம் புக்குமே. 649

தாரபற்பம்

புக்கிய தாரம் பொருந்திய பற்பமாய்
நிற்கும் வகைகேள் நேரான பற்பமும்
தங்கிய நாகமும் தான்ரசப் பச்சையுஞ்
சிக்கிய சத்தோடு சேர்காரங் கூட்டியே. 650

கூட்டிக் கல்வத்தில் குமுறப் பொடித்துநீ
பூட்டிய நீரில் பொருந்த அரைத்திடு
நாட்டி யரைத்து நன்றாய் உருட்டியே
வாட்டி ரவியில் வலுக்க யெடுத்திடே. 651

எடுத்திடு வுண்டை யிதமான வோட்டினில்
தொடுத்திடுஞ் சீலைமண் சுருக்கா யுலர்ந்தபின்
விடுத்திடு புடத்தில் விரும்பி யெடுத்திட
அடுத்ததோர் பற்ப மதில்வெகு வேதையே. 652

வேதைச் சாக்கு விரும்பு முபரசம்
சாதிச் சரக்குத் தருகார சாரமும்
நீதிச் சரக்காய் நிலைத்த பாஷாணமும்
ஆதிச் சரக்கு அனைத்தையுங் கண்டிடே. 653

## செயநீர்

அனைத்தையுங் கண்டு அதில் சத்தெடுத்திட
புனைத்திடுஞ் செயநீர்ப் புதுமையாய்க் கேட்டிடு
நினைத்திடு மண்டமும் நேரான பிண்டமும்
சினத்துடன் வகைக்குநீ சேர்பல மொன்பதே, 654

அன்புடன் கூட்டி அமிழ்த்திடு பாண்டத்தில்
நன்புடன் தன்னில் நாட்டு மருந்து கேள்
பண்புடன் வீரமும் பாஷாணப் பச்சையுந்
தன்படு பூரமுந் தன்னொடு காரமே. 655

காரமுஞ் சாரமுங் கருவான சீனமும்
பாரன்ன பேதியும் பகுந்திடு துத்தமும்
சீருள்ள கெந்தியுந் திருவான தாரமுங்
கூருள்ள கார்முகில் குவிந்தயத் தொட்டியே. 656

தொட்டியுடனே சூழுமீனம்பருங்
கெட்டியாய்க் கட்டுங் கெம்பீர கம்பியுந்
திட்டமாய்க் கண்டிடு சேர்பதி னஞ்சுமே
மட்டமதாக வகையஞ்சு பலமெடே. 657

எடுத்துப் பொடித்து ஏறெண்டப் பானையில்
தொடுத்த தொன்றாக சுருளப் பிசைந்துநீ
கடுத்திடும் அமுரியுங் காரமுங் கூட்டியே
அடுத்திடு மருந்தினை [illegible]றவிட்டுக் கிண்டியே. 658

கிண்டி ரவியிற் கெணிதமாய்த் தாங்கலில்
கண்டுநீ வைத்திடு கதிரவ னொளிபட
நின்று நன்றாக நிகழநீ கிண்டிடு
சுண்டி மருந்து சோர்வரச் சுண்டுமே. 659

கண்டு மருந்தைச் சுகமா யடுப்பினில்
கண்டித மாகக் கடுக யெறித்திடு
மண்டியோர் பக்க மனதா யெறித்திடு
நன்றான சுன்னமாம் நான்சொன்ன சாரமே. 660

சாரம் பொடித்து தயவான சுன்னத்தில்
காரமோ டொன்றாய்க் கடுகக் கலந்துநீ
பார்ப்பனியில் பதியாய் நீ வைத்திட
ஊருஞ் செயநீ ரொடுங்காத கெங்கையே. 661

கெங்கையாய் நின்ற கேணிநீர் தன்னிலே
மங்காது பாசம் வளர் காரசாரம்
பொங்கும் பாஷாணமும் பொருந்திய லோகமும்
அங்கமாய் நீமுத்தீயி னுருக்கிடே. 662

உருக்கிடு சத்தா யுருகி நிலைத்திடும்
பெருக்கின்ற ஜெயநீர் பெருமையின் தன்மையால்
கருக்கண்டு முடிக்கக் காசினி தன்னிலே
இருக்கின்ற பேரி லினங்கோடிக் கொன்றுமே. 663

கோடியி லொன்று குருபுத்திரன் நிர்ணயம்
நாடி யெடுத்து நயமா யெண்ணூற் றினில்
பாடிய தொற்படி பயனறி வானையா
தேடிய சத்தில் தெளிவதைக் கேட்டிடே. 664

### சத்தில் தெளிவு–கருடப்பச்சைபற்பம்

கேட்டு கெருடப் பச்சையை மைந்தனே
நாட்டிய நீரில் நன்றா யரை தனைத்
தீட்டி வழித்துத் திறமா யுருட்டிநீ
பூட்டியவோட்டில் பொருந்த மண்செய்திடே. 665

செய்திட் டுலர்த்தித் திறமாய்ப் புடத்தினில்
கொய்திட் டெடுக்கக் குருவான பற்பமாம்
மெய்திட்ட மாகி விளங்கிய பற்பத்தை
கைதிட்டமாக இக்கருவினில் கொண்டிடே. 666

கொண்டிடு மண்டலங் குருவை நினைந்துநீ
நின்றிடும் போது நீள்திசை தன்னிலே
சென்றிட விஷங்களுந் திறமாம் பசைகளும்
கண்டிடும் போதினில் கதறி நடுங்குமே. 667

நடுங்கி விஷங்களும் நாடா தொளித்திடும்
ஒடுங்கி நீயிருக்க ஊரில் விஷமுண்டோ
திடங்கொண்ட கெருடன் குட்டைக் கருவினில்
படங் கொண் டெழுந்த மாநாகஞ் சித்தியே. 668

### நத்தை பற்பம்

சித்தான நத்தை சிப்பி யெடுத்துநீ
ஒத்தாசை யாகவுடன் சேரு சத்தியை
முத்தான நீரில் முறுக அரைத்துமே
பத்தாசை கொண்டு பருவில்லை பண்ணிடே. 669

பண்ணி யுலர்த்தி பருவமா யோட்டினில்
வுண்ணியே முடி யுறுதி மணலிடு
சென்னியை நோக்கி சிறுக்கப் புடமிட
புண்ணிய யமாகப் பொருமி நீராகுமே. 670

நீரான பற்பம் நேர்மை வெகுவிது
பாரான பாலில் பணவிடை கொண்டிடு
நேராக மண்டல நிலைத்திடும் ரெண்டினில்
சிரான நாக்கு சிசுவி னாக்காகுமே. 671

நாக்கு மெதுவாய் நலமா யிருந்திடும்
வாக்கு மொழிகள் வளமது மெத்தவாம்
தாக்கு மமுர்தந் தானே சொலித்திடும்
தூக்கிய தூக்கஞ் சுழன்று வொடுங்குமே. 672

ஆமை ஒட்டுபற்பம்

ஒடுங்கிய ஆமை ஓட தெடுத்துநீ
அடங்கு மமுரியி லன்புடன் சுத்திசெய்
மடங்கியே யோடும் வளர்சத்தி பூரமும்
திடங் கொண் டறைத்து சேர்த்துவுருட்டிடே. 673

சேர்த்து வுருட்டித் திடமாய் ரவியினில்
பார்த்து வுலர்ந்தபின் பண்புட னோட்டினில்
சாத்திமேல் முடித் தனதாய் மணலிடு
வாத்திப் புடத்தில் வரிசையாய் வைத்திடே. 674

வைத்திட் டெடுக்க மாசற்ற நீறுபோல்
மெய்த்திட்ட மாக விளங்கி யிருந்திடுங்
கைத்திட் டமான கருவான பற்பத்தை
செய்திட்ட குருவென்று தேர்ந்துபணிந்திடே. 675

தேர்ந்து பணிந்து தினமோர் பணவிடை
நேர்ந்து தேன்பாலில் நினைவாய்ப்பொசித்திட
கூர்ந்தொரு மண்டலங் குணமா யெடுந்தபின்
சார்ந்திடு மேனியுந் தளரா திருக்குமே. 676

தளராது வாசி தான்மன வேகமாய்
மலரான பூமி மண்டலஞ் சுற்றலாம்
கழலாது வாசி கண்ணொளி கூர்மையாம்
சுழலாமல் காதஞ் சொல்நொடி சுற்றுமே. 677

அஸ்தி பற்பம்

சுற்றதில் அஸ்தி சுருதி முடிவுகேள்
பற்றியாங் கேசரிப் பருமுத்து சஸ்தியும்
சித்தியாய் ரெண்டில் செலுத்தி யமுரியில்
வெற்றியாய்க் காச்சி விரும்பி யுலர்த்திடே. 678

உலர்த்திப் பொடித்து வுடன்சேர் காரீயமும்
நிலர்த் தமுர்த முண்ட நேரறி பீசமும்
குலத்துடன் மூன்றையுங் குருவான நீரதில்
பீலத்துட னரைத்துப் பேணி யுருட்டியே. 679

உருட்டிப் பதிவா யோட்டின் மேல்சீலைசெய்
கருத்துட னாதங் கண்டு புடமிடு
திருந்த மாயந்தந்திறமாய் வெளுத்திடும்
நிறுத்த நிறையாய் நின்றுமே பாருமே. 680

பாரான பற்பம் பணவிடை தேனில்
சீராகக் கொண்டு சென்றிடு மண்டலம்
நேராக மண்டலம் நிறைந்திடும் போதினில்
பேரான தேகம் பிலத்து வலத்துமே. 681

வலுக்குங் கெதிகேள் வடர்கரி நிகரில்லை
செழிக்கு மனமுஞ் சிந்தையும் பூரணம்
நெளிக்கின்ற அஸ்தி சேர்மையுங் கூடினால்
சுழிக்கின்ற வாசி துள்ளாதடங்குமே. 682

### சுக்கான் பற்பம்

அடங்கிய சுக்கா னதின்திற மெத்தவாம்
முடங்கிய கல்லை முதிரப் பொடித்துமே
துடங்கிய நீரில் தோணப் பிசரியே
திடங்கொண் டுலர்த்தித் திறமாய் ரவியிலே. 683

ரவியி லுலர்த்திடு நாலஞ்சு கைமுறை
புவியான கல்லுப்பு புகழுடன் சுத்தியாம்
குவியாஞ் சலாசத்து கூட்டத்தில் சத்தியும்
அவியாத மூன்று மளவிடை யொன்றதே. 684

ஒன்றாகக் கூட்டி யூறுநீர் விட்டுமே
நன்றாக ஆட்டி நாடி யுருட்டிடு
குன்றா ரவியில் குணமா யுருட்டியே
பண்டான வோட்டில் பற்றிமண் சீலையே. 685

மண்ணது செய்து வணங்கிப் புடமிடு
தன்னிமை யாகத் தருவான பற்பமாம்
உன்னிய பற்பம் வொருத்த றறிந்திலார்
புண்ணிய நாதன் போதித்தான் கண்டிடே. 686

கண்டிதமான கடுஞ் சுக்கான் பற்பத்தை
சுண்டியே நெய்யில் சுகமாய்ப் பணவிடை
கொண்டிடில் தேகங் குளிர்ந்து வலுவதாம்
மண்டிடு விந்து மார்க்கமாய்க் கட்டுமே. 687

### கபால பற்பம்

கட்டிய வோடு கடிய கபாலமாம்
சுட்டதின் சத்தைச் சுகமாயெடுத்திடு
திட்ட மதாக தேசாதி சத்தியும்
வட்டமாய் மூன்றும் வகைசரி தானெடே. 688

தானே யெடுத்து தருகெங்கை நீரிலே
பூணவே தட்டிப் பொருந்த அரைத்திடு
பேணி யரைத்துப் பெலமா யுருட்டியே
காண ரவியில் கடுக வுலர்த்திடே. 689

கடுக வுலர்த்தி கதிக்க மண்சீலைசெய்
தொடுகி யெருவில் சுகமாய்ப் புடமிடு
அடுகிய சத்து ஆக வெளுத்திடும்
மடுகியபற்ப மாசில்லாப் பற்பமாமே. 690

பற்ப மதனைப் பதிய மனதினில்
அற்புதமாக ஆசிப் பணவிடை
சிற்பமா நோக்கி செலுத்திடு தேனினில்
உற்பன மாகியு றுதியாந் தேகமே. 691

தேக முறுதி திறத்து வலுத்திடும்
பாகமாம் நேத்திரம் பதியத் தெளிவதாம்
ஆகமாய்த்தூரத்தி லதனை அறியலாம்
தாகமாய்த் தீபந்தானே துலங்குமே. 692

### கல்நார் பற்பம்

துலங்கிய கல்நார் சுகமது மெத்தவாம்
இலங்கு நல்நாரை யீடித்தாவின் பாலினில்
விளங்கவே போட்டு விரும்பி யெடுத்திடு
நிலங்கொண்ட நாரது நின்ற சுத்தியாம். 693

சுத்தி தன்னோடே சுகமாஞ் சலாசத்து
வெற்றியாம் பூரம் விசைகாசு கட்டியும்
பற்றியாய் நாலும் பதிய வென்றாகவே
சித்தியாம் நீரில் சிறக்க வரைத்திடே. 694

அரைத்து வுருட்டி அலா வுலர்ந்தபின்
திறத்துட னோட்டில் செலுத்தி மண்பூசியே
உறுத்துட னெருவில் ஒடுக்கிப் புடமிட
நிறத்துட னாரது நீறி வெளுக்குமே. 695

வெளுத்திடும பற்பம் விரும்பியெடுத்துநீ
அழுக்கறப் பல்லை அழுத்தி விளக்கிடு
நெளித்திடும் பல்லு நேரா யிருகியே
வலுத்திடுங் தந்தம் வகையினிக் கேட்டிடே. 696

கேட்டிடு மைந்தா கெட்டியாங் கல்களை
நாட்டியே பல்லில் நன்றாய் நொறுக்கலாம்
நீட்டிய கல்நார் நிறமது நன்மையால்
ஆட்டிய பல்லு மசையா திருக்குமே. 697

இருக்குங் கபத்தை யிதமா யறுத்திடும்
மருக்கிய பித்தமும் வாய்நா றல் போய்விடும்
சுருக்கிய விந்துவுஞ் சுகமாய் சொலித்திடும்
திருக்கறப் பார்த்து செய்து முடித்திடே. 698

சலாசத்து பற்பம்

முடித்திடக் கேளு முனையாஞ் சலாசத்தை
தொடுத்த தண்ணீரில் சுருக்கெனக் காச்சிட
கடுத்தது சுத்தியாங் கருவாய் தன்னோடு
வெடித்திடு முப்பு மேல் வீரங்கூட்டிடே. 699

கூட்டிய யரைத்திடு குருவான நீரினில்
நாட்டி வழித்து நலமா ருட்டியே
வோட்டினில் வைத்து வொடுக்கி மணலிடு
தாட்டிகமாகத் தனதா யுலர்த்திடே. 700

உலர்த்தி யெடுத்து உண்மையைப் போற்றியே
பிலத்துட னெருவில் பேணிப் புடமிடு
குலத்துடன் சத்துங் குணமா வெளுத்தது
பலத்தினி லதிக பற்ப மதாகுமே. 701

ஆகிய பற்ப மருந்து பணவிடை
வாகுடன் மண்டலம் வருந்தி யுணர்ந்திட
தேகம் பிலத்து சிறுகதி ரோடிடும்
பாகுடன் தேகம் பளீரெனத் தோணுமே. 702

தோணு மொளிவுஞ் சுடரொளி யொப்பென
காணுமே மூலங் கருணையில் வாசியில்
பேணு மெண்ணூறும் பிலமான மந்திரம்
வேணு மென்றெண்ணி விரும்பி யறிந்திடே. 703

முத்துச்சுன்னம்

அறுந்திடச் சித்து அனேக விதமுண்டாம்
பொரிந்திடு முத்தின் தொழிலது கேட்டிடு
பரிந்திடு முத்துப் பருவெடி யுப்புடன்
விரிந்திடும் பூர மேலான வீரமே. 704

வீரமாய் நாலும் விளங்க வொன்றாகவே
காரமாம் நீரில் கடுக அரைத்திடு
பராமாய் நாலு சாமம் பயின்றபின்
சீராய் வழித்துத் திடமா யுருட்டிடே. 705

உருட்டி யுலர்த்தி யொடுக்கிப் புடமிடத்
திருத்தமாய் சுன்னம் திறமா யிருந்திடும்
நிறுத்துப் பண விடை நினைவாக மண்டலம்
கருத்துடன் கொண்டிடில் காரணங் கேட்டிடே. 706

கேட்டிடு மைந்தா கிருபையாய நேத்திரம்
நாட்டிடு மாகி நன்றாய் விளங்கிடுங்
தோட்டிய தூரந் தொலையுந் தெரித்திடுந்
தேட்டெனப் பகல்நட் சத்திரந் தெரியுமே. 707

பவளச் சுன்னம்

தெரியம் பவளத் திறமது கேட்டிடு
நெறியும் பழத்தில் நேர்மையாய் சுத்திசெய்
துரியமா முத்துச் சுன்னமுங் கூட்டியே
விரிவுள்ள நீரை விட்டு அரைத்திடே. 708

அரைத்த துருட்டி அளவது முன்போல்
திறத்துடன் புடமதில் சென்று வெளுத்திடும்
நிறத்துடன் வெளுத்து நின்றது சுன்னமாம்
வரத்துடன் குருவை நீவணங்கி மகிழ்ந்திடே. 709

வணங்கிப் பணவீடை மாசற்ற தேனினில்
இணங்கி நீ மண்டல மிருந்து பொசித்திட
குணங்களோர் மனதாய்க் கூட்டி நினைத்துநீ
மனங்கள் குவிந்திட வந்தது சித்தியாம். 710

கோமேதகச் சுன்னம்

சுத்தியாங் கோமேதக மீதில் சித்திகள்
முத்தியாய் நின்ற முறைபது சொல்லுவோம்
சித்தியாங் கோமே தகமதை நெய்யினில்
பத்தியாய்க் காச்சிப் பாலில் கழுவிடே. 711

கழுவி யெடுத்துக் கற்பூரங் கம்பியும்
பழுதற மூன்றும் பார்த்துச் சரியிடை
வழுவறக் கூட்டு வாய்நீர் விட்டுமே
தொழுதுநீ யாட்டிச் சுண்ட விழித்திடே. 712

சுண்ட வழித்து சுருள வுருட்டிநீ
நன்றாய் வோட்டில் நாட்டி மணலிடு
சென்றது காய்த்து சிறுகப் புடமதில்
நின்றது வெந்து நிலைத்திடுஞ் சுன்னமே. 713

சுன்ன மெடுத்துச் சுகமாய்ப் பணவிடைப்
பன்னிய கலசப் பாலிற் பொசித்திட
துன்னிய தேகஞ் சுகவச் சிர காய்மாம்
விண்ணுயர் வாசியும் விசையினில் செல்லுமே.
714

செல்லுமே வாசி தீப நுனியினில்
நல்லுற வாக நடந்து நீ ஆடியே
அல்லும் பகலு மலைகடல் தன்னிலே
துள்ளி நடந்து துயில்வது திண்ணமே. 715

புட்பராகச் சுன்னம்

திண்ணமாம் புட்ப ராகத் திறமது
பண்ணிய நெய்யில் பதனமாய்க் காச்சி
துன்னிய வீரனுஞ் சூடனுஞ் சத்துமே
எண்ணியே நாலு மியல்பா யெடுத்திடே. 716

எடுத்திட் டரைத்து இதமான நீரினில்
பிடித்திடு வட்டத்தில் பேணி யுலர்த்திடு
தொடுத்திடு வோட்டில் சீத்தி மணலீடு
நடுத்தற மாக நாட்டிப் புடமிடே. 717

நாட்டிப் புடத்தில் நயமா யெடுத்திட
தீட்டிய பற்பஞ் செம்மைய தாகிடுந்
தாட்டிக மாகச் சமத்தாய்ப் பணவிடை
தேட்டுடன் நெய்யில் செலுத்தி யிருந்திடே. 718

இருந்திட மண்டல மென்னென்று சொல்லுவேன்
பருந்திடும் பூமி பாதாளந் தோணுமே
செறிந்திடும் புட்ப ராகத் தொழிலிது
அறிந்துநீ பார்த்து ஆதியைப் போற்றிடே. 719

வயிரச் சுன்னம்

போற்றும் வயிரப் புதுமையைக் கேட்டிடு
சாத்தும் வயிரம் தனதா யெடுத்துநீ
நீத்தும் வகையின் நிருணயஞ் சொல்லுவேன்
பார்த்திடு வீரமும் பதிவான பூரமே. 720

பூரமுங் கம்பியும் பொதுவான வெள்ளையுங்
கூருடன் நாலுங் குணமா யெடுத்துநீ
சாரமா நீரில் தனதாய ரைத்ததை
பார்சிறு குகையாய்ப் பருவமாய்ப் பண்ணிடே 721

பண்ணிய குகையும் பதிவா யுலர்ந்தபின்
உன்னிய வயிரமுள்ளத டக்கியே
துன்னிய சில்லுஞ் சுகமாய்ப் பொருத்தியே
மண்ணது பூசி வலுவா யுலர்த்திடே. 722

உலர்த்திப் புடமது றுதியாய் வைத்திடு
நிலத்துடன் வயிரமாம் நீறிவெளுத்திடும்
குலத்துடன் குகையுங் கூட்டிப் பொடித்துநீ
பிலத்துடன் குருவைப் பேணி வணங்கிடே. 723

வணங்கிய பற்பம் வாருதி நாதமாம்
இணங்கிய கலசப் பாலினில் இதமுடன்
குணங்களோர் மனதாய்க் கூர்ந்து பணவிடை
மனங்குவிந் தன்புடன் வணங்கிப் பொசித்திடே. 724

பொசித்திடு மண்டலம் பூரண மாகவே
வசித்திடுந் தேகம் வலுவது மெத்தவாம்
நசித்திடும் வாசி நடுநிலை புக்கிடும்
திசைக்கதிர் அரசனாஞ் சித்தனு மாவனே. 725

### பச்சைக் கல்லம்

ஆனதோர் பச்சை அதினுடன் வீரமும்
தோண நல்பூரமுந் தொடுத்தது மூன்றையும்
பேணச் சரியிடை பிலமா யெடுத்துநீ
பூணநீர் விட்டுப் பொருந்த வரைத்திடே. 726

அரைத்து மெதுவா யடைபோ லுருட்டியே
திறத்துடன் ரவியில் நினைவா யுலர்ந்தபின்
திறத்துட னோட்டில் செம்மி மணலிடு
வரத்துடன் புடத்தில்வைத்தணல் சாத்திடே. 727

சாத்திய புடமதில் தணலாறி நின்றபின்
தேத்திய பச்சை திறமுட நீறியே
போத்திய பற்பம் பூரண மாகிடும்
வாத்தி யெடுத்து வணங்கிப் பூசியே. 728

பூசித்து மைந்தா பூரணந் தன்னிலே
நேசித்து நீயும் நினைவாய்ப் பணவிடை
ஆசித்து வந்த அரனை வணங்கி
மாசற்று தேகம் வலுவா யிருக்குமே. 729

இருக்குமே தேக மிளையா தொருநாளும்
அறுக்கும் படையி லலைந்து திரிகையில்
நெருக்கிய வெட்டு நேராய்ப் பொருந்திடுஞ்
சுருக்கிய பச்சைத் தொழிலது நன்மையே. 730

### நீலச் சுன்னம்

நன்மையாம் நீலந் தானது வசியமாம்
உண்மையாய் மனதுள் ளொடுங்கிய வீரமும்
செம்மையா ங்கம்பியுஞ் சேரதி லண்டமும்
தன்மையா நாலுஞ் சரியிடை தானெடே. 731

தான தெடுத்து தனதான நீரினில்
பேணவே யரைத்துப் பெருக வுருட்டியே
ஊணவே யோட்டி லிருத்தி மண்சீலைசெய்
தோண வுலர்த்திச் சுகமாய்ப் புடமிடே. 732

புடமது கணக்காய்ப் போட்டு எடுத்திடு
திடமுள்ள நீலஞ் சிவந்து வெளுத்திடும்
அடவுடன் வெளுத்து அழன்றுமே சுன்னமாம்
விடமதின் கெடிய வெண்சுன்ன மாகுமே. 733

சுன்ன மெடுத்து சுகமாய்ப் பணவிடை
திண்ணமாய்த் தேனில் செலுத்திடு மண்டலம்
வுன்னிய வாசி யோடா தொடுங்கிடும்
புண்ணிய சுன்னம் புதுமையைக் கேட்டிடே. 734

கேட்டிடு மைந்தா கெணியா துலகினில்
தாட்டிக மான தன்னுயிர் பயிர்களும்
தேட்டி மையாகச் சேர வசியமாம்
பூட்டிய நீலம் புதுமையின் நன்மையே 735

### வயிடூரியச் சுன்னம்

நன்மையாய் நின்ற நடுவயி டூரியஞ்
செம்மையாய்த் தேனில் சேர்சிவ சத்தியும்
உண்மையாம் வீரமுட னதிலண்டமுந்
தன்மையா யஞ்சுஞ் சரியிடை தூக்கிடே. 736

தூக்கிப் பொடித்துச் சுகஅண்ட நீரினில்
தாக்கி யமைத்துத் தனதா யுருட்டிடு
பாக்கிய மாகப் பதியப் புடத்தினில்
வாக்கியஞ் சொல்லி வைத்தனல் மூட்டிடே. 737

அனலது மூட்டி ஆறி யெடுத்திடு
நினைவுட னஞ்சும் நேராய் வெளுத்திடும்
குணமுடன் வெளுத்து கூறிய பற்பமாம்
மணமுடன் நீயும் வணங்கி யெடுத்திடே. 738

எடுத்திடு பற்ப மியல்பாய் பணவிடை
தொடுத்திடு மண்டலஞ் சுகமா யமுரியில்
கடுத்திடும் வாசி கலங்கா தொருநாளும்
முடித்திடுந் தேக முழுதுஞ் சித்தாகுமே. 739

சித்தென மைந்தா செப்புவேன் கேளு
வித்தான மூலிகை விசையாங் கிழங்குகாய்
ஒத்தாசை யாகவுண்பார்க்க முர்தமாம்
பத்தாசை கொண்டு பார்ப்போர்க் கினிக்குமே. 740

### கெம்புச் சுன்னம்

இனிக்குஞ் சிகப்பை யெடுத்துப் பொடித்துநீ
அணிக்கின்ற வீரமும் அண்டமுஞ் சேர்த்துநல்
பனிகொண்ட நீரில் பதிய வரைத்துமே
தொனிக்கின்ற வட்டது துவளப் பிடித்தடே. 741

பிடித்திடு வோட்டில் பேணி மணலிடு
கடுத்திடும் ரவியில் காயவைத்து யெடுத்துநீ
தொடுத்திடும் புடத்தில் தோண வெளுத்திடும்
விடுத்திடும் பற்பம் விசையான பற்பமே. 742

பற்ப மெடுத்துப் பாலில் பணவிடை
உற்பண மாக வூட்டுநீ மண்டலம்
கற்பம தாகிக் காயஞ் சிவந்திடும்
அற்புத மாகி அசையா து வாசியே. 743

அசையாது வாசியது சிவயோ கமாய்
திரையான தீட்சை தீபங் துலங்கிடும்
வசையான லோகம் வணங்கி யுனதிடம்
பிசகா திருக்கும் பெருமைகள் மெத்தவே. 744

பெருமை சிறந்திடும் பேரு மெண்ணூற்றை
யுருமையாய்க் கண்டு வுள்ளன்பு கூர்ந்திட
வறுமை யகன்று மவுனங் திறப்படும்
பெருமை யினாலஞ்சு பூத மறிந்திடே. 745

பஞ்சபூத லவணம்

அறிந்திடும் பிரிதீவி ஆனதோர் சத்தியாம்
விரிந்திடு மப்புரு சையாஞ் சிவமது
நெரிந்திடும் வாய்வு நேர்சென்னி நாதமாம்
பரிந்திடும் வாய்வு பலவாய நீரதே. 746

நீரா மாகாசம் நிறைந்திடு விந்துவாம்
பாரா வஞ்சும் பகுந்தஞ்சு பூதமாம்
சீரோடறிந்து சிரக்க திறமுள்ளோர்
கூரான வாதங் குருமுறை திண்ணமே. 747

திண்ணமா யஞ்சுஞ் செப்பும் வகையது
வுன்னிய செயநீ ருறுதி முறையிது
செம்மையாய்க் கண்டு சேர்த்து முடித்திட
பொன்னி மையான பொருளது போதமே. 748

பூதவுப்பு

போதமாம் உப்புப் பொருந்திய பூதங்கேள்
நீதமாம் பூமி நிறைந்த கல்லுப்பு
சீதமா மப்பு தேரிசார் சத்தியாம்
தேதமாந் தேய்வு வெடி சவுடுப்பிதே. 749

உப்பான வாய்வு வுடன்பச்சை வெங்காரம்
செப்பு மாகாசஞ் சேர்பூர வழலையும்
மெய்ப்பாகக் கூட்டி விளங்கி முடித்திட
அப்பா குருமுறை யறிந்துகொள்ளுண்மையே. 750

உண்மையாம் பூமி யொடுங்கிய தங்கமாந்
தண்மையாம் அப்புத் தருவான காரியஞ்
செம்மையாந் தேய்வு செப்பிய செம்புவாம்
பொன்மையாம் வாய்வு பொருந்துமிரும்புமே. 751

பஞ்சலோகம்

பொருந்து மாகாசம் புகழ்நாக மைந்தாக
வருந்திநீ யஞ்சும் வகையாய் முடித்திடு
திருந்திய வாதந் திறமது மெத்தவாம்
அறிந்ததைப் பார்த்து ஆதியில் நின்றிடே. 752

நின்ற பாஷாணம் நிலைத்திடு பூதத்தை
விண்டிடக் கேளு விசையான பூமிதான்
கண்டடு தொட்டி கார்முகில் சிங்கியும்
நின்றிடும் பவளப்புத் துனிலமிதே. 753

நிலமான அப்பு நேராங் கெவுரியுங்
குலமான வெள்ளைக் குதிரைப்பல் கோமுகம்
தலமான கோழித் தலையான கெந்தியும்
நிலமா மிதுவெல்லாம் நாட்டிய அப்பிதே. 754

நாட்டிய தேய்வு நலமான கெந்தகந்
தேட்டு மனோசிலை திருவரி தாரமுங்
கூட்டிய வீரமுங் கூர்செப்புத் தொட்டியும்
பாட்டினில் சொல்லும் பதிவான தேய்விதே. 755

பதிவான வாய்வு பகர்சாரங் கண்டரும்
கெதியான லிங்கமுங் கெடிபஞ்ச பட்சியும்
நிதியாங் கெவுரி ரெத்த பாஷாணமும்
விதியான சாரமும் வேண்டிய வாய்விதே. 756

வேண்டு மாகாசம் விளங்குறேன் மைந்தனே
தாண்டிய சூதப் பாஷாணந் தன்னொடு
தூண்டிய நாகந் துலங்கு பாஷாணமும்
ஆண்டு கேளிதுவென ஆகாச மெண்ணுமே. 757

எண்ணு முபரச மேற்கஞ்சு பூதந்தான்
விண்ணுல கறிய விளங்கிய பூமிகேள்
துன்னிய காந்தந் துலங்குஞ் சலாசத்து
பொன்னப் பிரேகமும் பூநாகம் வர்த்தமே. 758

வர்த்த முடனே வருசுக்கா நீர்க்கல்
சுத்தமாம் படிகச் சுகமான ஈரக்கல்
பத்த முடனே பதிவாயிவை யெல்லாம்
வெத்தியாம் பிருதி விளங்கிய பூதமே. 759

விளங்கிய அப்பு விசையான சங்குடன்
துலங்கு நண்டோடு சுகமுட்டை நத்தையும்
இலங்குங் கிளிஞ்சி லியலாமை தன்னொடு
பலங்க ளிதுவெல்லாம் பாரஅப்புத் தானிதே. 760

பாரான தேய்வு பகரிங் திரகோபம்
நேரா மயூரம் நின்ற நால்நிமிளையும்
சீராமெலும்பு செயலான கொம்புடன்
மாறா திதுவெல்லா மருளாத தேய்விதே. 761

மருளாத வாய்வு மதியான கல்மதம்
இருளான கல்நார் ஏரென்ன பேதியுஞ்
சுருளான ரோமம் சுகசாஸ்திர பேதியுங்
குருவா மிதுவெல்லாம்குணமான வாய்விதே. 762

குணமா மாகாசங் கூறுவோம் துத்தமும்
சினமாய காந்தஞ் சேர்கண் டகச்சிலை
யினமாம் ரசித மிலங்கு பாஷாணம்
கனமா மிதுவெல் லாங் காணு மாகாசமே. 763

காணவே அஞ்சு பூதக் கருவுகள்
தோண வுபரசஞ் சூழ்கார காரமும்
பேணும் பாஷாணமும் பெருமை யெண் ணூறதில்
பூணவே பஞ்சபூத மறிந்திடே. 764

## பஞ்சபூத ஒடுக்கம்

அறிந்தைந்து பூதம் அங்கங் கரைந்திட
திருந்திய வாதமுஞ் சேர்வ சியஞ்சனம்
பொருந்து மிதுவெல்லாம் பூதத் தடக்கினால்
விரிந்திடுஞ் சித்துகள் வெளியில் நின்றாடுமே. 765

ஆடும் வரிசை அசைவதைக் கேட்டிடு
தேடும் பிரிதிவி சலத்தி லடங்கிடும்
நாடுஞ்சலமது நல்தீயில் குன்றிடும்
பாடிடுந் தீயது வாய்வினில் சென்றுமே. 766

சென்றது வாய்வு சேரு மாகாசத்தில்
பொன்றியே நின்று பொருந்த வுணர்ந்திடு
நன்றித றிந்தால் நாடு நிகரில்லை
கண்டெனத் தேகஞ் சுகசித்தி யாகுமே. 767

ஆகுமே சித்தி யருமை யெண்ணூறதை
வாகுடன் பார்த்து வரிசை யறிந்திடப்
பாகுடன் சித்துப் பலித்திடு மைந்தனே
போக்குடன் வரத்தும் புதுமையைக் கண்டிடே. 768

கண்ட தறிந்து கருவினில் நின்றிட
தொண்டர் களுன்னைத் தொழுது வணங்குவார்
அண்டமும் பிண்ட மதினுட வாழ்க்கையை
பிண்டத்தில் கண்டு பேணி யிருந்திடே. 769

இருந்திடும் பிண்ட மெளிதென்று நினையாதே
விரிந்திடு மூலம் வெளியான சோதியில்
பருந்திடும் வாசிப் பரம பதியது
தெரிந்து துணர்ந்து சிவயோகஞ் சென்றிடே. 770

கபால தீட்சை

சென்றிடுங் கபால தீட்சையைக் கேட்டிடு
நின்றிடு மூச்சியில் நினைவாய் றீம்என்றும்
சென்றிடு நெற்றியில் சுருள ஓம்என்றிடு
கன்றிடு கண்டத்தில் கலந்த அங் கென்றிடே. 771

மங் கென்று மார்பி லமர்த்திடு சிங் கென்று
வங் கென்று வுந்தியில் வணங்கி யிருந்திடு
சிங்கென்று மூலந் திறந்து வலுத்திடும்
பொங்குங் கபாலம் பொருந்திய தீட்சையே. 772

பொருந்திய தீட்சையைப் புனிதம தாக
வருந்தி யெங்காளும் வணங்கி யிருந்திடு
திருந்திய தேகஞ் சிவகயி லாசமாம்
இருந்திடு மந்த ஏகாந்த மாகவே. 773

ஆகமா யந்த அருள்சிவ சத்தியை
பாகமாய் நீயும் பணிந்து வணங்கியே
ஏகமாய் நின்று இணங்கிய தீட்சையை
தாகமாய்ச் சொல்லி சாத்து விபூதியே. 774

பூதியை மைந்தா புனிதமாய்க் கொண்டுநீ
ஆதியை நோக்கி அணிந்திடு வுத்தளம்
நீதியா யோக நிலையினில் நின்றிடு
சாதித்து மூலத் தணலை யெழுப்பிடே 775

எழுப்பிடும் ரேசக மிரண்டரை தன்னிலே
சுழிப்பதில் பூரகஞ் சுருக்கத்தி லொன்றரை
செழிப்புடன் கண்டத்தில் சேரு அங் கென்றுநீ
வழிப்படும் வாசல் வாகாய்த் திறக்குமே. 776

திறந்திடு நிலையில் சீக்கிரஞ் சிம் மென
நிறைந்திடுங் கும்பகம் நிறைந்த பதிதனில்
வரந்தருந் தீபம் வானத்தின் தன்னிலே
கரந்திடு மொளிபோல் காணுது பார்த்திடே. 777

பார்த்திடு வெளியில் பரம பதிதனைக்
கார்த்திடும் போதில் கருவளர் வாசியை
சாத்திடும் யோகஞ் சதாநந்த போதமாம்
ஆத்த திருந்திடும் ஆரண போசமே, 778

வாசம் நிறைந்த வளர்ஞான தேசியை
நேசம தாக நிலைதனில் காண
தேசம தெங்குஞ் செல்லினும் வருமோ
பாசம தாகப் பார்த்திடுங் குருவே. 779

குருவை யறியக் கூடுமோ மைந்தனே
கருவை யறிந்து காலது கொண்டுநீ
திருவுரு வாகிச்சிறந்த அறிவினால்
அருவளர் போத மண்டத்தில் கண்டிடே. 780

அண்டத்தில் பிண்ட மடங்கிய வாறும்
பிண்டத்தி லண்டம் பேர்கொண்ட வாறும்
கண்டத்தில் நின்ற காரணந் தன்னையே
விண்டவர் சற்குரு வேதாந்தி தானே. 781

தானான விந்து தருவான பூரணம்
ஊனாக அந்த வுருவான காரணம்
கோணாமல் கண்டக் குறியை யறிபவர்
தானான நாதன் தானவனாகுமே. 782

நாதமும் விந்தும் நடுநிலை தன்னிலே
நீதமாய் சென்று நேர்ந் துறவாகி
போதமாய் நின்ற பொருளை யறிபவர்
பேத மகன்ற பெரியவராகுமே. 783

ஆக மறிந்த அந்தப் பதிதனில்
வேகமா யெதுவும் வீண்ருசி தள்ளியே
ஏகமாய் நின்ற இன்ப ரசமதின்
பாக மறிந்தவர் பராபர மாமே. 784

மரத்தினில் வித்து மணிகொண்ட வாறும்
உரத்தினி லந்த வொளி கொண்ட துளிரும்
வரத்தினில் பெற்ற வரிசை யறிபவர்
கரத்தினில் நெல்லிக்கனி யென்னவாமே. 785

கனிக்குப் பலருசி காரணமானதும்
மணிக்கு நல்லொளி வுமாரண மானதும்
அணுக் கொண்ட போதம் ஐயர் திருவடி
செனிக்கின்ற மூலஞ் சேர்ந்தவர் குருவே. 786

குருவான தீட்சை குறியான வாறுங்
திருவான நந்தி செயமான வாறும்
பரிவான தேசி பரமான வாறுங்
கருவான மூலங் கண்டவர் முத்தரே. 787

முத்தான வுப்பு மொழிவான பச்சையும்
வத்தாத அப்பு வடிவான செய்கையுஞ்
சித்தான காலங் தெளிகின்ற வுண்மையும்
அத்தன் திருவுரு அறிபவர் ஞானியே. 788

ஞானிய ரென்றால் நானென்ற தன்மையும்
ஊனிநீர் பாய்ந்து ஓடிய தாரையும்
வானுவில் கெற்சிதம் வடிவான போதமும்
பேணி யறிபவர் பேர்கொண்ட நாதரே. 789

நாதமும் விந்துவும் நடுவி லுறவாடி
போதமாய் நின்ற பூரண கெற்பத்தில்
வாதம் புரிந்து வந்தவர் கூறின்
பேதமை யென்னப் பிதற்றுவோர் பித்தரே. 790

பித்தஞ் செனித்ததும் பேர்பித்த ரானதும்
உத்த சிலேற்பன முறவான தன்மையும்
பெத்ததோர் வாதம் பேர்கொண்ட செய்கையும்
சத்தது மூன்றுஞ் சார்ந்தவர் முத்தரே. 791

முத்திக் கொழுந்து முளைக்கின்ற விந்துக்குத்
தத்துவ மென்ன தராதர மென்ன
விந்து வுதித்த விதத்தை யறிபவர்
சத்தியும் சிவமு ந்தானா குவரே. 792

தானான சத்தி தன்மய மானதும்
வானாய் மயேஸ்பரன் வடிவான ரூபமுங்
கோனான நாதன் குணமான செய்கையும்
ஊனான தேக முகந்தவர் சித்தரே. 793

உகந்தோ ராச னுண்மை யறிபவர்
அகந்தனில் பூத்த அருளான பூமலர்
ஜெகந்தனில் கண்டு சீரா யறிபவர்
சுகந்தனில் தேசி சுகமறி வாசியே. 794

வாசி பிறந்ததும் நாசியில் சென்றதுங்
தேசிக னான திருவுரு வானதும்
பூசனை யாகிப் பொருளை யறிபவர்
ஆசான் பதத்தை யறிவான தேசியே. 795

தேசி யறிவான்தெ ரிசிக்கு நல்லிடம்
வாசி யறிவான் வடிவான காயத்தை
பேசிய நாதனைப் பிலமா யறிபவர்
மாசில் லாத மனையறி வார்களே. 796

அறிவான கல்லை அறியாத சித்தர்கள்
வெறியாக நின்று வேர்தனை யறியார்
குறியான கல்லைக் குணமாக யெண்ணி
பொறியென் றறிபவர் பூரண மாவரே. 797

பூரண மான புதுநில வுப்புக்கு
காரண மான கருவை யறிந்திலார்
சீருள்ள அறிவில் சென்றிடுங் காலத்தில்
பூரண தேகம் புகழ்கின்ற சித்தியே. 798

சித்தி நிறைந்த சிவாய சிவகுரு
பித்தர்கள் போலே பெருமை யகற்றியே
யுத்த மமாக வுலகத் தோ டொன்றியே
சுத்துஞ் சிறுவன் போல்சுக பதியாவனே. 799

ஆவான் மவுனி அவன் வெகு கெவுனியான்
தேவனென் றவனை தெரிசிக்கப் பரிசிக்கும்
பாவம கன்றிடும் பரிபூரண மதாம்
கோவ மகன்றிடுங் குருமொழி முற்றுமே. 800

முத்து மெண்ணூறு முன்கண்ட மார்க்கம்
பத்தியு முத்தியும் பாவித் தனுதினஞ்
சித்தம் பெருகி சிவஞான போதமாய்
சுத்நமாய் தீபந் துலங்கிய தறியே. 801

துலங்கு மெண்ணூறு சுடரொளி கண்டவன்
களங்க மகன்று கற்பூர தீபம் போல்
விளங்கிய யோகம் விரும்பிய மனமது
இலங்கிய வாசி யெண்ணூறு முற்றுமே. 802

முற்று மெண்ணூற்றின் முதுபய னையறி
முற்று மெண்ணூற்றின் முற்கரு விற்கரு
முற்று மெண்ணூற்றின் முடிவை யறிந்து நீ
முற்று மெண்ணூறு மூலமு முற்றுமே. 803

## மச்சமுனி நாயனார் அருளிச் செய்த

### திருமந்திரம்

### முற்றிற்று




1. மூலாதாரம், 2. சுவாதிஷ்டானம், 3. மணிபூரகம்,
4. அநாஹதம், 5. விசுத்தம், 6. ஆக்ஞை,
7. ஸஹஸ்ராரம்.

ஓம்

# மச்சமுனி நாயனார் திருமந்திரம் விளக்கஉரை

உரை ஆசிரியர் : கோவிந்தராஜன்

## காப்பு

1. ஆதிபராபரத்தாய் மலர் அடியைப் போற்றி, நாதாந்த மாய்த் துலங்கும் சோதியைப் போற்றி, அந்தச் சுடரொளியில் துலங்கும் நந்தியின் பாதம் போற்றுகிறேன்.

2. ஆதார பூசை விளக்கம் : நந்தியும், கருணை யுள்ளம் கொண்ட பராபரத்தாயும் மூலாதாரத்தில் உள்ள குண்டலி சக்தியில் அடங்கி உள்ளார்கள். அவர்களின் பாதத்தைப் போற்றுகிறேன்.

மூலாதாரம் என்பது குதஸ்தானம் மலவாய். இது உடலுக்கு முதல் ஆதாரம் ஆனதால் மூலாதாரம் எனப் பெயர் பெறுகிறது. இரு கால் எலும்புகள் இரண்டும் கதிரெலும்பும் கூடும் குய்யத்திற்கும் (குறி அல்லது மர்மஸ் தானத்திற்கும்) குதத்திற்கும் நடுவே, குண்டலி வட்டமாய் அந்த வட்டத்துக்கு நடுவே திரிகோண வடிவாய் அந்த திரிகோணத்துக்கும் வட்டத்துக்கும் மேலே நான்கு இதழ்களுள்ள ஒரு தாமரைப் பூப்போல் அமைந்திருக்கும். அந்த இதழ்களில் வ-ச-ஸ-ஷ-என்ற அக்ஷரங்கள் அமைந் திருக்கும். உள்ளே உள்ள திரிகோணம் ஃபோல் இருக்கும். இதில் ஓர் கோணத்தில் அகாரம், மற்றொன்றில் உகாரம், மற்றொன்றில் ரீங்காரம், அமைந்துள்ளன. இந்த ரீங்காரத் தில் எட்டிதழ் கமலம் நிற்கும். இந்தக் கமலத்தின் மத்தியில் தான் "நந்தி" நிற்பார். ரீங்காரம்தான் வாலை என்ற பராபரத்தாய். முக்கோணத்தின் மத்தியில் "ஓம்" நிற்கும். இந்தச் சக்கரத்தில் மனதை வைத்துப் போற்றி னேன் என்கிறார் முனிவர்.

அதற்கடுத்து பிரமன் பதத்தை அடைந்து அவர் பாதத்தைப் போற்றுகிறார். பிரமன் பதி என்பது "ஸ்வாதிஷ்டானம்" ஆகும்.

இது மூலாதாரத்திற்கு இரண்டு விரற்கடைக்கு மேலே நெருப்பைப் போல் செந்நிறமாய் இருக்கும். இது நாற்சதுரமாக ஆறு இதழ்களைக் கொண்ட ஒரு மலர் வட்டம். ப3-ப4-ம-ய-ர-ல-என்ற அக்ஷரங்கள் அந்த மலர் இதழ்களில் பரவி நிற்கும். இதன் நடுவே பிரமா நிற்பார். இதில் மனதை வைத்து பிரம்மாவை தரிசிக்க வேண்டும் என்கிறார் முனிவர்.

3 அடுத்த படியில் உள்ளவர் விஷ்ணு. (நடுவன்). அதாவது நடுமால் என்ற விஷ்ணுவின் பதி, ''சுவாதிஷ்டானத்திற்கு'' எட்டு விரற்கடை மேலே, அதாவது நாபிஸ்தானத்தில் (தொப்புள்) இருப்பது ''மணிபூரகமாகும்.'' இது ஆயிரக்கணக்கான நரம்பு நாடிகள் சூழ நாடிகளுக்கு எல்லாம் வேராக உள்ளது. இதை உந்திக் கமலம் என்று சொல்லுவார்கள். இதுதான் நெடுமாலான விஷ்ணுவின் பதியாகும்.

தொப்புளுக்கு நேரே பத்து இதழ்களுள்ள ஒரு கமலம் வட்டவடிவமாக நிற்கும். இதன் நடுவில் தான் மஹா விஷ்ணுவும் லக்ஷ்மியும் இணைபிரியாது இருக்கின்றனர். பத்து இதழ்களில் பத்து அட்சரங்கள் நிற்கும். அதாவது ட3 ட4-ண-த1-த2-த3-த4-ந-ப1-ப2 ஆகும். இதில் மனதை வைத்து மால் என்ற விஷ்ணுவைப் போற்றினேன்என்கிறார் முனிவர்.

4 அதன்பின் தன்னுடைய சித்தம் பெருகிச் சிவமான ருத்திரனைக் காண, சுத்த சத்துவமான அறிவினால் அவர் பதியில் சென்று அவரை வணங்குகிறார். இந்த ஸ்தானம் ''அநாஹதமாகும்.''

இது மணிபூரகத்திற்குப் பத்து விரற்கடை அளவு மேலே உதயசூரியன் போன்ற பிரகாசத்தோடுள்ளது. இதை இருதய கமலம் என்பார்கள். அதாவது மார்பில் லிங்கஹாரம் போன்ற ஒரு கமலம் தலைகீழாய்த் தொங்கி

கொண்டிருக்கும். இந்தக் கமலம் பன்னிரண்டு இதழ்கள் உடையதாக விளங்குகிறது. இவ்விதழ்களில் பன்னிரண்டு அட்சரங்கள் சப்த சொரூபமாய் உருவமற்று இருக்கும். இது உருவமற்றதாய் சப்த பிரும்ம மயமாய் உள்ளதால் அநாகதம் என்று பெயர் பெறும். இந்த ஸ்தானம் முக்கோண வடிவாய் இருக்கும். இதன் நடுவில் எல்லா வற்றையும் பஸ்மம் செய்யும் ருத்திரர் ருத்திரியுடன் கூடி நவரத்ன சிம்மாசனத்தில் வீற்றிருக்கிறார்.

5 அடுத்தபடி விசுத்தம் : நேர்மையில் என் மனம் நெறியாகச் செல்ல, வாசி பேர் இன்பம் சித்திக்க, அறிவால் மயேச்சுவரன் என்ற சுடரொளில் நின்று வணங்கினேன் என்கிறார் முனிவர்.

விசுத்தம் என்ற இந்த ஸ்தானம் அநாஹகத்திற்கு மேலே கண்டஸ்தானம் எனப்படும் நெஞ்சுக்குழி இடத்தில் தூம்பரவர்ணமான பெரும் ஒளியோடு விளங்கும். இது ஆறுகோணமாய் அதன் வெளியே பதினாறு இதழ்கள் உள்ள கமல வட்டமாய் நிற்கும். இந்த அறுங்கோணத்தின் நடுவே ''வ''காரம் நிற்கும். இதன் நடுவில்தான் மகேஸ்வரனும் மகேஸ்வரியும் வீற்றிருப்பார்கள்.

6 அதற்கு அடுத்தபடியாக மோட்சம் சித்திக்க வேண்டி சிவரூபமான சதாசிவனின் பதத்தைப் பிடித்து பரவெளியில் நின்றேன் என்கிறார்.

அதாவது சதாசிவன் இருக்கும் ஸ்தானம் ஆக்ஞை என்ற இடமாகும். இது விசுத்தத்தின் மேலே லலாட பீடத்தில் இரண்டு கண் புருவங்களுக்கு மத்தியில் தீபம் போல் ஒளிவீசிக் கொண்டிருக்கும். இதுஇரண்டுஇதழ்களைக் கொண்ட அரைவட்ட வடிவமுடையதாகும். இதன் மத்தியில்தான் சதாசிவனும் மனோன்மணியும் நிற்பார்கள்.

7-9 சிவாநந்தியான பூரணத்தின் அருள்பெற்று சகல சாபத்தையும் நீக்கினால் அசபை மந்திரம் துலங்கும்,

அதை வாசியின் மூலம் அறிந்து கொண்டு வாசியே பூரணம் என்று அறிந்து நாதவிந்து இரண்டும் கூடிய அந்த வாசி நிற்கும் ஸ்தானமான ஆயிரத்தெட்டுக் கமலம் கொண்ட ஸஹஸ்ராரம் என்ற இடத்தைக் கண்டு பராசக்தியைப் போற்றி அதற்குமேல் பூரணமான பராசக்தியின் கடைக்கண் கருணை பெற்றுக்கொண்டு துவாதசாந்தத்தில் உள்ள தீபச்சுடரில் நின்றால் உன்னை நீயே அறிந்து கொள்வாய். அதுமட்டும் இன்றி உயிரின் விளக்கமும் கிடைக்கும் என்கிறார் முனிவர்.

ஆறு ஆதாரங்களோடு ஸஹஸ்ராரம் என்பதையும் சேர்த்து ஏழு சக்கரங்கள் என்பார்கள். ஆக்ஞா சக்கரத்தின் மேலே இரண்டு அங்குலம் தாண்டினால் பிந்துஸ்தானம் என்று அழைக்கப்படும் ஸகஸ்ராரத்தின் இருப்பிடமாகும். இதற்கு பிரம்ம கபாலம் என்ற பெயரும் உண்டு. இங்குதான் சிவசக்தி ஐக்கிய பாவம் ஏற்படுகிறது. இங்கு அமுத கலசம் உள்ளது. இதை மூலாதாரத்தில் உள்ள குண்டலி சக்தியை—வாயு என்கின்ற (மூச்சு) பிராணனை வாசியோகத்தால் கிரமமாகத் தட்டி எழுப்பி ஒவ்வோர் ஆதாரமாக ஏற்றிக் கடைசியில் இந்த பிரம்ம கபாலம் என்கின்றஸ்தானத்தில் உள்ள கலசத்தை முட்டினால் அமுதம் சிந்தும். சிந்திய அமுதத்தை எல்லா ஆதார ஸ்தானத்தில் உள்ள தேவதைகளுக்கும் அபிஷேகம் செய்வித்தால் உயிரான பிராணன் பலப்பட்டு தேகசித்தியாவதுடன் ஜீவ பிரம்ம ஐக்யபாவனை ஏற்பட்டு உயிரின் விளக்கம் உண்டாகும். பராபரமான பூரணத்தின் அருள் கிட்டும்.

10 ஞானேந்திரியங்கள், கர்மேந்திரியங்கள், தன் மாத்திரைகள், பிராணன்கள், அந்தக்கரணங்கள், ஜீவன் ஆகியவை ஒன்று சேர்ந்து பரப்பிரம்மமான சிவத்துடன் இரண்டறக் கலந்து ஒன்றியிருப்பதே மோட்சமாகும்.

ஞானேந்திரியங்கள் = 5 ஜீவன் = 1

கர்மேந்திரியங்கள் = 5

| | | | | |
|---|---|---|---|---|
| தன்மாத்திரை | = 5 | ஆக | = 25 |
| பிராணன்கள் | = 5 | | |
| அந்தக்கரணம் | = 4 | | |

பஞ்ச ஞானேந்திரியங்கள் முறையே மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகும்.

பஞ்ச கர்மேந்திரியங்கள் முறையே : வாக், பாணி, பாத, பாயுரு, உபஸ்தம் ஆகும்.

பஞ்சபூதங்கள் :ஜலம், அக்னி, வாயு, ஆகாஸம், பிருதிவி.

தமிழில் : நீர், நெருப்பு, காற்று, ஆகாயம், பூமி.

அந்தக்கரணம் : மனம், புத்தி, அகங்காரம், சித்தம் ஆக நான்கு.

தன்மாத்திரைகள் : ஸப்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம் ஆக ஐந்து.

ஜீவன் — ஒன்று.

ஆக இருபத்தைந்தும் சேர்ந்து இரண்டறக் கலந்து பரப்பிரம்மத்தில் ஒன்றி நிற்பதே முக்தி!

11-21 மும்மலத்தில் வளர்ந்த இந்த உடலில் நல்ல மனதைக் கொண்டு சிவசக்தி இரண்டையும் அறிந்து கொண்டால் இந்தக் காயம் அழியாது. வாசியானது சுடரில் லயமாகி தேகம் நிர்மலமாகும். புருவ மையம் திறந்து மனோன்மணித்தாய் தோன்றுவாள். அதனால் மனதால் அவர்கள் நிற்கும் இடத்தை அறி. மூலாதாரத்தில் தீபச்சுடர் உள்ளது. அங்கு தான் நாதமான சத்தியும் விந்து வான சிவமும் இரண்டும் இணைந்து வாசியாக நிற்கும். அந்த வாசியைக் கொண்டு நடுமனையான சுழுமுனை நாடி வழியாகச் சென்றுசிவத்தையும் சக்தியையும்ஐக்கியப்படுத்தி அதை தீபச் சுடரில் ஐக்கியப்படுத்தினால் தேகம் அழியாமல்

சிவ ரூபமாய் நிற்கும் இவ்வாறுமுறைப்படி செய்தால் முத்தி உண்டாகும். இந்த நிலையில் அகாரம் சிவம் என்றும் உகாரத்தை சக்தி என்றும் கண்டு அதைத் தன் மனதால் பார்த்து சித்தத்தால் அறிந்தால் அனைத்தும் சேர்ந்து சிவரூபம் உண்டாகும். அப்பொழுது தான் அந்த சிவன் நீதான் என்று அறிந்து கொள்வாய். இதைத் தவிர வேறு சிவம் எங்கும் இல்லை. அப்பொழுது மனதாகப்பட்டது இருதய கமலத்தில் ஒடுங்கி சிதம்பர தரிசனத்தைக் கண்டு களிக்கும். இதை குருமுகமாக அறிந்து உலக வாசனையில் மயங்காமல் நின்றால் பூரணியான மனோன்மணியின் அருள் கிட்டும். தேகம் திடப்படும்.

22/23 தசதீட்சை விபரம் : தச தீட்சையின் விபரம் உள்ளங் கைநெல்லிக் கனிபோல் சொல்கிறேன் கேள். ''அம்'' என்று மண்டலம் செபித்தால் நமன் விலகிப் போவான். தேகம் திடமாகும். சித்து விளையாடும். சித்தி வரும்.

24 இரண்டாம் தீட்சை ''உம்'' என்று செபித்தால் மண்டலத்தில் அதாவது நாற்பத்து எட்டு நாளில் சிவபெருமான் அருள்கிட்டும்.

25 மூன்றாவது தீட்சை ''சிம்'' என்று முடியில் (அதாவது ஆக்ஞையில் நின்று) செபிக்க வேண்டும். மண்டலம் செபித்தால் முத்தி கிட்டும்.

26 நாலாவது தீட்சை ''நம்'' என்று மண்டலம் செபித்தால் நீ சிவபெருமானுக்கு சமமாவாய்.

27 அஞ்சாம் தீட்சை ''தம்'' என்று வான் நோக்கி மகிழ்ச்சியுடன் உருவேற்றினால். ஊன் உடல் என்ற இந்த தேகம் சித்தியாகும்.

28 ஆறாம் தீட்சை ''லங்'' என்று மண்டலம் நெறி தவறாமல் நேர்மையில் நின்று செபித்தால் குளிகை போல் தேகம் பிரகாசிக்கும்.

29 ஏழாம் தீட்சை கேள் "ரம்" என்று மனதை உந்திக் கமலத்தில் வைத்து ஒரு மண்டல காலம் செபித்தால் திக் விஜயம் செய்யும் ஆற்றல் உண்டாகும்.

30-31 எட்டாம் தீட்சை "கம்" என்று பிரமபதியான சுவாதிஷ்டானத்தில் நின்று செபித்தால் தொல்லைகள் அகலும், சோதி தோன்றும், நடராசர் தெரிசனம் காணும். எட்டு சித்தும் உண்டாகும்.

32 ஒன்பதாம் தீட்சை 'உம்' என்று செபித்தால் சின்மய சிவதரிசனம் கிட்டும். சிவதரிசனம் கண்டால் முக்தி கிட்டும்.

33 பத்தாவது தீட்சை என்ன வென்றால் "மம்" என்று தினந்தோறும் செபித்துக் கொண்டு சின்மயத்தை நோக்கினால் மறுபிறவி நீங்கிவிடும். சொரூபசித்தி உண்டாகும்.

34-36 குண்டமும் ஆதிபீடமானதும் சிவன் நிற்கும் பீடமும் மூலாதாரமுமான ஆதி பீடத்தில் தீபச் சுடரொளி யானது பிரகாசிக்கும். இந்தச் சுடரொளியில் இருந்துதான் நாதம் பிறந்தது. சுழுமுனையில் நின்று பிரகாசிக்கும் இந்தச் சுடரொளியே ஆதி அந்தமாகும். ஆதி அந்தமான இந்தத் தூண்டாத சோதியில் தான் தொண்ணூற்று ஆறு தத்துவங்களும் தோன்றின.

37-39 தொண்ணூற்று ஆறு தத்துவங்கள் ஒன்றாகச் சேர்ந்துதான் தாயின் கருவில் தேக ரூபம் கொண்டன. இந்த தொண்ணூற்றாறு தத்துவமே உடல் தோன்றுவதற்குக் காரணமாகும். இவை சிவ ரூபமான சிசுவாக இம் மண்ணுலகில் தோன்றும். இதனுடைய பெருமையைக் கூறுகிறேன் கேள். சிசுவான இக்குழந்தைக்கு அறிவு உண்டாகும் போது அங்கே பதியும், பசுவும், பாசமும் சேர்ந்து பல தொழில்கள் புரிவார்கள்.

40-43 பசு பதி பாசத்தின் தொழில்குணம்: அறிவானது பதியுடன் சேர்ந்தால் சிவயோகம் செய்து சிவபதி சேர்வான். இதுதான் அறிவு பதியுடன் சேர்ந்ததால் உண்டாகும் பயனாகும். பசுவுடன் அறிவு சேர்ந்தால் கோபம் கெட்ட புத்தி போன்றவை உண்டாகும். மௌன மாக இருந்தவனுக்கும் கோபம் உண்டாகும். பேசாத குழந்தை பேச ஆரம்பிக்கும்.

பாசத்துடன் அறிவு சேர்ந்தால் அறியாமை, ஆணவம் போன்றவை தோன்றி மாயையில் சீவன் சுழலும். இதற்குக் காரணம் கர்ம வினையாகும். சிவபெருமானின் அருளாலே தேகத்தின் செயலைக் கண்டீர். இப்பொழுது இந்த பசு. பதி, பாசம் ஆகியவற்றின் செயலைக் கூறுவோம்.

44-51 இந்த மூன்றின் பெருமை யாராலும் சொல்ல முடியாது. இந்த மூன்றாலேயே ஒருவருக்குப் பெருமையும் சிறுமையும் ஏற்படுகிறது. அது எவ்வாறு ஏற்படுகிறது என்றால் பசுபதி, பாசம் மூன்றாலேயே சகல விதமான செயல்களும் தோன்றுகின்றன. பதி என்றால் சிவமாகும் பசு என்றால் சீவனாகும். பாசம் என்றால் தேகமாகும். இவை மூன்றும் வளர்ந்த விதம் கூறுகிறேன் கேள். சந்திரனை தரித்த சிவபெருமான் அருளால் அதன் நன்மை பற்றி கூறுகிறேன் தேகத்தில் பதியானது சோதியாகும் பசுவானது உள்ளே உயிராகவும் பாசமானது பசுவிற்கு உடலாகவும் அமையும். பசுவும் பாசமும் பதியான சிவனை நாடும். பசுவானது பாசத்தை அறியும். ஆனால் பாசம் தன் தலைவனான பசுவை அறியாது. இந்த பாசம் பசுவை அறிய வேண்டுமானால் ஒரு நல்ல குருவை நாடி அவருடைய அடியை வணங்கினால் அவருடைய உபதேசத் தால் பாசமானது பசுவை அறியும். அப்படி பாசம் பசுவை அறிந்தால் பசு தன் தலைவனான பதியை அறியும். இவ்வாறு [illegible] பசுவினை அறிந்தால் பல சித்துகள் சித்தியாகும். இந்த சித்தியினால் மகிழ்ந்து சித்து

விளையாட்டில் மனம் ஈடுபட்டால் முத்தி, மோட்சம் போன்ற பதவிகள் கிட்டாது.

52-65 அஞ்செழுத்தின் மகிமை : அண்டத்தில் உள்ள விந்துவில் ஓங்காரம் நிற்கும். ஓங்காரத்தில் அகாரமும் உகாரமும் நிற்கும். பிண்டமான இந்த மூன்றில் இருந்து தான் அஞ்செழுத்து உண்டாயிற்று. அதாவது அகாரம் சிவமாகும். உகாரம் உயிரான சிவமாகும். ஓங்காரம் என்பது உடலாகும். இந்த உண்மை வெளிப்பட வேண்டு மாயின் நீ ரேசகம், பூரகம், கும்பகம் என்று முறைப்படி வாசியோகம் பிராணாயாமம் செய்ய வேண்டும் எவ்வாறு எனில் மூலத்தை (அதாவத மூலாதாரத்தை மனதில் நினைத்துக் கொண்டு செய்தால் மூல அக்கினியான தீபச் சுடரொளி தோன்றும். அதுவே பூரணமாகும். இதுவே சிவயோகமாகும். இவ்வாறு சிவயோகம் செய்து தீபச்சுடரை தன்னுள் கண்டால் சிகாரமான சுழுமுன்னை சித்தியாகி தேகம் அழியாமல் நிற்கும். நானும் இவ்வாறே செய்து குண்டலியின் மகிமையால் சதுரகிரி சென்றேன். அங்கே அகத்தீசன் (அகம்—உடல் ஈசன்—தலைவன்) இவ்வுடலுக்கு தலைவனான சிவபெருமானைக் கண்டேன். (சதுரகிரி என்பது மேருவான சகஸ்ராரம்). அவருடைய பாதத்தில் விழுந்து வணங்கி நின்றேன். அஞ்செழுத்தின் பெருமையையும், மூன்றெழுத்தான ஓங்காரம்—அகாரம்—உகாரம் இவற்றின் நிலையையும் எனக்கு எடுத்துரைத்து உண்மையையும் காட்டினார்.

பிறகு மேலும் சோடச உபசாரம் செய்து வணங்கி நின்ற பொழுது வாதம்—வசியம்—வயித்தியம் இவற்றின் கை முறையும் செய்முறையும் காண்பித்து சரக்கு வைப்பு முறையும் கூறி, வாலை, மவுனம் போன்றவற்றின் விளக்கம் கூறி வேண்டிய வரமும் அருளினார். அருளிய பிறகு நான் கூறிய முறையில் அனைத்தையும் செய்தால் சித்தியாகும் என்றும் கூறினார்.

66-68 நூல் பெருமை : நான் பார்த்தபடி கண்டு சொன்ன இந்த எண்ணூறு பாடலை எவர் படிக்கிறார்களோ அவர்களுக்கு அண்ட பிண்டத்தின் விளக்கம் தானே தோன்றும். நான் சொன்ன ஆதி நிகண்டை அறிபவன் குருவின் பெருமையை அறிவான். மேலும் என்னுடைய சூத்திரம் எண்ணூறை அறிபவன். யோகத்தில் நிலைத்து சித்தி பெறுவான். அதைத் தவிர சுருக்கம் எண்பது என்ற நூலை பார். இது எண்ணூறு மந்திரத்தின் சுருக்கமாகும். இதை அறிபவர்கள் நடுமனையான சுழுமுனையை அறிவார்கள். பிறகு வாலை என்ற தேவியை அறிந்துகொள்.

69-75 வாலை பூசை : கால் முகங்கள் சுத்தி செய்து கொண்டு ஞானமான திருநீறைப் பூசிக்கொண்டு வாலை மந்திரம் செபம் செய்து சிவமான விந்துவைக் கொண்டு நவவாசல் கொண்ட இந்த தேகத்தின் மேல் உள்ள பாசம் தீர வரம் வேண்டிக்கொள். இவ்வாறு வேண்டி பரவெளியில் நின்று தோத்திரம் பண்ணினால் வினாடிப் பொழுதில் வாலைதோன்றுவாள். இவ்வாறு வாலையைக்கண்டு காலை, மாலை இருவேளை வணங்கினால் இந்த தேகம் ஆலய மாகும். தாழ்வு தோன்றாது. இதுவே தவமாகும். எவ்வாறு எனில் ஓங்கார வட்டத்துக்குள் சிவமான விந்துவை சிம் என்று பூசை செய்து வந்தால் சிவயோகமாகும். தவ வன்மை ஏற்படும். (தேகமான கோவிலில் இந்த யோக நிலையில் ஆகம முறைப்படி) சிவசக்தியைப் பூசித்தால் தேகம் சிவமாகி சிவயோகமாகும். முறைப்படி செய்தால் சித்தியாகும்.

76-80 வயிரவர் பூசை : வயிரவர் பூசை சித்திக்க முறைபடி கூறுகிறேன் கேள். முத்திக்கு ஆதிகாரணம் வயிரவர் பூசையாகும். பரமவெளியில் நின்று புத்தி என்ற குகைக்குள் மனதை வைத்து அருள்புரிய வேண்டினால் வயிரவர் முன்னே நின்று அருட்பாலிப்பார். பிறகு அண்ட மான, உடலில் உள்ள முத்திக் கொழுந்தான சுழுமுனை

தீபத்தை வாசியினால் நோக்கி நேர்நிலையில் நின்று கண்டால் சித்தம் விளக்கம் பெற்று தீபச்சுடர் சிவன்தான் என்று புரியும். இவரை அறிந்த பின் எதைச் செய்தாலும் சித்தியாகும். சிவமான இவரை ரவிமதியைக் கொண்டு வணங்க வேண்டும். சிவமான இவரே சுரபூபதி. சதாசிவமாக நாதத்தில் நிற்பார்.

(நாதம்—ஓங்காரம்), (இரவி—சூரிய நாடி), மதி—சந்திரநாடி).

81 கல்லுப்பு : கல்லுப்பு என்பது அப்புவான நீரும் உப்பும் சேர்ந்து காரமேறி சிவமாக-கடலுக்கு அடியில் நிற்கும். இதற்குப் பெயர்தான் கல்லுப்பு.

82-86 முப்பூக்குரு : கல்லுப்பும், நாதமான பூநீறும், பிரமக்கல்லான வழலையும் எடுத்து அதை நாதநீர், விந்துநீர் இரண்டும் விட்டு அரைத்து உருட்டிக் காய்ந்தபின் ஓட்டில் வைத்துப் புடம் போட முப்பூ என்ற சிவகுரு கிடைக்கும். இதில் அனேகவிதம் உண்டு. இது இயற்கையிலும் கிடைக்கும். இந்த முப்பூவை எந்தச் சரக்கில் சேர்த்து முடித்தாலும் வீரியம் உள்ளதாக இருக்கும்.

மேல் சொன்ன அனைத்து சரக்குகளையும் சுத்திப் படுத்திய பிறகுதான் பயன்படுத்த வேண்டும்.

ஆணவம் நீக்கி—அழுக்கை நீக்கி (சுத்தப்படுத்தி) வாய்நீர் என்பது உமிழ்நீர் அல்ல. வாய்நீர், நாதநீர், விந்துநீர் என்பவை பரிபாஷைச் சொற்கள். இவற்றை உள்ளபடி அறிய அகஸ்தியர் பெருநூல் காண்டம் என்னும் அகஸ்தியர் பனிரெண்டாயிரத்தைப் பார்க்கவும். (எமது வெளியீடாகத் தயாரிக்கப்படுகிறது.)

87-88 சீனவைப்பு : சீனம் என்ற சரக்கை வைப்பதற்கு நல்ல உவர் உப்பு (பூநீறு), கல்லுப்பு இரண்டையும் சேர்த்து பழச்சாறும் தயிரும் விட்டு ஒரு பாண்டத்தில் சீனல மண் செய்து மண்ணால் பாண்டம் முழுவதும் பூசி

பசுவின் சாணத்தில் ஒரு மண்டலம் புதைத்து வைக்க சினமாகும்.

பாட்டில் நல்லுறவா முப்பு என்று இருக்கிறது ஆனால் அந்த இடத்தில் நல்லுவருப்பு (பூநீறு) என்று வர வேண்டும்.

நல்லுவருப்பு — நல்ல பூநீறு

பழச்சாறு — எலுமிச்சம் பழத்தின் சாறு

தயிர் — எருமை மாட்டின் தயிர்

ஆவின்பதிதனிற் — பசுவின் சாணத்தில்.

89 90 சூடன் வைப்பு: சினம் வெடிஉப்பு, மூலம், (பூநீறு) நாதம் இவையெல்லாம் சேர்த்து ஒரு பாண்டத்தில் இட்டு ஒரு மண்டலம் பூமியில் புதைத்து வைக்க, ஆலத்தி பூரம். (சூடனாச்சு).

91-92 வெண்கார வைப்பு கல்உப்பையும். படிகாரத்தையும் மாவுபோல் இடித்து அத்துடன் உளுந்தின் மாவும், நல்உப்பான பூநீறும், முட்டையின் வெண்கருவும், கள்ளியின் பாலும் சேர்த்து ஒரு பானையில் இட்டுப் பிசிரி கிண்டி அதன் மேல் ஒரு சிறு தோண்டி வைத்து மூடி அசையாமல் சாணியில் புதைத்து வைக்க. ஒரு மண்டலத்தில் வெண்காரம் ஆகும். மேலே சொன்னதில் நல்ல குன்றி மணியின் மாவும் சேர்க்கவும்.

நல்உப்பு — பூநீறு அல்லது (நல்உவருப்பு என்று பெயர்)

படிகம் — படிகாரம்.

அண்டம் — முட்டை (வெண்கரு மட்டும்)

பாட்டில் — நாமென உழுத்து நவமணிக் குண்டும் என்று இருக்கிறது. ஆனால் அவ்விடத்தில் "நாமே வுளுந்து நன் மணிக்குன்றும்" என்று வரவேண்டும். அதாவது நல்ல முழு உளுந்தும் மற்றும் நல்ல குன்றிமணி. இவை இரண்டும் மாவாய் இடி என்கிறார். மற்றும் 92ஆம் பாட்டில் [illegible]

அடியை இடித்துடன் பால்வார்த் தியல்புடன் கிண்டி என்று இருக்க வேண்டும்

பால் — கள்ளியின் பால்

இரண்டாவது அடியில் — தோன்றியே மூடி என்று இருக்கிறது. தோண்டியே மூடி என்று இருக்க வேண்டும்.

தோண்டி — சிறு பானை.

93–94 சார வைப்பு : சாரத்தின் விளைவை விபரமாகச் சொல்கிறேன் கேள். பசுவின் நீர் (கோமூத்திரம்) ஒட்டகத்தின் நீர், ஆனையின் நீர், ஆட்டின் நீர், மனிதர் சிறுநீர் இவை ஐந்து நீரையும் எடுத்து ஒரு சட்டியில் ஊற்றி அதில் வெடிஉப்பும் கல்உப்பு சுன்னமும் சேர்த்து அடுப்பில் வைத்து நன்றாகப் பாகு பதம் வரும் வரை எரித்துப் பிறகு மூடி பூமிக்கு அடியில் ஒரு மண்டலம், அதாவது 48 நாள் புதைத்து வைக்க சாரம் என்ற சரக்காகும். இதற்கு நவச்சாரம் என்ற பெயரும் உண்டு.

குறிப்பு :- இது பழுப்பு நிறமாகவும் வாயில் இட்டால் புளிப்பாகவும் இருக்கும். இந்தச் சரக்கு சிறந்த சரக்காகும். ஆனால் கடையில் கிடைக்கும் நவச்சாரம் என்பது அரேபியா, துருக்கி போன்ற நாடுகளில் ஒட்டகம், மாடு, குதிரை, ஆடு போன்ற மிருகங்களின் சாணத்தை உலர்த்தி எரித்து அதை ஏதேனும் ஒரு மிருகத்தின் நீரைவிட்டுக் கரைத்து தெளிய வைத்து மண்பாண்டத்தில் விட்டுச் சுண்டக் காய்ச்சி உலர்த்திக் துண்டுதுண்டாக நறுக்கி அனுப்புகிறார்கள். இந்த முறையில் தயாரித்த சாரம் மட்டமான சரக்காகும்.

95–96 துருசுவைப்பு : கல்உப்பு தண்ணீரையும், பூநீரையும், பழச்சாறையும் தயிரையும், ஒரு செப்பு பாத்திரத்தில் இட்டு மூடி பூமியில் புதைத்து மண்டலம் சென்று எடுக்க துருசு என்ற சரக்கு கிடைக்கும்.

கல்உப்புத் தண்ணீர் கல்உப்பை பொடித்து தண்ணீரில் கலக்கி கரைந்த உடன் மேலும் கல்உப்புப் பொடியைக் கலக்க வேண்டும். உப்பு தண்ணீரின் அடியில் கரையாமல் நிற்கும் சமயம் பார்த்து உப்பு இடாமல் நிறுத்திவிட வேண்டும். இதற்கு பதிலாக கடல் நீரையும், சீனத்தையும் சேர்க்கலாம்.

97-98.99 துருசு பாஷாணம் வைப்பு வெடிஉப்பு, பச்சை, சீனம், சூதம் இவை எல்லாவற்றையும் எடுத்து சரி எடையாய் சேர்த்துப் பொடித்து ஒரு பானையில் இட்டு அதனுடன் முட்டையின் மஞ்சள் கருவும், பன்றியின் நெய்யும் விட்டுப் பிசைந்து ஒரு வட்டகையில் வைத்து மூடி அடுப்பேற்றி எரிக்க, கட்டி பாஷாணமாகும். இதற்கு துருசு பாஷாணம் என்று பெயர்.

பச்சை பச்சை என்பது ஒருவித சரக்கு. இந்தச் சரக்கு பூமியில் இருந்து இயற்கையாக எடுக்கப்படுகிறது. இதைப் பற்றி அகஸ்தியர், போகர் போன்ற சித்தர்கள் மலைகளில் இருந்து எடுக்கப்படும் சரக்கு என்று கூறுகிறார்கள்.

100-101 கெவுரி வைப்பு: வெடி உப்பு, நாகம், சூதம், காரம் இவை எல்லாவற்றையும் பொடித்துப் பன்றி நெய்யும், மஞ்சள் கருவும் சேர்த்து ஒரு கிண்ணியில் இட்டு நன்றாக மூடி அடுப்பில் வைத்து ஒரே சீராக எரித்தால் மஞ்சள் நிறமான கெவுரி பாஷாணம் கிடைக்கும்.

காரம்--வெண்காரம்.

102-108 வீரம் : } வீர வைப்பு : } சீனமும் வெடி உப்பும், சாரமும், கல் உப்பும், இந்துஉப்பும் துரிசும் சரி எடையாக எடுத்து அதற்குச் சரி எடை ரசத்தைச் சேர்த்துப் பொடித்து மாவாக எடுத்து காசி என்னும் குப்பியில் இட்டு அதன் மேல் மூடி ஒன்பது முறை சீலைமண் செய்து கொள்ள வேண்டும். ஒரு பாண்டத்தில் மணலைக் கொட்டி அதன் நடுவில் காலிக் குப்பியை வைத்து மணலைத்

கொட்டி அனல் மூட்டி ஒரு சாமம் எரித்துக் குளிர வைத்து, குளிர்ந்தபின் குப்பியை உடைத்து அதில் உள்ள சரக்கை எடுத்துக் கொள்ள வேண்டும். அதற்கு சமன் ஆதியான பூநீறும் பாறை உப்பும் அன்னபேதியும் பொடித்துக் கொண்டு இரண்டையும் ஒன்றாகக் கூட்டிக் காசி குப்பியில் இட்டு முன்போல் எரித்து ஆற வைத்துப் பார்க்க மிகக் கடுமையான வீரம் கிடைக்கும். வீரத்தைப் பற்றி சித்தர்கள் முன்பின்னாய் பாடி வைத்தார்கள் ஆனால் கொங்கணவர் மச்சமுனியான என்னுடைய எண்ணூறு பாடலையும் கண்டு படித்துத் தேறியதால் உண்மையாகப் பாடினார். அதனால் ஓங்கார நாதம் கேட்டு முக்தியும் அடைந்தார்.

**109-119** இந்த எண்ணூறு மந்திரம் குரு மொழியாக வந்தவை. இதை அறிந்தவர் எவருக்கேனும் சொன்னால் மரண இடிக்கு இரையாகி மாண்டு போவார்.

மந்திரம் எண்ணூறை அறியாத மூடன் பெண் மயக்கத்திலும், கோள் சொல்லிக்கொண்டும் மூடர்களான மற்றவர்களுடன் சேர்ந்து கொண்டு குடும்பங்களை அழிப்பான். காலத்தைப் பற்றி அறியாமல் பல கதைகள் சொல்லுவான் உபதேச மொழிகளை கூறுவான். தன் உயிரைப்போல் பிற உயிர்களைப் பார்க்க மாட்டான். நெஞ்சில் ஈரமில்லாமல் உயிரைக் கொன்று இறைச்சியைத் தின்பான். பூசைகள் செய்வான். பூரணத்தை அறிய மாட்டான். நிலையில்லா இந்த இருளில் நின்று மாயை ஆகிய வலையில் சிக்கி உலக வாழ்க்கையை உண்மை என்று எண்ணி வாசியை அறியாமல் வீண் காலம் கழிப்பான். இவ்வாறு தீய குணம் உடையவனிடம் சேர்பவர் இந்த உலக வாழ்க்கையாகிய மாயையே உண்மையான பிரமம் என்று நம்பி ஏமாற்றம் அடைவர். என்றும் நிலையுடன் இருக்கும் மூல வாசியை அறிய மாட்டார். புருவ மைய தீபம், வாசியின் குணம், உடலின் உள் இருக்கும் ஒளி, மூலத்தின் செயல் இவற்றை அறிய மாட்டார். இந்த மூல நாடியானது மூலாதாரத்தில் இருந்து கிளம்பி பிடரிவரை செல்கிறது. பிடரி சேரும்

இடத்தில் தான் பரப்பிரமம் இருக்கிறது. இதுதான் பரிபூரணம் எனப்படும். பூரணமான இது கருணை பெரு வெளி, பரம குருவான இப்பெரு வெளியைப். புருவ மைய தீபத்தில் பார்த்தால் நீயும் பரிபூரணமாவாய். ஆகவே அந்த தீபத்தின் ஒளியைப் பார்.

120-123 லிங்க வைப்பு: வங்கம் ஒன்று சூதம் ரெண்டு வங்கத்தின் குரு பாதி, குருவுக்கு பாதி சீனம். இவற்றை ஒன்றாகச் சேர்த்துப் பொடித்து குப்பியில் அடைத்து மூன்று சாமம் எரிக்க சுத்தமான லிங்கம் கிடைக்கும்.

(வங்கம் 1 பலம் என்றால் சூதம் 2 பலம் - பலம் வங்கத்தின் குரு - பலம் சீனம் என்ற கணக்குப்படி சேர்க்கவும்.)

ஒரு சாமம் எரித்தால் போதும் என்று முனிவர் கூறு கிறார். அப்படி ஒரு சாமம் எரித்துப் பார்த்தபோது லிங்கம் சரியாகக் கிடைக்காவிட்டால் மூன்று சாமம் எரிக்க வேண்டும்.

சூரியன் போல் பிரகாசிக்கும் எண்ணூறு மந்திரம் தன்னை மகத்தான கொங்கணவர் தந்திரமாக தன் மனக் கண்ணால் பார்த்தார். ஆதியான மூலப் பொருளைக் கண்டார். ஆதி சரக்கு அறுபத்தி நாலும் சித்தர் மெச்சும் வகையில் வைத்தார். கொங்கணவரை முறையாகக் கற்றால் சோதிதுருவம் பிரகாசிக்கும்.

124-126 மிருதார் சிங்கி: சிங்கி என்னும் சரக்கை வைக்கும் முறையைக் கேளு. கருநாகம் வெடி உப்பு, சூதம், சீனம் நான்கும் கூட்டி எல்லாவற்றையும் பொடித்து குகையில் இட்டுக் கொள்ளவும். குகையின் அடியில் ஒரு துளை இட்டு குகையைப் பழுக்க எரித்தால் சரக்கு உருகி குகையின் அடியில் உள்ள துளையின் வழியாக ஒழுகித் திரண்டு நிற்கும். அது தேன் நிறமாக இருக்கும் இந்த சரக்கு ஆதி சரக்காகும். இது குரு முடிக்கப் பயன்படும்.

குறிப்பு : குகையின் அடியில் ஒரு துளையிட்டு அதற்கு அடியில் ஒரு குகை வைக்க வேண்டும். மேல் குகையில் அனல் இட்டு உருக்கினால் சரக்கு உருகித் துளை வழியாக இறங்கி அடியில் திரளும்.

124 சிலம் குரு சூதமும் சீனமுங் கூட்டி'' என்று இருக்க வேண்டும்.

125ஆம் பாடலில் ''வடிந்திடும் அடியில்'' என்று இருக்க வேண்டும்.

127-129 பூரவைப்பு : பூரம், சீனம், காரம் இவை எல்லாம் நிறை சரியாக எடுத்து சந்தனக் குழம்பில் அரைக்க வேண்டும். கூழ்பதத்தில் எடுத்து ஒரு கலசத்தில் இட்டு அந்தக் கலசத்தில் வால் மிளகுப் பொடியைச் சேர்த்து மூடிப் பூமியின் அடியில் வைத்து ஒரு மண்டலம் சென்று எடுத்துப் பார்க்க பூரம் குருவாக நிற்கும். அண்டர்கள் போற்றும் ஆதியான சரக்கு. இது சித்தர்கள் செய்யும் முறையாகும்.

மேலே கூறிய பூரவைப்பு என்பது பச்சைக் கற்பூர வைப்பு ஆகும். இதில் வரும் காரம் வெண்காரமாகும். வெண்காரத்துக்கு பதில் சாரமும் சேர்க்கலாம். வால்மிள குடன்கஸ்தூரி, ஏலம், கோரோசனை சிந்தில், புனுகு போன்ற சரக்கும் சேர்க்கலாம் என்கிறார் கொங்கணவர்.

130-132 சாம்பிராணி வைப்பு குங்குலியம், அரக்கு, கருவாய் பட்டை இவை எல்லாம் நன்றாக இடித்து பொடியை எடுத்து ஒரு பானையில் போட்டு நெய்யை ஊற்றிப் பிசைந்து அடுப்பில் வைத்துத் தீமூட்டி எரிக்க உருகும். சரியாக உருகும் வரை எரித்துப் பின்பு கீழே இறக்கிப் பார்த்தால் கெட்டியாக இருக்கும். இந்தச் சரக்கின் பெயர் சாம்பிராணியாகும்.

130 ஆம் பாடலில் : தாமே குங்கிலியந் தன்னோ டரக்கும் என்று வர வேண்டும்.

133-135 நாகவைப்பு : காரீயம், வெள்ளீயம், சூதம் மூன்றையும் சேர்த்து உருக்கிக் கல்வத்தில் இட்டு வெடிஉப்பு, தாளகம், கெந்தி, மூன்றையும் சேர்த்து இடித்து மொத்தமாக ஒரு குகையில் இட்டு உருக்க வேண்டும். உருகிய அந்தக் குழம்பை அச்சில் வார்த்தால் கண்விழுந்து நாகமாகும். நாகம் சித்தியான இடத்தில் தரித்திரம் இருக்காது.

136-139 இந்த எண்ணூறு மந்திரம் முத்திக்கு வழி வகுக்கும். மோட்சமளிக்கும் புத்திக்கு ஆதியான பொருளின் விளக்கம் தோன்றும். அதனால் அருளை வேண்டுவோர் இந்த எண்ணூறை கண்ணின் மணிபோல் பாதுகாக்க வேண்டும். அது மட்டும் இன்றி வெகுபதனமாக குகையில் வைத்து குருவைப் போலே காக்க வேண்டும். இந்த நூலை கெட்ட எண்ணம், கெட்ட செயல் உடையவருக்கு கொடுக்க கூடாது. நேர் நெறியில் நிற்கும் பெரியோருக்கு மட்டுமே கொடுக்க வேண்டும். எல்லோரிடமும் அமர்ந்து பேசு. ஆனால் மனதை சுழிமுனையில் வை. அங்கு உள்ள தீபச் சுடரைப் பார்த்து அதன் அருளை வேண்டிநில்.

140-141 கார்வங்கரசிதவைப்பு : வெடிஉப்பு, தாளகம், கார்வங்கம், ரசம், இவை எல்லாம் குகையில் இட்டு எரிக்க உருகி. இறுகும் இதற்குப் பெயர் வங்க ரசிதம். இது சித்தர்கள் கூட்டும் முறையாகும்.

140 ஆம் பாடலில் ''வேர் வங்காரமும் வெடியுடன் தாளகம்'' என்று உள்ளது. ஆனால் 'வேர் வங்கரசமும் வெடியுடன் தாளகம்'' என்று இருக்க வேண்டும். அதே பாடலில் ''பாரத்த'' என்பதற்கு பதில் ''பாரந்த'' என்றும் 141 ஆம் பாடலில் வரித்த என்பதற்கு பதில் ''விரித்த'' என்றும் இருக்க வேண்டும்.

142-144 வெள்ளிரசிதம் வெள்ளி, ரசம், கெந்தகம், வங்கம், தாளகம் இவை எல்லாம் ஒன்றாகக் கூட்டிப் பொடித்து குகையில் வைத்து அனல்மூட்டி உருக்கினால்

பக்குவமாகி வெள்ளி ரசிதமாகும். இந்த வெள்ளி ரசித காண அருள் வேண்டும். மனதை ஒருநிலைப்படுத் பார்த்தால் உண்மை விளங்கும்.

145-149 பெருங்காய வைப்பு நல்ல உள்ளி, (பூண் கடுகு இவை இரண்டையும் நன்றாக மைபோல் அரைத் வெயிலில் உலரவைக்கவும் வேப்பம்பட்டைத் தைலத்துட சிறிது நீரும் சேர்த்துக் கொண்டு முன் உலரவைத்த சரக்கி ஊற்றி நன்றாகப் பிசைந்து உருட்டி ஒரு பீங்கான் ஜாடிய போட்டு இருட்டில் ஒரு மண்டலம் வைக்கப் பெருங்கா மாகும். நல்ல வாசனை வீசும். இதை உணவுடன் கூட் உண்டால் தேகம் இறுகி பலப்படும். வாசியில் உள்ள நீரை போக்கிவிடும். இந்த எண்ணூறு பாடலை நெறியுட பார்த்து நேர்நிலையில் நின்றவர்கள் கருவும், குரு தோன்றி திருவருள் பெற்று சித்தி அடைவார்கள்.

150-151 தொட்டி பாஷாண வைப்பு வெள்ளீய காரீயம், துருசு இவை எல்லாம் ஒரு கல்வத்தில் இட் நன்றாகப் பொடித்துக் குகையில் இட்டு எரிக்க. உரு கட்டும். இதற்கு தொட்டி பாஷாணம் என்று பெயர்.

## நூல் பெருமை

152-154 இந்த எண்ணூறு பாடலை முதலிலிருந் கடைசிவரை முழுமையாகப் பார்த்தோர்க்குத் தான் யா என்ற விளக்கம் கிட்டும். அதுமட்டும் இன்றி மதிஅமுர்த கிட்டும். ஓங்கார பீடமான மூலாதாரத்தில் உள் சுடரொளி ப்ரகாசிக்கும். அந்த தீபம் சிவசக்தியி ரூபமாகும். அந்த தீபம் நின்றால்தான் தேகசித்தியாகு வாசியானது அந்த சிவசக்தி ரூபமான தீபத்தில் சென் அடங்குவது சிவயோகமாகும். இந்த யோகத்துக் ஆதியான அட்சரம் ஓங்காரமாகும் தேகத்துக்கு ஆதி சி சக்தியான நாதவிந்து ஆகும். தாகத்துக்கு ஆதி தண்ணீராகும்,

155 வெடிஉப்பு: ஊசரம் என்ற மண்ணை நீர்விட்டு வடித்து அதனுடன் பழச்சாறு விட்டுக் காய்ச்சினால் வெடி உப்பு என்ற கம்பி உப்பாகும்.

குறிப்பு: ஊசரம் என்பது கடற்கரைப் பிரதேசங்களில் மண் சுவர்கள் கட்டப்பட்டு கடலில் இருந்து விசும் உப்புக் காற்றான (வழலை) அந்தச் சுவரைத் தாக்குவதால் மண் உளுத்து மிருதுவாகி சரிந்து கொட்டும் இந்த மண்ணிற்கு தான் ஊசரம் என்று பெயர்.

பழச்சாறு: எலுமிச்சம் பழத்தின் சாறு.

156-157 பூநீறு: சவுட்டு உப்பை வேண்டிய அளவு எடுத்து அதனுடன் சுத்தசலம் வார்த்துக் கரைத்து வெய்யிலில் வைத்துக் காய்ச்ச பூநீறு பூக்கும். நன்றாக மூடிக் காய்ச்ச அது கட்டும். அதற்குப் வெயர் பூநீறு.

158-159 பூநீர்சவுக்கார வைப்பு: பூநீர், வெடிஉப்பு, நவச்சாரம் இவை எல்லாவற்றையும் எடுத்து நீரில் கரைத்து காய்ச்ச எண்ணைகக்கும். எண்ணையை வடித்து உருட்டு. இந்த சரக்கிற்கு சவுக்காரம் என்று பெயர், திருட்டு வார்த்தை பேசித் திரியும் ரசவாதியை மிரட்டும். இதன் வேதை கோடி வரை பாயும்.

160 சாரலவணம்: பூநீறும், கரிஉப்பும் குதிரை நீரில் கரைத்து பதமாய் எரிக்க சாரலவணம் என்ற உப்பாகும்.

161 சத்திச்சாரம்: சாரம், பூநீறு யானையின் நீர் மூன்றையும் நல்ல நீர் வார்த்துக் காய்ச்ச சத்திச் சாரமாகும்.

162 எவச்சாரம்: வெடிஉப்பு, கல்உப்பு பூநீறு இவை மூன்றையும் அமுரியில் காய்ச்ச எவச்சாரம் கிடைக்கும்.

163-164 காசிகாரம்: பூநீறு, வெடிஉப்பு, எவச்சாரம் இம்மூன்றையும் குதிரை நீரில் காய்ச்ச காசி சாரம் கிடைக்கும். இது எல்லா சரக்கையும் கட்டும், [illegible]

சொன்ன வேதாந்த சாரத்திற்கு இந்த எண்ணூறு இணை யானது.

165 167 ஏகம்பச்சாரம் : வெடி உப்பு, கல் உப்பு, பூநீறு, காசிசாரம் எல்லா சரக்கையும் நீரில் சேர்த்து கரைத்துப் பக்குவமாக எரிக்க பூத்து ஏகம்பச் சாரமாகும்.

167 சீனலவணம் : பூநீர், கல்உப்பு. வெடிஉப்பு இவை மூன்றையும் காடிநீர் விட்டு எரிக்க சீனம் என்ற லவணமாகும்.

168 கெந்தி லவணம் வெடி உப்பு, சாரம், கல் உப்பு, சீனம் இவை நான்கையும் அமுரிவிட்டுக் காய்ச்சி கெந்தி என்ற லவணம் சிவப்பு நிறத்தில் கிடைக்கும் இது ரசத்தைக் கட்டும். அந்த ரசத்தால் எல்லாம் சித்தி.

170-172 இந்துப்பு : சீனம், கல்உப்பு, வெடிஉப்பு, சாரம் இவைநான்கையும் நல்லநீருடன் கூட்டி அதனுடன் குதிரை, பசு இவற்றின் நீரைவிட்டுக் காய்ச்சி கெட்டியாக வரும் பதத்தில் பூநீறு அரைவாசி போட்டு காய்ச்சி கெட்டியாக வரும் பதத்தில் பூநீறு அரை வாசி போட்டுக் காய்ச்ச இந்துப்பு கிடைக்கும். இது சகலவித நோய்களையும் விரட்டும்.

173-174 சிந்து லவணம் : சாரம் படிகாரம், சீனம், வெடி உப்பு பூநீறு இவை அஞ்சு சரக்கையும் நீரில் கரைத்து அடுப்பில் வைத்துக் காய்ச்ச சிந்து லவணம் என்ற உப்பு கிடைக்கும்.

175 176 அட்டுப்பு பூநீர், வெடிஉப்பு, சீனம், சாரம் இந்துப்பு தண்ணீரில் கரைத்து சட்டியில் விட்டு காய்ச்ச நல்ல பாகுபதம் வரும் சமயம் இறக்கி வைக்க இறுகிக் கட்டி அட்டுப்பாகும்.

177-178 கல் உப்பு பூநீறு, சாரம், வெடிஉப்பு, கடல் நீர் இவை நான்கையும் தண்ணீர்விட்டுக் கரைத்து தீ

எரித்தால் சரக்குகள் எல்லாம் கட்டிக் கல் உப்பாகும். சரியான முறையில் செய்து பார்த்தால் கல்லுப்பு கிடைக்கும். (இதை குதிரை நீரில் எரிக்க நல்ல உப்பு கிடைக்கும்.)

179-180 சூடன் உப்பு வெடிஉப்பு, சீனம், சாரம், கல்உப்பு, பூநீறு. இவை எல்லாம் எடை சரியாய்க் கூட்டி நீரில் கரைத்து ஒரு பானையில் கொட்டி தீமூட்டி எரித்து காய்ச்ச சூடன் என்ற உப்பு கிடைக்கும்.

181-182 சவுட்டுப்பு பூநீறு, இந்துப்பு, காரம், வெடிஉப்பு, சீனம், சாரம் இவை எல்லாவற்றையும் குதிரை நீரில் கரைத்து தீமூட்டி எரிக்க நீர் எல்லாம் வற்றி நல்ல சவுட்டுப்பாகும்.

183-185 உப்புக் கட்டு கரிஉப்பு, வெடிஉப்பு, சீனம், நவச்சாரம் நான்கையும் நீரில் கரைத்து தீமூட்டி எரித்துக் காய்ச்ச சரக்கெல்லாம் காய்ந்து வெண்மையாய்க் கட்டும். இந்தஉப்புக் கட்டுதான் உண்மையான கட்டாகும். இதை எவருக்கும் சொல்ல வேண்டாம். மேலும் இதுவரை காரசார முறைகளை சொன்னோம். இதை நடுநிலையில் நின்று பார்த்தால் எல்லாம் புரியும். உப்பு எல்லாம் சித்தியாகும்.

186 வைப்புப் பாஷாணம் : முறையாக வைப்புப் பாஷாணம் சொல்லுகிறேன் கேள். இதை முறையாகக் கண்டு போற்றி என்னுடைய அருள் பெற்றால் வைப்புப் பாஷாணம் எல்லாம் இந்த எண்ணூறில் தோன்றும்.

187-188 தொட்டி பாஷாணம் : வெள்ளி, காரீயம் நாகம் ரசம், துருசு, சாரம் இவை எல்லாவற்றையும் பொடித்து ஒரு குகையில் வைத்து உருக்க நல்ல தொட்டி பாஷாணம் கிட்டும். இந்த பாஷாணம் குரு செய்யப் பயன் படும்.

189-190 செப்புத் தொட்டி பாஷாணம் ; நாகம், ரசம், வங்கம், லிங்கம், தாளகம், இவை எல்லாவற்றையும்

நன்றாகப் பொடித்துக் குகையில் வைத்து அடுப்பில் வைத்து எரிக்க சரக்கெல்லாம் சேர்ந்து உருகி இறுகிக் கட்டும் இதற்கு செப்புத் தொட்டிப் பாஷாணம் என்று பெயர்.

191-192 அயத் தொட்டிப்பாஷாணம் : வங்கம், நாகம், சூதம், நல்ல கெந்தகம், லிங்கம் அரிதாரம் இவையெல்லாம் ஒன்றாகக் கூட்டிப் பொடித்துக் குகையில் வைத்து உருக்க, உருகிக்கட்டும் இதற்குத்தான் அயத் தொட்டிப் பாஷாணம் என்று பெயர்.

193 194 புத்துத் தொட்டிப் பாஷாணம் : நாகம், வெள்ளீயம் லிங்கம், தாளகம், வெடிஉப்பு இவை எல்லா வற்றையும் நன்றாகக் கூட்டிப் பொடித்து குகையில் வைத்து உருக்க இளகிக் கட்டும் இதற்கு புத்துத் தொட்டிப் பாஷாணம் என்று பெயர்.

195-196 இரத்த சிங்கி : துருசு. கெந்தி, அரிதாரம், லிங்கம். இவை எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு அந்த எடைக்கு வெண்காரம் இட்டுப் பொடித்து பொடித்த சரக்கு எல்லாவற்றையும் ஒரு செப்பு அகலில் இட்டு எரித்தால் உருகி வெகு சீக்கிரத்தில் இரத்த சிங்கி என்ற சரக்காகும்.

197-198 ஏம சிங்கி ஏம சிங்கி என்பது அரிதாரம் லிங்கம், கெந்தகம், நல்ல துருசு, கார்நாகம் இவை எல்லா வற்றையும் ஒன்றாகச் சேர்த்துப் பொடித்து ஒரு செப்பு அகலில் இட்டு மூடி எரிக்க அவை உருகிக் கட்டி ஏம சிங்கி என்ற சரக்காகும்.

199-200 ரசிதசிங்கி தாரம், வீரம், துத்தம், மனோ சிலை, சிங்கி, வெள்ளைஇவை எல்லாவற்றையும் பொடித்து ஒரு வெங்கலப் பாத்திரத்தில் போட்டு அதற்கு மேல் செப்புப் பாத்திரத்தில் மூடி அடுப்பில் வைத்து தீமூட்டி எரிக்க ரசித சிங்கி என்ற சரக்கு கிடைக்கும்.

இவ்விடத்தில் : தாரம் என்பது அரிதாரம். வெள்ளை என்பது வெள்ளைப் பாஷாணம்.

201-203 தீமுருவல் பாஷாணம் கெந்தி, மனோசிலை, அரிதாரம், கனத்த பாஷாணம், துருசு, வீரம், நாகம், ரசம் இவை எல்லாவற்றையும் பொடித்துப் பித்தளை அகலில் வைத்து மூடி முழப்புடம் போட எல்லா சரக்கும் உருக்கி கட்டும். இதற்கு தீமுருவல் பாஷாணம் என்று பெயர்.

201 ஆம் பாடலின் முதல் அடியில் ''பாரு தீமுருவல் பாஷாணந் தன்னையே'' என்று இருக்க வேண்டும்.

202 ஆம் பாடலில் ''நேரொத்தக் குடவன்'' என்று வருகிறது. குடவன் என்றால் பித்தளை என்று பொருள்.

முழப்புடம் : ஒரு முழம் அளவிற்கு பூமியைத் தோண்டி உருவடுக்கி புடம்போட வேண்டும்.

கனத்த பாஷாணம் என்பது : வெள்ளைப் பாஷாணம் என்று இவ்விடத்தில் பொருள் கொள்ள வேண்டும்.

204-205 கார்முகில் பாஷாணம் : நாகம், வீரம், நல்ல பாஷாணம், லிங்கம், பச்சை, அரிதாரம் போன்ற சரக்கை எல்லாம் ஒரு மொத்தமாக எடுத்துப் பொடித்து அயச் செம்பில் வைத்து மூடிப் புடம் போட உருகி இருகும். இதற்கு கார்முகில் பாஷாணம என்று பெயர்.

குறிப்பு : நல்ல பாஷாணம் — வெள்ளைப் பாஷாணம்

பச்சை — இது ஒரு வைப்புச் சரக்கு அகள்தியர் இயற்கையாக விளையும் சரக்காகவும் கூறுகிறார்.

அயச் செம்பு — அதாவது இரசவாத முறையில் இரும்பை செம்பாக மாற்றி செய்யும் உலோகம் அல்ல.

அயச் செம்பு என்பது — இரும்பால் ஆன பாத்திரம் (சொம்பு)

206-208 பாஷாண லிங்கம்: வீரம், மனோ சிலை, ...ங்கம், கெந்தகம், துருசு, ரசம் இவை எல்லாவற்றையும் கட்டிப் பொடித்துக் குப்பியில் இட்டு மூடி ஐந்து அல்லது

ஆறு மண்சீலை செய்து ஒரு பானையில் வைத்து அதன்மே செம்மணல் இட்டு அடுப்பேற்றி அஞ்சு சாமம் எரிக்க நிறம் பெற்ற லிங்கம் உண்டாகும். இது சதகோடி வே பாயும். இதை எடுத்துக் கொண்டு காமனை எரி கருணைக் கண்ணுடைய சிவபெருமானை போற்றுவாய

209-211 வெள்ளைப் பாஷாணம் : வெள்ளை, ர தாளகம் வீரம் வெடிஉப்பு எல்லாவற்றையும் ஒன்றா சேர்த்துப் பொடித்து ஒரு குப்பியில் போட்டுச் சீலை ம செய்து அடி கனத்த ஒரு பானையில் வைத்து அ பானை நிறைய செம்மணல் இட்டு, நான்கு சாமம் எ தால் முத்துப் போல் கட்டி வெள்ளைப் பாஷாணமா ஆதியான வெள்ளை என்ற சரக்கை அறிந்தவன் சித்த வான். சோதியில் நாதமானது சேர்ந்து நின்று பிரகாசிக்

வெள்ளை — இது இயற்கையில் பூமியில் கிடைக் வஸ்து.

213-215 கெவுரி வெள்ளை, வீரம், நாகம், கெ பச்சை, தாரம் இவை எல்லாவற்றையும் பொடித்து செ அகலில் இட்டு மண்சீலை செய்து ஒரு சட்டியில் இ எரித்தால் மருந்து எல்லாம் கட்டி கெவுரி என்னும் பாஷா மாய் நிற்கும்.

ஒரு சட்டியில் அரைவாசி மண்இட்டு அகல் வை மேலும் மண் கொட்டி மூடி எரிக்க வேண்டும். எரிக் போது எள்ளை எடுத்து சட்டியின் மேல் இட் பொரியும் இதுவே சரியான பதமாகும்.

216-219 வீர பாஷாணம் வெள்ளை மனோசி லிங்கம், பச்சை, கெந்தி, வெடிஉப்பு, சாரம், கா அரிதாரம், சூதம் எல்லாவற்றையும் பொடித்து காசி எ குப்பியில் இட்டு மூடி, சீலைமண் செய்து ஒரு தாழி வைத்து அதன்மேல் மண்ணிட்டு நான்கு சாமம் எ கட்டியாகும். ஆறியபின் எடுத்துப் பார்க்க வெண்நி போன்று இருக்கும். இந்த வீர பாஷாணம் எல்லா சரக்கு ஆதி குருவாகும்.

216 ஆம் பாடலில் ''தாகமாய் வெடியுந்'' என்று படிக்கவும்.

217 ஆம் பாடலில் ''ஓரிடை சூதமுருக'' என்று படிக்கவும்.

217 ஆம் பாடலில் முதல் வரியில் சாரமும் காரமும் தன்னோடு தாரமும்'' என்று படிக்கவும்.

220-222 கோழித்தலை கெந்தி: அரிதாரம், மனோசிலை, பச்சை, துத்தம், வெள்ளை, லிங்கம், வீரம், ரசம், நாகம் இவை எல்லாம் பொடித்துக் குப்பியில் இட்டு ஒரு மண் தாழியில் வைத்து மேல் மண் இட்டு ஒரு சாமம் எரிக்க சரக்கு கட்டி கோழித்தலை கெந்தியாகும்.

223-225 சுரைக்காய் கெந்தி: துருசு, துத்தம், நாகம், வீரம், ரசம், லிங்கம், தாரபாஷாணம், தாரம், மனோசிலை, சத்தி எல்லாவற்றையும் கூட்டி நன்றாகப் பொடித்து ஒரு குப்பியில் இட்டு எரித்தால் ஒன்றாகக் கட்டி பொன் போல் பிரகாசமாய் குப்பியில் இருக்கும். இதற்கு சுரைக்காய் கெந்தி என்று பெயர்.

220 ஆம் பாடலில் கடைசி வரியில் ''பூணவே துத்தம்'' என்று மாற்றிக் கொள்ளவும்.

221 ஆம் பாடலின் முதல் அடியில் ''லிங்கமும் வீரமும் நேர்ரச நாகமும்'' என்று படிக்கவும்.

223 ஆம் பாடலில் ''பந்திட லிங்கமும் பாஷாணமானதே'' என்பதற்கு பதில், ''பந்திடும் லிங்கமும் பாஷாண தாரமே'' என்று மாற்றிக் கொள்ளவும்.

சத்தி என்பது சத்திசாரம்.

தாரம் — அரிதாரம்.

தார பாஷாணம்: அரிதாரத்தில் செய்கின்ற பாஷாணம்.

226-229 பவளப்புத்துப் பாஷாணம் : கெந்தி, மனோசிலை அரிதாரம், பச்சை, ரசம், நாகம், வீரம், லிங்கம், சாரம் எல்லாவற்றையும் பொடித்து ஒரு காசிக் குப்பியில் இட்டு மண்சீலை செய்து ஒரு தாழியில் வைத்து அதற்குக் கீழும் மேலும் செம்மண் இட்டு அடுப்பேற்றி நான்கு சாமம் எரித்து பின் குளிரவைத்து எடுத்துப் பார்க்க பவளப்புத்து பாஷாணமாகும்.

230-233 சிங்கி பாஷாணம்: பச்சை, லிங்கம், வெள்ளை, வீரம், நாகம், மனோசிலை, தாரம், காரம், சாரம், சூதம் இவை எல்லாவற்றையும் பொடித்து காசி என்னும் குப்பியில் இட்டு குப்பியை ஒரு பானையில் வைத்து அதன் மேல் மணல் கொட்டி நான்கு சாமம் எரித்து குளிர வைத்து குருவை வணங்கி குப்பியை உடைத்துப் பார்க்க தார பாஷாண சிங்கியாகும்.

குறிப்பு : குப்பிக்கு சீலை மண் வலுக்க செய்யவும்.

234-237 கோடாசுரி பாஷாணம்: வீரம், நாகம், பச்சை, ரசம், லிங்கம், மனோசிலை, அரிதாரம், கெந்தி, வெள்ளை இவை எல்லாவற்றையும் பொடித்து ஒரு செப்புக் குப்பியில் அடைத்து மூடி சீலை மண் ஏழு செய்து ஒரு தாழியின் அடியில் மணல் இட்டு அதன் நடுவில் குப்பி வைத்து அதன் மேல் மணல் கொட்டி ஆறு சாமம் எரித்து குளிர்ந்தபின் குப்பியையெடுத்துப் பார்க்க சிவந்த நிறம் உள்ள கோடாசுரி பாஷாணம் இருக்கும். இது வேதை செய்ய மிக அவசியம்.

238-241 பஞ்சபட்சி சரக்கு: பூரம், ரசம், பச்சைகுரு, வெள்ளை, மனோசிலை, வீரம், லிங்கம் எல்லாவற்றையும் பொடித்து குப்பியில் இட்டு சீலைமண் ஏழு செய்து ஒரு தாழியில் வைத்து மணல் இட்டு ஆறு சாமம் எரித்து குளிர வைத்து எடுத்துப் பார்க்க பஞ்சபட்சி என்ற சரக்காகும்.



242-245 குங்கும பாஷாணம்: கெந்தி, மனோசிலை, அரிதாரம், பச்சை, லிங்கம், வீரம், வெள்ளை, துத்தம்,

சாரம், நாகம், கருவங்கம் இவை எல்லாவற்றையும் பொடித்து காரநீரில் நன்றாகப் பிசிறி ஒரு குப்பியில் அடைத்து மூடி சீலை மண் ஐந்து செய்து ஒரு கெட்டியான அடி கனத்த சட்டியில் வைத்து மணல் கொட்டி தீமூட்டி ஐந்து சாமம் எரிக்கவும். தாழி குளிர்ந்தபின் குப்பியை உடைத்துப் பார்க்க மஞ்சள் நிறமாக இருக்கும். இதற்குப் பெயர் குங்கும பாஷாணமாகும்.

246-249 இரத்த பாஷாணம்: மனோசிலை, சிங்கி, சூதம், நாகம், லிங்கம், கெந்தி, பச்சை, வெள்ளை இந்தச் சரக்கை எல்லாம் பொடித்து குப்பியில் இட்டு குப்பி வாய் மூடி, சீலை மண் ஏழு செய்து ஒரு தாழியில் வைத்து மணல் இட்டு, தேவி வாலையைப் போற்றி சூளையில் வைக்க நன்றாக உருகித் திரண்டு கட்டும் மறுநாள் எடுத்துப் பார்க்க கருப்பு நிறத்தில் இரத்த பாஷாணம் இருக்கும்.

250-253 கோமுக பாஷாணம் வீரம், மனோசிலை, வெள்ளை, அரிதாரம், லிங்கம், சூதம், நாகம், கெந்தி, இவை எல்லாவற்றையும் பொடித்து செப்பு அகலில் இட்டு மூடி, அதை ஒரு தாழியில் வைத்து மணல் இட்டு எரிக்க வேண்டும். விண்ணாளாவிப் பரந்து நிற்கும் தேவனைப் போற்றிக் குளிர்ந்தபின் திறந்து பார்க்க சரக்கு எல்லாம் கட்டித் திரண்டு கோமுக பாஷாணமாக நிற்கும்.

துருசுப் பாஷாணம்: லிங்கம், நாகம், ரசம், பச்சை, வெள்ளை, அரிதாரம், வீரம், கெவுரி இவை எல்லாவற்றை யும் பொடித்து ஒரு செப்புக் கலசம் எடுத்து அதில் இந்தப் பொடியை இட்டு மூடி, ஒரு மண் பானையில் பாதிவரை மணல் கொட்டி அதன் மேல் கலசத்தை வைத்து மேலும் மணலைக் கொட்டி அடுப்பேற்றித் தீமூட்டி நான்கு சாமம் எரித்துப் பின்பு குளிர வைத்து எடுத்துப் பார்க்க பச்சை நிறமான துருசு பாஷாணம் இருக்கும்.

258-262 தீத்த பாஷாணம்: துருசு, ரசம் கெந்தகம், மனோசிலை, வெள்ளை, அரிதாரம், வீரம், லிங்கம்,

துத்தம் இவை எல்லாவற்றையும் பொடித்து ஒரு தங்கத் தால் ஆன குப்பியில் இப்பொடியை போட்டு மூடி, செம்மண்ணை மேலே பூசி அந்தக் குப்பியை ஒரு செப்புத் தாழியில் வைத்து மூடி நான்கு சாமம் எரிக்க வேண்டும். எரித்த தாழியின்மேல் நெல் இட்டால் பொரியும். இதுதான் பதம், இந்தப் பதம் பார்த்து ஆறவிட்டு இறக்கி கலசத்தைத் திறந்து பார்க்க மருந்தோடு அந்தக் குப்பியும் உருகி குருவாக நிற்கும். இதற்குத் துத்த பாஷாணம் என்று பெயர்.

26‥-267 ரசிதப் பாஷாணம்: வெள்ளை, ரசம், வீரம், தார பாஷாணம், மனோசிலை, பச்சை, நாகம், காரம் இவை எல்லாவற்றையும் பொடித்து ஒரு வெள்ளிக் குப்பியில் இட்டு அதை ஒரு இரும்புக் கலசத்தில் வைத்து செம்மணல் இட்டுப் பன்னிரண்டு சாமம் எரிக்க குப்பியும் மருந்தும் ஒன்றாக உருகிக் கட்டி நிற்கும், சக்தியைப் போற்றி எடுத்துக் கொள். இதுவே ரசிதப்பாஷாணமாகும்.

268-271 சூத பாஷாணம் சூதம், தாரம், வீரம், கெந்தி, மனோசிலை, பச்சை, லிங்கம், வெள்ளை, காரம் இவை எல்லாவற்றையும் பொடித்து வங்கத்தில் சிமிழ் ஒன்று செய்து அதில் இந்தச் சரக்கை இட்டு ஒரு பெருஞ் சட்டியில் பாதிவரை கொட்டி அதன் மேல் குப்பியை வைத்து மேலும் மணல் கொட்டி அடுப்பேற்றி தீபம்போல் பன்னிரண்டு சாமம் எரிக்க குப்பியும் மருந்தும் சேர்ந்து உருகிக் கட்டியாய் நிற்கும். இது படிகம் போல் இருக்கும். இதற்குப் பெயர் சூதபாஷாணமாகும்.

272 275 கெந்தி பாஷாணம் கெந்தி, பச்சை, மனோ சிலை, துத்தம். நாகம், வெள்ளை, வீரம், லிங்கம், ரசம் இவை எல்லாவற்றையும் கூட்டிப் பொடித்து ஒரு தாம்பிரக் குப்பியில் இட்டுச் சீலை மண் வலுவாய்ச் செய்து ஒரு மண் தாழியில் பாதிவரை மணல் இட்டு அடுப்பேற்றி ஆறு சாமம் எரிக்க பொடியெல்லாம் இறுகிக் கட்டியாகும். குளிர

வைத்து மறுநாள் எடுத்துப் பார்க்க கெந்தி பாஷாணமாக நிற்கும்.

276-280 நீலிப்பாஷாணம்: கெவுரி. லிங்கம், வீரம் கெந்தி, மனோசிலை, தாரம், சூதம், நாகம் எல்லாவற்றை யும் பொடித்துக் குப்பியில் போட்டு சீலை மண் நன்றாகச் செய்து தாழியில் மணல் இட்டு அதன் மேல் வைத்து மேலும் மணல் கொட்டி தீயை இரண்டரை சாமம் எரிக்க சரக்கு உருகி கட்டியாக நிற்கும். குளிர்ந்தபின் எடுத்து பூசை செய்து நவலோகத்தில் கொடுக்கச் சொர்ணமாகும். இந்தப் பரீட்சை செய்து பார்த்த பின்பு அதை மேலும் பூஜிப்பாய், நீலநிறமாக இருக்கும். இந்தச் சரக்கின் பெயர் நீலிப் பாஷாணமாகும்.

281-283 காக பாஷாணம்: கெந்தகம், மனோசிலை, வீரம் வெள்ளை, தாரம், சூதம், நாகம், பச்சை யாவற்றையும் பொடித்து இரும்பால் ஆன செம்பில் இட்டு ஒரு தாழியில் அரைவாசி மணல் இட்டு அதன் நடுவில் செம்பு வைத்து மேலும் மணல் கொட்டி நான்கு சாமம் எரிக்க பொடியெல்லாம் உருகி இறுகிக் கட்டி நிற்கும். ஆறவிட்டு எடுத்துப் பார்த்தால் கரிய நிறமுள்ள காக பாஷாணம் இருக்கும்.

284-287 சொர்ண பாஷாணம்: லிங்கம், மனோசிலை, தாரம், சூதம், நாகம், வீரம், காரம் இவையெல்லாம் பொடித்து தங்க அகல் செய்து மூடி மண் தாழியில் வைத்து மணல் இட்டு அடுப்பேற்றி தீமூட்டி எரிக்க தங்க அகலுடன் சரக்கும் ஒன்றாக உருகிக் கட்டி மணிபோல் நிற்கும். இதை நவலோகத்தில் கொடுக்க தங்கமாகும். இதற்கு சொர்ண பாஷாணம் என்று பெயர்.

288-291 லவண பாஷாணம்: காரம், சாரம், வீரம், பூரம், சூதம், மனோசீலை, லிங்கம், வெடிஉப்பு இவை எல்லாவற்றையும் கட்டிப் பொடித்துக் குப்பியில் இட்டு மண்சீலை செய்து ஒரு பானையில் பாதி அளவு மணல் இட்டு

அதன் மேல் குப்பியை வைத்து மேலும் மணல் இட்டு அடுப்பேற்றி ஒரே சீராக மூன்று சாமம் எரிக்க சரக்கு வெந்து உருகி இருகிக் கட்டி நிற்கும். இதற்குப் பெயர் லவண பாசாணம். இது வேதைக்கு ஆதியாகும்.

292-295 நாக பாஷாணம்: சூதம், லிங்கம், கார்வங்கம், பச்சை, தாரம், பொட்டிலுப்பு, காரம் இவை எல்லா வற்றையும் பொடித்து குகையில் வைத்து மேல் ஓடு மூடிச் சீலைமண் செய்து கெசபுடம் போட்டால் சரக்கு கட்டி மணிபோல் நிற்கும். பார்ப்பதற்கு ஈயம் போல் இருக்கும். இதை எந்த லோகத்தில் ஊட்டினாலும் பழுத்துப் பொன்னாகும். இதன் முறையை குருவின் மூலம் அறிந்து கொள்ள வேண்டும்.

296-301 நூல் பெருமை: பாஷாணம் முப்பத்திரண்டுக் கும் முறையாக வைப்பு சொன்னேன். இதைப் போல் வேறு எவரும் கூறியதில்லை என்று முடிவு கொண்டு இந்த எண்ணூறு பாடலை நன்கு சுற்றுத் தேர்ச்சியடையவும். இதைஅறிந்தவர்க்கு தடங்கல் இல்லை. ஆதார சக்கரங்கள் தானே தோன்றும். புருவ மையம் திறந்து தீபம் தோன்றி ஞானம் கிட்டும். உயிரைப் போல் வசனித்த எண்ணூறு மந்திரம் மிகவும் பெரிது. சித்தர்களும் இவ்வாறே போற்றினார்கள். இதை உலகில் உள்ள தீயவர் அறிந்தால் தவறான பாதையில் செல்வார். பலநூல் படித்தும் அதன் பலனை அறியமாட்டான். ஆசை வலையில் விழுவான். என் சொல்லைக் குறியாக மதிக்கமாட்டான். கோவில்களில் சென்று கொலை செய்வான். திருடுவான் அவன் ஆவி பதறி தன் நிலையை அறிய மாட்டான். நாபிப் பிரதேசத்தில் உள்ள பொருளை அறிய மாட்டான். தீபச்சுடரில் மனதை வைக்க மாட்டான் என்கிறார் முனிவர்.

பொருள்: 297 இடர் — துன்பம், தன்னூர் — ஆதார சக்ரம், கண்ணூர் — புருவமையம், கற்பூர தீபம் — ஞானச் சுடர்.

298 சளப்பட்டு — சஞ்சலப்பட்டு.

302-304 யோக முறை: தீபச்சுடரில் மனதை வைக்கும் முறையை சொல்கிறேன் கேள். மூலத்தில் மனதை வைத்து வாசியான மூச்சை பூரணமான நந்தியின் மேல் வைக்க வேண்டும். மூச்சை சுழுமுனை நாடியின் வழியாக செலுத்தி நாபிக்குக் கீழே உள்ள வெண்மையாகப் பிரகாசிக்கும்– சந்திரனைப் போல் ஒளிவீசும்–தீபத்தில் அறிவால் வாசியை அங்கே வைக்க வேண்டும். இவ்வாறு மனதை நித்தம் (தினமும்) தீபத்தில் வைத்துப் பழகிக்கொண்டால் நான் சொன்ன சரக்கு வைப்பு முறையை தப்புவராமல் அறிந்தால் நீரில் எவ்வாறு உப்பு வெகு சுலபமாகக் கரையுமோ அதுபோல நான் சொன்ன மந்திரம் வெகு சுலபமாக சித்தியாகும்.

305-310 பாஷாணத்தின் பெயர்: சுற்கட பாஷாணம், கோளக பாஷாணம், சூத பாஷாணம், அரிதாரம், கெந்தி, வீரம், வைகிராந்தம், தொட்டி, குதிரைப்பல், சங்கு பாடாணம், கெவுரி, துத்தம், சிரபந்தம், பலண்டுறுகம், காந்தம், லிங்கம், சரகண்டம், தாளகம், மனோசிலை, ஆப்பல் பாசாணம், சாலங்கம், கற்பரி, கச்சாலம், அஞ்சன பாசாணம், சீதாங்கம், சிலாமதம், கார்முகில் பாசாணம், அப்ரகம், வெள்ளை பாஷாணம், அமிர்த பாஷாணம், தாலம்பம் ஆக முப்பத்திரண்டு பாஷாணம் இயற்கையில் கிடைக்கும் பாஷாணமாகும். மொத்த அறுபத்தி நான்கு பாஷாணத்தில் முப்பத்திரண்டு வைப்பு பாஷாணத்தையும் கண்டு தேறி ஒருமித்த மனதாய் இந்த எண்ணூறைப் போற்றி பணிக!

311-315 நூல் பெருமை: இதை பேணிப் போற்றி நின்றால் ரசவாதம் தோன்றும். காணிக்கையை கையில் கொண்டு உலகம் முழுதும், கடல் மலை முழுதும் ஓடினும் இந்த எண்ணூறை போல் சிறந்த நூல் கிடைக்காது. இந்த [illegible] போக்கிவிடும். இந்த எண்ணூறு மந்திரமானது [illegible]

எண்ணூறு மந்திரம் நிராமயமானது. இந்த எண்ணூறு மந்திரம் இன்பச் சுடரொளி. இந்த எண்ணூறு மந்திரம் ஏகாந்த தீபமாகும். இந்த ஏகாந்த தீபம் இருளை அகற்றி விடும். இந்த தீபம் எட்டுதிசை சூழ்ந்த அண்டமாகும். இந்த தீபம் இருதயத்தில் உள்ள தீபமாகும். எண்ணூறு மந்திரங் கள் அடங்கிய இதற்குச் சரிசமமானது வேறு எதுவும் கிடையாது. இந்த நூல் தரும் உறுதி வேறு எந்த நூலும் தராது ஒளி தரும் விளக்குப் போல் நன்றாக அனைத்தை யும் காண்பிக்கும். மாமிசம் உண்பதில் ஆர்வம் கொண்டவர் காமத்தில் சென்று கெட்டவர் மற்றோர் பொருளைத் திருடுபவர் இவர்கள் யாராக இருந்தாலும் இகழ்ந்து ஒதுக்கி தள்ளிவிடு.

316-323 காரசார தொகை: வழலை, பூநீறு, நவச் சாரம், எவச்சாரம், வளையல்உப்பு, செந்திஉப்பு, வெண்காரம், கடல்நுரை, ஏகம்பச்சாரம். அமுரிஉப்பு, கற்பூரம், பச்சைக் கற்பூரம், சத்திசாரம், வெடிஉப்பு, மீனம்பர், பொன்அம்பர், இந்துப்பு, சவுட்டுப்பு, திலாஉப்பு சிந்துப்பு, கல்உப்பு, காசிசாரம், பிடாலவணம், அட்டுப்பு, சீனம் இவை இருபத்தைந்தும் காரசாரமாகும். இந்த இருபத்தைந்து வகையான காரசாரத்தை மெய்யான பஞ்சாட்சரத்தைக் கொண்டு எடுத்தால் செய்யும் தொழிலுக்கு எல்லாம் மூலமாகிவிடும். பூநீறு என்னும் சரக்கைத் தேடு. அதற்கு மூலமான பராபரத்தை தேடு. சுழிமுனையில் நின்று வாசியை தீபச்சுடரில் சேர்த்தால் தேகம் உறுதிபெற்று சித்தியாகும். சித்தித்தால் ரேசகம் சிவமயமாகும். பூரகம் சத்திமயமாகும். கும்பகம் பராபர மாகும் இவை எல்லாம் மூலச்சுடரில் சேரும் இதை அறிந்து முக்கண்ணின் கருணையை பார்.

324-349 உபரசத்தின் பெயர்: உபரசத்தின் பெயர் சொல்கிறேன் கேள். துருசு, பொன்னிமிளை, தாம்பிர நிமிளை, வெள்ளிநிமிளை, காகநிமிளை, உலோகம், காந்தம், வெள்ளைஅப்ரகம், சிகப்புஅப்ரகம், கிருஷ்ண அப்ரகம்,

சுவேதஅப்ரகம், காந்தம், ஊசிகாந்தம், உருளைக்காந்தம், அயகாந்தம், கல்காந்தம், சிலாசத்து, சகத்திரபேதி, கல்மதம், அஞ்சனக்கல், கருங்கல், படிகக்கல், சுக்கான்கல், ஈரல்கல், ரசாவர்த்தம், கருடப்பச்சை, செங்கல், எலும்பு, மயிர், நாகவண்டு, நண்டு, நத்தை, கிளிஞ்சி, ஆமை, முட்டை, யானைக்கொம்பு, பன்னி, மாட்டுக்கொம்பு, மான்கொம்பு, இந்திரகோபம், பல்லு, பூநாகம், சிவந்த முட்டை, தவளை, கரடி, கோழி, சங்கு, சிப்பி முத்துசிப்பி, பவழம், வைரம், பச்சை, கோமேதகம், புஷ்பராகம், வைடூரியம், கெம்பு, நீலம், முத்து, கெண்டகச்சிலை, சூடாலைக்கல், மஞ்சள்கல், மாக்கல், தேக்கல், தவளைக் கல், சிலாவங்கம், சிலாநாகம், அன்னபேதி, அஸ்திபேதி, சொர்ணபேதி, உவர்மண், மாங்கிஷபேதி, கருமணல், கற்கிட்டம், செம்மண், சுத்தமண், கருவண்டு, ஆட்டுக்கால், பன்றிமுள்ளு, எலிமுள்ளு, கடல்நுறை. மீன்எலும்பு, முள்சங்கு, நாகப்பச்சை, கோரோசனை, மரகதப்பச்சை, கர்கதண்டு, வெள்ளை, சுக்கான், காகச்சிலை, புத்தாம் பழம், கஸ்தூரி, மந்தாரசிலை கல்பாசி, காண்டாமிருகம், மாங்கிஷசிலை, சாளக்கிராமம், துளிர்கல்லு, படிகக்கல்லு, காவிக்கல் செம்புமண், நாகமண், வங்கமண், வெள்ளிமண், வெள்ளீயமண், உலோகமண், தங்கமண், மயிலிறகு, கருஞ் சுக்கான், கானக்கல், குருந்தக்கல், ரசிதசிலை, ஏமசிலை, நாகசிலை, வெள்ளீயசிலை, அயச்சிலை, திராச்சிலை வெண்கலச்சிலை. செம்புமலை, பித்தளைமலை, வெள்ளி மலை, தங்கமலை, ஆக உபசரங்கள் நூற்று இருபதாகும். இவை உன்னிடம் இருந்தால் வாதம், வசியம், அஞ்சனம், மறைப்பு மாத்து இவை எல்லாம் சித்தியாகும். மூலாதாரம் கண்ணிற்கு தோன்றும். புருவகமலம் தோன்றும். நான்கு திசையிலுள்ள செய்தி தொடுகுறிபோல் தோன்றும். வாசியை நிறுத்தி ஆணவத்தை நீக்கினால் இன்னும் சித்திகள் அதிகமாகும். மூலம் சித்தியாக ஒரு உபாயம் சொல்கிறேன் கேள். மூலாதாரத்தில் "சிம்" என்று மனதை வைத்து நின்றால் அண்டமும் பிண்டமும் அடங்கும்

இந்த தியானத்தால் ஆதிப்பொருளின் கருணைகிட்டும். இந்த முறையை வெளியில் சொன்னால் தலையில் இடிவிழும். ஆதிப் பொருளின் கருணை கிடைக்க வழி சொல்கிறேன் கேள். அங் உங் அம் என்று உருவேற்றில் உகாரம் சித்தியாகும். இந்த உகாரத்தை சிவமான சிம்முடன் சேர்த்து சுழுமுனை வழியாகச் சென்று தீபத்தில் அடக்கினால் பன்னிரெண்டு கலைகளும் கருத்தில் ஒடுங்கி விடும். உச்சியில் தீபம் தானே தோன்றும். உச்சி என்பது வேறு ஒன்றும் இல்லை. நெத்திப் புருவமையமாகும். அந்த் துருவத்தைக் கண்டபின் இந்த தேகம் சித்தியாகும். வாசி ஆனந்த போதமாய் நிற்கும். வாமம் என்ற அமுதம் பெருகி பூரணம் வளரும், பூரணமான அந்த மலரைக் கண்டபின் நல்ல சிந்தனை தோன்றும் கெட்ட சிந்தனை மரணமாகும். இதனால் ரவி தோன்றும். ரவி தோன்றினால் மறுபிறவி போய்விடும். வாசியான நூல் ஏணியை அறிந்து பளுவை அதாவது (காற்றை) ஏற்றினால் பூரணம் தோன்றும். தோணிக்கு (இந்த உடலுக்கு) உள் இருக்கும் பொருள் தோன்றும் பூரணம் சித்தியான பிறகு தினமும், சக்தி, சிவம், பூரணம் ஆகிய மூன்றையும் போற்றினால் மனம் அடங்கி வாசி ஒடுங்கி முக்தி கிட்டும்.

350-353 துருசுக்கு சத்துரு மித்துரு: சவுட்டுப்பு, அஞ்சனக்கல், தொட்டி பாஷாணம், இணங்கன், சூடன், சீனம், அப்ரகம், வெள்ளை பாஷாணம், கல்உப்பு, இந்துப்பு காந்தம், நாகம், வங்கம் சவுக்காரம் இவை எல்லாம் துருசுக்கு சத்துருவாகும்.

அரிதாரம், சாரம், வெண்காரம், வீரம், கெந்தி, சூதம், துத்தம், தாளகம், தந்தம், நாகம், கடல்நுரை, கெவுரி லிங்கம் இவை எல்லாம் துருசுக்கு மித்துரு. இதை நீ அறிவால் அறிந்து சத்துருவால் கொன்று மித்துருவால் எழுப்பு என்கிறார் முனிவர்.

குறிப்பு : சத்துரு சரக்கைக் கொல்லும்.
மித்துரு சரக்கை எழுப்பும்,

354-358 சாரத்தின் சத்துரு : கல்லுப்பு, இந்துப்பு: படிகாரம், காந்தம், வங்கம், அண்டத்தோல், சுக்கான்கல், கல்சுண்ணம், கடல்நுரை, கிளிஞ்சல், அப்ரகம், வளையலுப்பு, சவுட்டுப்பு, காரீயம் இவை சாரத்தின் சத்துருவாகும்.

அரிதாரம், மனோசிலை, கெந்தி, வீரம், வெடிஉப்பு, வெண்காரம், லிங்கம், கவுரி, நாகம், நிமிளை, காரீயம், கல்நார் இவை எல்லாம் சாரத்திற்கு மித்துருவாகும்.

359-362 வெடிஉப்பின் சத்துரு; காரீயம், சூடன், சவுடு, வெள்ளி, சூர்காந்தம் தொட்டிப் பாஷாணம், செம்பு, மனோசிலை, கெந்தி, சிங்கி, ராசவர்த்தம், சுரைகெந்தி, நீமுருவல் இவை எல்லாம் வெடிஉப்புக்கு சத்துருவாகும்.

படிகாரம், கல்லுப்பு, காரம், லிங்கம், வீரம், துத்தம், கடல்நுரை, நாகம், நிமிளை, கம்பளி இவை எல்லாம் வெடிஉப்பின் மித்துருவாகும்.

363-365 கல்உப்பு சத்துரு: வீரம், சவுட்டுப்பு, சிங்கி, மனோசிலை, பழம்புளி, பவழப்புற்று, கற்பூரம் இவை எல்லாம் கல்லுப்புக்கு சத்துருவாகும்.

இரும்பு, செம்பு, பூரம், வெண்காரம், கவுரி, நாகம், காந்தம், தாரம், நிமிளை, வெள்ளைப் பாஷாணம், அப்ரகம், லிங்கம், வங்கம் இவை எல்லாம் கல்லுப்புக்கு மித்துருவாகும்.

366-367 வெண்காரத்தின் சத்துரு: சிலாசத்து, அண்டவோடு, சூடன், பூரம்.

வெண்காரத்தின் மித்துரு: மேற்கூறப்பட்ட சரக்குகள் நீங்கலாக உபரசங்கள், பாஷாண வர்க்கங்கள், லோகங்கள் இவையாவும் வெண்காரத்தின் மித்துருவாகும்.

368 சீனத்தின் சத்துரு மித்துரு: வெண்காரத்திற்கு சொன்னதை முறையாக அறிந்தால் சீனத்திற்கும் அதே சத்துரு மித்துருவாகும்.

369-372 **தங்கத்தின் சத்துரு:** நாகம், லிங்கம், பச்சை, நிமிளை கெவுரி, வெள்ளை, சவுடு, தாளகம், சிங்கி, மனோசிலை, அப்பிரகம், கிளிஞ்சில், குதிரைபல்பாஷாணம் சூதம், அண்டம், கெந்தி, கோமுகம், காந்தம், வீரம் பொன்அம்பர் இவையாவும் தங்கத்தின் சத்துருவாகும்.

**தங்கத்தின் மித்துரு** மேல் சொன்ன பொருள்கள் நீங்கலாக மற்ற சரக்கெல்லாம் மித்துருவாகும்.

373-376 **சூதத்திற்கு சத்துரு:** வெள்ளை, கெவுரி, சிங்கி, சத்திசாரம், குதிரைப்பல் பாஷாணம், இரும்பு, காந்தம், பொன்அம்பர், சூடன், சவுடு, நிமிளை, பூநீறு வெடிஉப்பு இவையாவும் சூதத்திற்கு சத்துருவாகும்.

**சூதத்திற்கு மித்துரு:** அப்பிரகம், நாகமும், காரீயம், கெந்தகம், மனோசிலை, வங்கம் தொட்டி, சாரம், வீரம், வெள்ளி, செம்பு, பச்சை, காரம், துத்தம், அஞ்சனக்கல், தீமுருவல் இவை எல்லாம் சூதத்திற்கும் மித்துருவாகும்.

377-380 **இரும்புக்கு சத்துரு** வெண்காரம், வெண்கலம், அப்பிரகம், அண்டவோடு, நிமிளை, வங்கம், கிளிஞ்சி, கெந்தி, சாரம், சிங்கி, கெவுரி, வெள்ளை பாஷாணம் பூநீறு சலாசத்து இவையாவும் சத்துருவாகும்.

**இரும்புக்கு மித்துரு** வெள்ளி, நாகம், காந்தம், பூரம், செம்பு, ராசவர்த்தம், பூனாகம், தங்கம், கெந்தி, செம்பு, மயூரசெம்பு, சூடன்.

381 **காந்தத்திற்கு சத்துரு மித்துரு:** மேலே இரும்புக்கு கூறப்பட்டவையே.

382-386 **நாகத்திற்கு சத்துரு** சிளிஞ்சல், அண்டவோடு வெடிஉப்பு, கல்லுப்பு, வங்கம், படிகாரம், தங்கம், வெள்ளி, வெங்கலம், நண்டோடு, வீரம், மிருதார்சிங்கி, மிளகு, வெள்ளைப் பாஷாணம், அன்னபேதி, வளையல் உப்பு.

நாகத்திற்கு மித்துரு: சத்துருவை நன்றாக சோதித்து பார்த்து புருமையத்தில் ஒருமனதாக நின்று கொண்டு நான் போதிக்கும் மித்துருவை கேள். அப்பிரகம், சூதம். இரும்பு, பொன்நிமிளை, சலாசத்து, செம்பு, கெவுரி, கெந்தி, பூநாகம், மயூரசெம்பு, சாரம் இவை எல்லாம் நாகத்தின் மித்துருவாகும்.

387-389 காரீயத்திற்குசத்துரு: அயகாந்தம், கிளிஞ்சில், அண்டஓடு, ராசவர்த்தம், கெவுரி, கெந்தி, கற்சுன்னம் இவையாவும் சத்துருவாகும்.

காரீயத்தின் மித்துரு மயூர செம்பு, பூநாகம், நாகச் செம்பு, செம்பு, வெள்ளி, வங்கம், வங்கச் செம்பு இவை யாவும் மித்துருவாகும். இதை பெரியோர்கள் அறிவார்கள். அவர்களை அடுத்து நன்கு கற்றுத் தெளிய வேண்டும்.

390-393 வெள்ளீயத்துன் சத்துரு: காரீயம், துத்தம் சூதம் இவை மூன்றும் சத்துரு. இந்த மூன்று சரக்கு நீங்கலாக மற்ற சரக்குள் மித்துருவாகும். இதை அறிந்து சத்துருவால் கொன்று மித்துருவால் எழுப்ப வேண்டும். இப்படி செய்தால் சித்தனாவாய். சித்தம் பெருகும். சத்ரு மித்ரு அறியாமல் போனால் பிறவிச் சுழலில் அகப்பட்டுக் கொள்வாய்.

394-396 பிறவியில் உழன்று: உறுதி இல்லாமல் அறிவு மங்கி, காயம் அழிந்து வாசி பிரிந்துவிடும். ஆகவே சத்துரு வையும் மித்துருவையும் அறிந்து மற்றதை அகற்றினால் இதுவே மனதுக்கு சாரணையாகும். மனோன்மணியைப் போற்றினால் வாசி பலப்பட்டு வாசி புத்தியில் அடங்க வேண்டும். வாசி புத்தியிற் சேர்ந்தால் நெற்றிக்கண் நன்றாகத் திறக்கும். புருவமையத்தைப் பார்த்தால் தீபம் தெரியும்.

397-408 காயசித்திக்குப் பத்தியமும் யோகமும்: புளி, எண்ணை, வெற்றிலை பாக்கு சுண்ணாம்பு, மீன், இறைச்சி

இவைகளை அகற்றி, அமுதும் (அன்னம்) நெய்யும் சேர்த்து உண்ணு இதனால் கற்பம் உறுதியாகும் பூரணம் ஆனந்த போதமாய்க் காணும். ஆனந்த போதமாய் நின்ற அந்தப் பூரணத்தை கண்டு மனதால் போற்றி சிவபோதமான அடியும், முடியான தீபமும் சோதிமயமான நாதத்தில் ஊன்றி நிற்கும். அந்த நாதத்தையும் அதனுடன் சேர்ந்து நிற்கும் விந்துவையும் அறிந்து அந்த இடத்தில் வாசியை வைத்து பேதம் வராமல் வாசியைப் பிணைத்து நிறுத்தினால் பஞ்ச பூதங்களும் சுழிமுனையில் ஒடுங்கும். சுழிமுனையில் வாசியை வைத்து மனம் அலைபாயாமல் நிறுத்தி வாசியை நிறுத்தினால் அழிந்து போகும் தன்மையை உடைய தேகம் அழியாமல் நிற்கும். சுழிமுனை, பிங்கலை, இடகலை ஆகிய மூன்றும் பின்னி நிற்கும் குகையை அறிந்து, வலதுபாகமான சிவத்தையும் இடதுபாகமான சக்தியையும் அறிந்துகொண்டு அண்டிவரும் மாயை என்னும் பெண்ணை எரித்து மனதை வாசியுடன் சேர்த்து சிவத்தில் அடக்கினால் நீயும், சிவனும் ஒன்று என்று புலப்படும். 'இந்த நிலையில் தினமும் நின்றால் சிவயோகம் சித்திக்கும்.' வாட்டம் தோணா மனம் திடப்படும். ஆனந்த மயமான அருட்சோதி கோடி சூர்ய பிரகாசமாய்த் தோன்றி கண்கூசும். அப்பொழுது சிவபஞ்சாட்சர மந்திரத்தை செபித்தால் சிவசக்தியான அந்த சோதி. புத்தியில் அடங்கி பூரணம் என்னும் பொருளாகும். இதுவே பூரண தீட்சையாகும். இந்தப் பூரண தீட்சையின் மார்க்கத்தை கூறும் எண்ணூறு பாடலை யாரும் அறியமாட்டார். அறிந்தவர் பூரண கங்கையான அமுர்த ரசத்தைப் பற்றி அனைவருக்கும் போதிப்பார்.

**409-411 செயநீர் :** அறுபத்துநாலு சரக்கும் சாவதற்கு கட்டுதற்கு செயநீர் கூறுகிறேன் கேள். பூநீறு, வீரம், சாரம் இவை மூன்றையும் பொடித்து பீங்கானில் போட்டுப் பனியில் வைக்க அதில் செயநீர் உண்டாகும். அதை ஒரு குப்பியில் எடுத்து வைத்துக் கொள். இதை

நீரில் சரக்கை துவைத்து வாட்ட கட்டும். அவ்வாறு கட்டினால் அந்த சரக்கினால் அதிக பலன் உண்டாகும்.

412-416 மெழுகு நீர்: பூநீறு, சாரம், பச்சை, பூரம் இவை நான்கையும் ஒன்றாக சேர்த்து செயநீர் விட்டு ஆட்டிப் பனியில் எடுத்து வைக்க நல்ல (சிவமாகும்) செய நீராகும். இந்த நீரில் வீரம் போட்டு தாக்கினால் சிவந்த செயநீர் கிடைக்கும். இந்த செயநீரில் பட்ட சரக்கெல்லாம் மெழுகாகும். அந்த மெழுகில் சித்துகள் விளையாடலாம். நவலோகங்களில் ஊட்டினால் பழுத்து தங்கமாகும். சரக்குகள் தங்கமாவதற்கு வழி சொல்கிறேன் கேள். அழுக்கு மனதை அகற்றிவிட்டு இழுக்கான பிறவித் துயரை நீக்க மூலாதாரத்தில் மனதை வைத்தால் எல்லாம் சிவமய மாகிவிடும். எல்லாம் சிவமயமாகத் தோன்றினால் கல் முதல் மண் வரை எல்லாம் தங்கமாகும். சொல்லுகின்ற வார்த்தை எல்லாம் மந்திரம்போல் ஆகும். பிறகு கற்ப விபரங்களை பார்.

417-419 வெடி உப்புச் சுன்னம்: வெடி உப்பு, சீனம், சிப்பி ஓடு இவை மூன்றையும் செயநீர் விட்டு ஆறு சாமம் அரைத்துப் பிறகு வில்லை செய்து ரவியில் உலர்த்தி ஓட்டில் வைத்து மூடி மண்சீலை செய்து கெசபுடம் போட்டு எடுக்க சுன்னமாகும். இந்தச் சுன்னம் முப்பூ சுன்னத்தைக் காட்டிலும் மேலானது. இது எல்லா சரக்கையும் அதட்டி நொறுக்கிவிடும்.

420-421 துருசு சுன்னம்: மேலே சொன்ன சுன்னத் தையும், வீரத்தையும் சரிஎடை எடுத்து நல்லநீர் கூட்டி அரைத்து இந்த இடைக்கு பச்சை கூட்டி மண்சீலை செய்து கணக்கு அறிந்து புடம் போட்டால் வெளுத்து சுன்னமாகும் இந்த துரிசு குரு சுன்னத்தால் சரக்கு எல்லாம் நீறும்.

422 424 சாரச் சுன்னம் பூநீறும், வெடிஉப்பும், பச்சையும், வீரமும் சரி எடையாக எடுத்துக் கொண்டு அந்த எடைக்கு சாரத்தைக் கூட்டு. அதை கல்வத்தில் இட்டு

அரைத்து அடைபோல் தட்டி சூரிய வெப்பத்தில் காய வைக்கவும். பிறகு அதை எடுத்து ஓட்டில் வைத்து மூடி சீலைமண் செய்து புடம்போட சாரம் நீறும் (சுன்னமாகும்) இந்த சுன்னம் வாதத் தொழிலுக்கு மிகவும் அருமையானது.

425-427 கல்உப்பூ சுன்னம் சூடன் வெடிஉப்பு, சாரம், பச்சை, வீரம், கல்உப்பு இவை எல்லாவற்றையும் எடுத்து நீரில் அறைத்து வில்லை செய்து ரவியில் வைத்து உலர்ந்த பிறகு ஓட்டில் வைத்துப் பதியமூடி மண்சீலை செய்து புடம் போட சுன்னமாகும். இந்தக் கல்உப்பு சுன்னத்தை எவரும் அறியமாட்டார். வாய்பேசித் திரியும் மனிதரை ஒதுக்சித் தள்ளிவிட்டு அவர்களுடன் சேராமல் ஆகம நூலான இந்த எண்ணூறைப் பார்த்துப் படித்துப் பிணைத்துக் கொள்.

428-430 காரச் சுன்னம் : மற்றொரு சுன்னத்தைப் பற்றிக் கூறுகிறேன் கேளுங்கள். வீரம், வெடிஉப்பு, பச்சை, பூநீறு, இவை நான்கையும் சேர்த்து வென்னீரில் அரைத்து அதனுடன் காரம் சேர்த்துப் புடம் போட காரம் சுன்னமாகும். இந்த காரச் சுன்னத்தை யாரும் அறிந்திருக்க மாட்டார். காரச்சுன்னத்தால் லோகம் எல்லாம் க்ஷணத்தில் உருகிவிடும். இதுதான் காரச் சுன்னத்தின் மார்க்கமாகும். (நாதம் என்றால் பூநீறு.)

431-433 சீனச் சுன்னம் : சீனச்சுன்னம் கூறுகிறேன் கேள். பூநீறு, சூடன், வீரம், கம்பி உப்பு இவை மூன்று சரக்கையும் கணக்காகக் கூட்டி அதனுடன் சீனம் சரி எடை கூட்டி அரைத்து ரவியில் உலர்த்தி உலர்ந்த பிறகு ஓட்டில் வைத்துப் பதிய மேல்மூடி அதன் மேல் சீலைமண் செய்து புடம் போட சுன்னமாகும். சகல விதமான தொழிலுக்கும் இந்தச் சுன்னம் பயன்படும்.

434-436 நாகச் சுன்னம் : நாகம், சூதம், பச்சை, பூரம், கம்பி உப்பு, வீரம் இவை ஆறு சரக்கையும் நீரில் அரைத்து வட்டுப் பண்ணி அதில் உள்ள நீர் காயும் வரை உலர்த்திப் பின்பு ஓட்டில் வைத்து மேல் ஓடு மூடி சீலைமண்

செய்து எருவடுக்கிப் புடம் போட நாகம் நீறி சுன்ன மாகும். இதுவே நாக சுன்னத்தின் முறையாகும்.

437-439 வங்கச் சுன்னம் : வங்கம், சூதம், பச்சை, வீரம், சூடன், கம்பி உப்பு, இவை அனைத்தும் ஒன்றாகக் கூட்டி அரைத்து ரவியில் வைக்க உலரும். அதை எடுத்து ஓட்டில் வைத்து மூடிப் புடம்போடச் சுன்னமாகும். புடம் போடுவதற்கு முன் சீலைமண் செய்ய வேண்டும். நூறு எருவிற் புடம்போட வேண்டும். வேதைக்கு இந்தச் சுன்னம் மிகவும் உபயோகப்படும்.

நவலோகங்களில் இந்தச் சுன்னத்தை ஊட்டினால் நவலோகம் பழுத்துச் சுன்னமாகும்.

440-443 கார்வங்கச் சுன்னம் : வேதை செய்ய காரீய சுன்னம் சொல்கிறேன்கேள், காரீயம், சூதம், பச்சை, வீரம், சூடன், கம்பி உப்பு கூட்டி அரைத்து வில்லைகள் செய்து ஓட்டில் வைத்து மேல் ஓடு மூடிச் சீலைமண் செய்து மாட்டுச் சாணத்தில் (வறட்டியில்) புடம் போட வெளுத்துச் சுன்ன மாகும்- இந்தச் சுன்னத்தின் பெருமை சொல்ல முடியாது. இதில் சூதம் மடியும். இது வேதைக்கு திறவு கோல் ஆகும். குருவாகும்.

444-447 வெள்ளிச் சுன்னம் : சூதம், கார்வங்கம், வெள்ளி, வெடி உப்பு, சூடன், பச்சை, வீரம், இந்தச் சரக்கை எல்லாம் கூட்டி அரைத்து உருட்டி வட்டுப் பண்ணி சூரிய வெப்பத்தில் காய வைத்துப் பிறகு அதையெடுத்து ஓட்டில் இட்டு மேல் ஓடு மூடிச்சீலை மண் செய்து சிவனைப் போற்றி புடம் போட வெளுத்து நீறும்.

இதற்குச் சமமாக வேறு எந்தச் சுன்னமும் கிடையாது.

448-453 அயச் சுன்னம் : வங்கம், நாகம், சூதம் இவை மூன்றையும் சேர்த்து நன்றாகப் பொடித்து அதற்குச் சரியிடை அயம் சேர்த்து அதனுடன் மூப்பூ, வீரம், பச்சை, சூடன் மூன்றையும் கணக்காகக் கூட்டி எலுமிச்சம் பழத்தின்

சாறும் செயநீரும் கூட்டி நன்றாக அரைத்து வட்டுப்பண்ணி ரவியில் காயவைத்து அகலில் வைத்து மூடி மண்சீலை செய்து புடம் போட நீறி வெளுத்துச் சுன்னமாகும். இந்த சுன்னம் வேதைக்கு தாயாகும்.

454-458 **காந்தச் சுன்னம் :** ஒரு பலமான காந்தம் எடுத்துக் கொண்டு அதனுடன் இரும்பையும் சேர்த்துப் பொடி செய்துகொள். அந்தப் பொடியுடன் வெடிஉப்பு, வீரம், பச்சை, சூடன் கூட்டி தேசிநீர் (குதிரைநீர்) விட்டு ஆட்டவும். வழித்து எடுத்துக் கொண்டு அதைப் புடம் இட்டுப் பற்பமான பின்பு அதனுடன் வெடிஉப்பு சேர்த்து அரைத்து அடையாகத் தட்டி எருவடுக்கிப் புடம் போட காந்தம் வெளுத்துச் சுன்னமாகும். அடிமுடியாகிய இந்தச் சுன்னத்தைக் காண்பவன் சித்தனாவான். அவன் தேகம் சித்தியாகும். வேதையில் பொன் வெள்ளி தயாரிக்க இந்தச் சுன்னம் மிகவும் உதவும். முறையாக செய்து சித்தர்கள் பலன் அடைவர். (கெசபுடம் போடவும்)

459-465 **தங்கச் சுன்னம் :** சூதம், வங்கம் இரண்டையும் உருக்கி அதனுடன் அந்த எடைக்கு இரண்டு மடங்கு தங்கம் கூட்டி அதனுடன் வீரம், வெடிஉப்பு, சூடன், பச்சை இவை எல்லாவற்றையும் ஒன்றாகக் கூட்டி கல்வத்தில் இட்டு நீரையும், பழச்சாற்றையும் விட்டு நன்றாக அரைத்து வில்லை செய்து உலர்த்திக் கொள். ஓர் அகலில் வைத்துச் சீலைமண் செய்து புடம் போட்டு எடுத்து மீண்டும் முன்போல் அரைத்துப் புடம் இட தங்கம் நன்றாக வெளுத்து நீறும். இந்தச் சுன்னத்தால் தான் முனிவர்கள் ஆதார சக்கரத்தை தெரிந்து கொண்டு ஏறினார்கள். சுன்னத்தில் குருவான இந்த சுன்னத்தை லோகத்தில் ஊட்டினால் தங்கமாகும். தங்கத்தை சுன்னமாக்குவது மிகவும் கடினம். மனதை அறிந்து காமத்தை விலக்கி வாசியை ... தேகத்தை நோக்கச் சித்தியாகும்.

466-469 நாதவிந்து பெருமை : தீபச்சுடரில் நாதம் நிற்கும். சூதமாகிய சுக்லம் சுத்தமானால் விந்துவாகும். நீதியில் நின்றவருக்கும், கோபத்தை வென்றவருக்கும் விந்து சுத்தமாகும். (துலங்கும்; இந்த நாத விந்து இரண்டும் ஒன்றாகக் கூடினால் பூரணம் காணும், பூரணத்தைக் கண்டால் வாதமும் வசியமும் சித்தியாகும். சித்தத்தை ஒன்றாக்கி (ஒருநிலைப்படுத்தி) சிவபதத்தைக் கண்டால் சுடரானது சுழுமுனை வழியாக ஏறி நாதமும் விந்தும் ஒன்றாகும். ஒன்றாகி நின்ற இந்த பொருளே இரண்டாக வும் மூன்றாகவும் ஆனது. இதை எவரும் புத்தியால் அறிந்தவர் இல்லை. சூரிய சந்திர அக்னியான இந்தப் பொருளை கண்டவர் எவரும் இல்லை.

470-472 கற்பசாரம் : கற்பத்தின் விபரம் யாரும் அறிந்திருக்க மாட்டார். கற்பத்திற்கு ஆதியான (குண்டலி சத்தி) வெண்சாரையைக் கண்டால் சிவயோகம் சித்தியாகும். சித்தம் பெருகுவதே (திடமாவதே) சிவஞான போதமாகும். சித்தம் பெருகுவதாலேயே, சிவஞான தீபம் தோன்றும். அந்த சிவஞான தீபமான சுடர் மூலாதாரத்தில் சுத்தமாய் ஒளிவீசிக் கொண்டு பிரகாசிக்கும். அந்த மூலாதாரமே சிவாநந்த மூலமாகும். அந்த தீபமே எங்கும் நிறைந்த சிவமானது. அந்த தீபத்தை "சிவாயநம" என்று மனதை ஒருநிலைப்படுத்தி செபம் செய்.

473-479 செபகாலம் : செபம் செய்யக் காலம் சொல்கிறேன் கேள். காலையில் எழுந்து பஞ்சாட்சரம் செபிக்க வேண்டும். காலையில் பஞ்சாட்சரம் செபித்தால் இரவின் அனல் கிளம்பி எழும்பும். சித்தம் தளராமல் திண்மையாகும். அந்த நிலையில் மூலாதாரத்தைக் கண்டு அதில் உள்ள விந்தை வீணாக்காமல் மேல்நோக்கிச் செலுத்தினால் காயம் அழியாது உறுதியாகும். இவ்வாறு செபம் செய்த பிறகு கற்பம் உண்ண மனம் உறுதி பெற்றுத் தேகம் கற்பம் என்றால் என்னவென்று தெரியாமல் முழிக்காதே. மூலாதாரத்தில் உள்ள வாசியே ஆகும்,

மனோன்மணியாகிய சத்தியை மாலையில் மனதை ஒருநிலை நிறுத்தி செபிக்க வேண்டும். இந்தச் சத்தியால் சிவம் உறுதியாகும். ஆகையால் சக்தியை செபம் செய். மனதை ஒருநிலைப்படுத்தி சக்தியையும், சிவத்தையும் செபித்தால் தேகமானது குன்றாது. வாசி நாடியானது வளரும். தீபத்தின் அருள் கிட்டும். போதம் நிறைந்த பூரணமான அந்த தீபச்சுடரில் நாதம் விந்து இரண்டும் சேர்ந்து நிற்கும். மூலாதாரம் முதல் சுழுமுனைவரை நாத விந்தை ஏற்றக் கற்றுக்கொண்டால் வாதம் வசியம் இரண்டும் சித்தியாகும். இதனால் உண்மை விளங்கும். உறுதி பிறக்கும்.

480-484 வல்லாரை : வல்லாரையைப் பற்றியும் அதன் பயனையும் கூறுகிறேன் கேள். நல்லவர்களான சித்தர்கள் இதை உண்டு மிக எளிதாக தேகசித்தி பெற்று யுகாந்தவரை சீவித்தார்கள். யுகம் கடந்தார்கள். அதுமட்டுமின்றி மோகத்தையும் கன்ம வினைகளையும் கடந்தார்கள். குண்டலியை எழுப்பி சுழுமுனையேற்றினார்கள். (புருவ மையம்). வல்லாரை என்ற மூலிகையை எடுத்துவந்து அதை காடி நீரில் ஊறவைத்துப் பிழிந்து உலர்த்திப் பிறகு இடித்து அதனுடன் சர்க்கரை சேர்த்து மனதை மூலத்தில் செலுத்தி, வெரு கடிதூள் மண்டலம் உட்கொள்ள சீதம் கழன்று இறங்கும். பித்தம்நசியும். தேகம் வரண்டு இறுகும். மேலும் தேகம் உறுதியாகி ஒளிவீசும். மூலாதாரத்தில் உறங்கிக் கொண்டிருக்கும் குண்டலி விழித்துக் கொள்ளும். மூலத்தில் தீபம் பிரகாசிக்கும். இது வல்லாரை கற்பமாகும்.

485-496 கடுக்காய் கற்பம் : அண்டக் கடுக்காயை யாரும் அறியவில்லை. அண்டக் கடுக்காயின் அருமை அறிந்தவர்கள் அந்தக் கடுக்காயின் உதவியால் தேகத்தில் உள்ள கசடுகளை நீக்கிக் கொள்வார்கள். அதுமட்டுமின்றி தேகசித்தி பெற்று (அரூபம்) முக்தி அடைவார்கள். குருவாக நின்ற ஆதிகடுக்காயான பெரிய கடுக்காயை எடுத்து அதை அமுரியில் போட்டு ஊற வைத்து உலர்த்தி இடித்து விதை

நீக்கித் தோலை காடி நீரில் ஊறப்போட்டு மறுநாள் எடுத்து உலர்த்தி மீண்டும் காடிநீரில் ஊறப்போட்டு உலர்த்த வேண்டும். இவ்வாறு பத்துமுறை செய்த பிறகு தோலை இடித்துத் தூளாக்கி வஸ்திர காயம் செய்து வைத்துக் கொள்ள வேண்டும். பிறகு (கொட்டையாகிய) விதை எடுத்து உலர்த்தி இடித்துப் பானையில் போட்டு மூடி, நன்றாகச் சீலைமண் செய்து உலர்ந்த பிறகு புடம்போட தயிலம் கிடைக்கும். அந்த தயிலத்தை பதனமாக வைத்துக் கொண்டு குருவை வணங்கி கடுக்காய் சூரணத்தில் இந்த தயிலத்தை விட்டு உருட்டி விழுங்கிவிட வேண்டும். (சூரணத்தின் அளவு மூன்று விரல்களால் பிடித்து எடுக்கக் கூடிய அளவாகும்.) இவ்வாறு மண்டலம் கொள்ள மலத்துடன் புழுப்பூச்சிகள் எல்லாம் விழுந்துவிடும். வாசி நிலைக்கும். சீராக சித்தம் திடப்படும். மூலத்தில் வாசி உயிர்பெற்றுக் கொள்ளும். நாசி வழியாகச் செல்லும் மூச்சு மூலத்தில் சேரும். மனதை மூலத்தில்வைத்து வணங்கினால் தேகம் அழியாமல் நிற்கும். இதுவே கடுக்காய் கற்பமாகும்.

497-503 காயாதி சுன்னம் : காயாதி சுற்பம் ஒன்று சொல்கிறேன் கேள். மாயாதிமூலம், உள்மூலம், சக்தி யொளி மூலம் என்ற மூன்று மூலத்தையும் ரவி, மதி, சுடர் கொண்டு பார். இவை எல்லாவற்றையும் கல்வத்தில் சேர்த்து நாதநீர் விட்டு அரைத்து, வழித்து எடுத்து உருட்டி வட்டுபோல் பண்ணி அதை ரவியில் உலர்த்திப் பிறகு மகாமாயை என்ற தேவியை வணங்கி குக்குடம் என்ற புடம் போட்டு எடுத்துப் பார்க்க மலர்ந்து பற்பமாக இருக்கும். அதை ஒரு செப்புப் பாத்திரத்தில் பதனமாய் வைத்துக் கொண்டு தேனில் பணவிடை அளவு உட்கொண் டால் இந்தப் பூரணபற்பத்தின் மகிமையால் வாதமும் பித்தமும் அகன்றுவிடும். எமன் நடுங்கி விலகிச் சென்று விடுவான். வில்லான இந்த தேகத்தில் உண்மையான ரச வர்க்க சுன்னத்தால் ஏற்ற தேகம் உறுதியாகும். இதனால் மனம் உறுதியாகும். உறுதியான மனதால் ஆதிஅந்தம்

என்ற பொருளைப் புரிந்து கொள்ளலாம். ஆதிஅந்தத்தை தெரிந்து கொண்டால் வாசி சுடர் ஒளியில் அடங்கும். ஆகவே தேகத்தை முதலில் உறுதியாக்க வேண்டும்.

குறிப்பு : பாட்டில் வருகின்ற மூன்று மூலம் என்பது மறைமுகமாக சொல்லப்பட்ட ஒரு ரகசியமான ரசாயன மருந்தாகும். அதேபோல்தான் ரவி, மதி, சுடரும் ஆகும்.

இதை யோக முறையில் பார்த்தால் : மூலாதாரம், அநாஹதம், சகஸ்ரராரம் ஆகியவை மூன்று மூலம் ஆகும். ரவி என்றால் சூரியநாடி, மதி என்றால் சந்திரநாடி, சுடர் என்றால் அக்னியான சுழுமுனை நாடியாகும்.

504 505 சாரச் சுன்ன கற்பம் : சாரச் சுன்னத்தை அறிந்து அதைப் பக்குவமாய் ஒரு மண்டலம் உண்ண வேண்டும். இந்த சுன்னத்தை உண்டால் தேகம் உறுதியாகி வலுக்கும். சுன்னத்தை உண்பதற்கு பயந்து கொண்டு நிறுத்தி விடாதே ஒன்றும் ஆகாது. பயம் இல்லாமல் கொள். என்னுடைய குருநாதன் எனக்கு சொன்னது இது.

506-507 வெடிஉப்பு சுன்ன கற்பம் : வெடி உப்பை முறையாக சுன்னம் பண்ணி அதை மண்டலம் உண்ண வேண்டும். மண்டலம் உண்டால் உடலில் உள்ள சதை மாமிசம் இவைஎல்லாம்வலுக்கும், நீர்க்கட்டு, நீர்ப்பணைப்பு இருக்காது. தேகம் எவ்வளவு நாள் ஆனாலும் இருக்கும். நரைதிரைகள் அகன்றுவிடும். மூலாதாரம் பிரகாசிக்கும்.

508 கல்உப்பு சுன்ன கற்பம் : கல்உப்பை முறைப்படி சுன்னம்செய்து மண்டலம் உண்ண ஸுஷும்னா என்ற நாடி முதல் எல்லா நரம்புகளும் இறுகி தேகம் நலியாதிருக்கும்.

509 காரச் சுன்ன கற்பம் : காரச் சுன்னத்தின் கற்பத்தால் பித்தநீர் பிணைப்பு அகன்று வாசி சிதறாமல் நிற்கும். ஆகவே காரச் சுன்னத்தை முறைப்படி உள்ளுக்கு ஏற்று (உண்ணு).

510 சீனச் சுன்ன கற்பம் : சீனத்தை சுன்னமாகச் செய்து அதை மண்டலம் முறைப்படி கொண்டால் சிலேத்துமம் என்ற தோஷம் அகன்று தேகம் திடப்படும்.

511 தங்க சுன்ன கற்பம் : தங்கத்தை சுன்னம் செய்து மண்டலம் உண்டால் வாதம் அகன்று பெருத்த தேகம் இறுகி பிரகாசிக்கும்.

512-513 வெள்ளிச் சுன்ன கற்பம்: வெள்ளிச் சுன்னத்தை மண்டலம் கொண்டால் மூலச்சூடு அகலும். நாடிகள் முறுக்கேறும். தேகம் ஏகாந்த போதமாய், சிறுபிள்ளையாக நடந்தாலும் ஓடினாலும் மூச்சு வாங்காமல் இருக்கும். நரைத்த மயிர் கருக்கும். காலன் என்ற எமன் ஓடி விடுவான்.

514 அயச்சுன்ன கற்பம் : இரும்புச் சுன்னத்தை முறையாக மண்டலம் கொண்டால் தசவாய்வும் அகன்றுவிடும். (வயது கோடி காலமாகும்) கோடி ஆண்டு வரை உயிரோடு இருக்கலாம்.

515-516 காந்த சுன்ன கற்பம் : காந்தச் சுன்னத்தை பாலுடன் சேர்த்து ஒரு மண்டலம் பருகினால், காந்தல், வெக்கை, வெதுப்பு, சூலை, பாண்டு, கிராணி, சோகை, கண்டமாலை, தீராத ஈளை (சளி), குன்மம் போன்ற நோய்கள் இருந்த இடம் தெரியாமல் ஓடும்.

517-518 நாகச் சுன்ன கற்பம் : நாகத்தை சுன்னம் செய்து ஒரு மண்டலம் ஆட்டுப் பாலுடன் கொண்டால், கிராணி, மூலம், பவுத்திரம், குட்டம், இன்னும் இவை போன்ற தீராத கொடிய வியாதிகளும் நடுங்கிக் கொண்டு ஓடிவிடும். மீண்டும் வராது.

519-520 வங்கச் சுன்னம் : வங்கச் சுன்னத்தை வெண்ணெயில் மண்டலம் கொண்டால் உடலை உருக்கும் வியாதிகள் மற்றும் மேகம், தினவு, வரட்சி, கைகால் எறுத்தல், கைகால் வெளுத்தல், கொடிய காந்தல் போன்ற நோய்கள் கொண்டன் அகன்று ஓடும்.

**521-522 கார்வங்கச் சுன்னம் :** கார்வங்கச் சுன்னத்தை தேனில் ஒரு மண்டலம் கொண்டால் மேகம், மூச்சான சுவாசத்தில் வரும் நோய்கள், சூலை, பரங்கிகள், கைகாலில் வரும் புற்று இவை எல்லாம் நடுங்கி ஓடிவிடும்.

**523-526 மூலிகையின் பெயர் :** அறுபத்து நாலு பாஷாண முறைகளும் பெயர்களும் கூறினோம். இப்பொழுது பத்து வகையான மூலிகையின் பெயர்களை கூறுவோம். கருநெல்லி, சோதிவிருட்சம், கருங்கொடிவேலி கல்த்தாமரை, கருப்புகத்தாழை, பொற்சீந்தில், கருநீலி சொர்ணத்திராயுடன், முன்டக விருட்சம், சாயாவிருட்சம், இந்த பத்து மூலிகைகளை நீ பார்க்க வேண்டும் என்றால் சித்தர்களிடம் சென்று வணங்கு. வா என்று அழைத்துக் கொண்டு போய் உனக்குக் காட்டுவார்கள். அதை அறிந்து கண்டு கொள். கண்டு கொண்ட பிறகு கருநெல்லி என்ற மூலிகை எடுத்துக் கொள். அதைப் பற்றி உனக்கு கூறுகிறேன்.

**527-532 கருநெல்லி கற்பம் :** அந்தக்கருநெல்லி என்ற மூலிகை கண்டு அதை மண்டலம் கொண்டால் தேகம் இளமையாகும். கெவுன சித்தி உண்டாகும். அடி முடியான நாதவிந்தின் ஸ்தானம் தோன்றும். அதனுள்ளே சதுரகிரி தோன்றும். அங்கே ஒரு தீபம் தெரியும். அந்த தீபத்தின் பெருமை கண்டால் குருநாதன் உனக்கு ஸகல குறிகளையும் காட்டுவார். குறியை கண்டவுடனேயே சிவயோகம் சித்திக்கும். எல்லா கற்பமும் சித்தியாகும். வாதம், (இரசவாதம்) வசியம் இவை எல்லாம் சித்தியாகும். நீ சித்தனாவாய். இந்த மூலிகையில் சித்திகள் அதிகம் உண்டு. எல்லாலோகங்களும் பழுக்கும். சரக்குகளில் உள்ள சத்துகள் தானே கிடைக்கும். உனக்கு வாதத்தைப் பற்றி கூறுகிறேன் கேள். வாதம், வசியம் இரண்டையும் அறிய வேண்டுமாயின் நாதம் ஒடுங்கும் இடமான நடுநிலையான தீபத்தை அறிய வேண்டும். அந்தப் பொருளை அறிந்தால் சிவயோகம் சித்திக்கும். அதை அறிந்தால் தேகம் பூரணமயமாகும்.

அதை அறிந்தால் உயிர் தேகத்தை விட்டுப் போகாது. அந்தப் பொருளுக்கு உள்ளேதான் சித்தி. ஆகவே அந்தப் பொருளைப் போற்றுவதில் மகிழ்ச்சி கொள்.

533-542 ஆதிசரக்கில் வேதை : முன் சொன்ன வைப்பு சரக்கில் பழுக்கும் வேதையைக் கூறுகிறேன் கேள். சீனம், வெடிஉப்பு, கார்முகில் பாஷாணம் இவற்றை வாங்கி கழுதை மூத்திரத்தில் சுத்தி செய்து அதில் பூநீறு கூட்டி செயநீர் விட்டு அரைத்து வில்லை செய்து ஓட்டில் வைத்து மூடி, சீலை செய்து புடம் போட வெந்து உருகும். அதனுடன் லிங்கம் கூட்டி அரைத்துப் புடம் இட உருகி நிற்கும். அந்த இடைக்கு தங்கம் கூட்டி குகையில் வைத்து உருக்க உருகி ஒன்றாகும். இதை வெள்ளியில் பத்துக்கு ஒன்று சேர்க்கத் தங்கமாகும். இதை குடவனில் (பித்தளை) சேர்க்க எட்டரை மாற்றாகும். செம்பில் ஆறு மாற்றாகும். இதில் ரவிமதி இரண்டையும் சேர்த்து ஈந்தால் பத்துக்கு மேல் மாற்று கிடைக்கும். இந்தக் களங்கில் சரிபாதி கெந்தகம் வீரம் இவை இரண்டையும் பொடித்து செயநீர் விட்டு உருட்டி ஓட்டில் வைத்துப் புடம் போடச் செந்தூரமாகும். இந்தச் செந்தூரத்தை வெள்ளியில் நூற்றுக்கு ஒன்று இட்டு உருக்கினால் தங்கமாகும். இதன் மாற்று இருபதாகும் இந்தச் செந்தூரத்தை செம்பில் நூற்றுக்கு ஒன்று கொடுத்தால் எட்டு மாற்று கிடைக்கும் (அரை × பதினாறு). வங்கத்தில் ஏழரை மாற்றும் குடவனில் (பித்தளை) பத்துமாற்றும் கிடைக்கும். இந்தச் செந்தூரத்தை பணவிடை கொள்ள தேகசித்தி உண்டாகும். சித்தியும் முத்தியும் கிட்டும். மூதண்டம் தெரியும்.

543-550 நாக பாஷாணக் களங்கு வேதை : நாக பாஷாணத்தில் முன் களங்கிற்கு சொன்ன உப்பைக் கூட்டி செயநீர் விட்டு அரைத்து உருட்டி ஓட்டில் வைத்துப் புடமிட நாகம் ஒன்று உருகும். இதனுடன் தங்கம் கூட்டி உருக்கினால் நாகக் களங்காகும். இந்தக் களங்கை பத்துக்கு

ஒன்று வெள்ளியில் கொடுத்து உருக்கினால் வெள்ளி பழுத்து பத்தரைமாற்றாகும். குடவனில் கொடுத்தாலும் தங்கமாகும். செம்பில் கொடுத்தால் பத்து மாற்றாகும். இப்படி ஒவ்வொரு முறையும் கொடுத்துப் புடம்போட அதிகமாற்று உண்டாகும். இதைச் செந்தூரமாக மாற்ற வழி சொல்கிறேன் கேள். கெந்தகம் வீரம் இவை இரண்டையும் களங்குடன் சேர்த்து விந்து நீர் விட்டு அரைத்து ரவியில் உலர்த்தி ஓட்டில் வைத்து மூடிப் புடம்போட்டு எடுக்கச் செந்தூரமாகும். இதை நூற்றுக்கு ஒன்று வெள்ளியில் கொடுக்கப் பழுத்து தங்கமாகும், வங்கத்தில் தடவிப் புடம் இடக் கட்டிப் பழுக்கும். பத்தரை மாற்று தப்பாது. இந்த செந்தூரத்தைப் பணவிடை கொள்ள தேகம் மின்னல் போல் பிரகாசிக்கும். வாசி மூலாதாரத்தில் சென்று சேரும்.

551-558 **கெந்தக பாஷாணக் களங்கு வேதை :** ஆதி உப்பு, கெந்தக பாஷாணம் இவை இரண்டையும் ஒன்றாக செயநீர் கூட்டி அரைத்து வில்லை செய்து ஓட்டில் இட்டுப் புடம் போட்டால் கெந்தி உருகி நிற்கும். அதற்கு சமன் தங்கம் கூட்டி உருக்கினால் களங்காகும்: அதை வெள்ளியில் ஆயிரத்துக்கொன்று கொடுத்தால் மாற்று ஆயிரம் ஆகும். செம்பில் சொல்ல முடியாத அளவிற்கும், குடவனில் வேண்டிய அளவும், காரீயத்தில் மாற்று அதிகமாகவும் கிடைக்கும். மாற்றுத் தங்கம் பார்க்கக் கண்கூசும். இந்தக் களங்குடன் வீரம் சேர்த்து விந்துநீர் விட்டு அரைத்துப் புடம்போட செந்தூரமாகும். இதை லோகத்தில் தடவி நெருப்பில் இட்டுக் கொளுத்தினால் அதிக மாற்று காணும். இந்த செந்தூரத்தை பூசித்து பணவிடை கொண்டால் தேகம் ஒரு நாளும் குன்றாது. கோடி சூரியப் பிரகாசம் உணடாகும்.

559-566 **துருசுபாஷாணக் களங்கு வேதை :** துருசு பாஷாணத்துடன் ஆதி உப்பை சேர்த்து அதில் சூதம் கூட்டி செயநீர் விட்டு அரைத்துப் புடம்போட துருசு பாஷாணம், உப்பு, சூதம் இவை மூன்றும் சேர்ந்து உருகும். இதற்குச்

சரியிடை தங்கம் சேர்த்து உருக்கினால் களங்காகும். இதை வெள்ளியில் பத்தில் ஒன்றுதாக்கினால் மாற்று ஐம்பதாகும். செம்பில் முப்பது மாற்றும் குடவனில் பத்தரை மாற்றும் காணும். எந்த லோகத்தில் கொடுத்தாலும் பழுக்கும். இந்தக் களங்கு எடைக்கு கெந்தகம் வீரம் கூட்டிப் பொடித்து நாதநீர் விட்டு அரைத்து வழித்து உருட்டி ரவியில் வைத்து உலர்த்திக் காய்ந்தபின் ஓட்டில் வைத்து மூடிச் சீலைமண் செய்து சோதியை வணங்கிப் புடம்போட செந்தூரமாகும். வெள்ளி, வங்கம், குடவன் இவற்றில் எந்த லோகத்திலும் நூற்றுக்கு ஒன்று தாக்க பழுத்துத் தங்கமாகும். இந்த செந்தூரத்தை பணவிடை மண்டலம் கொண்டால், தேகம் வலுத்து உயிர்பிரியாது நிற்கும்.

567-574 தாளகக்களங்கு வேதை : தாளகம், ஆதிஉப்பு, பச்சை இவை மூன்றையும் கூட்டி செயநீர் விட்டரைத்து ஓட்டில் வைத்துப் புடம்போட மூன்றும் சேர்ந்து உருகி நிற்கும். இதனுடன் சரியிடை தங்கம் கூட்டி உருக்கினால் களங்காகும். அதை வெள்ளி, செம்பு, குடவன் இவைகளில் கொடுத்தால் மாற்று அதிகம் காணும். கணக்கு சொல்ல முடியாது. இந்தக் களங்குடன் கெந்தகம் வீரம் இவை இரண்டையும் சேர்த்து நாதநீர் விட்டரைத்து வில்லை செய்து உலர்த்திப் புடம்போட செந்தூரமாகும். இந்த செந்தூரத்தை, வெள்ளியிலும், செம்பிலும், குடவனிலும் கொடுக்கச் சொல்ல முடியாத அளவு மாற்று கிட்டும். இந்த செந்தூரத்தை பணவிடை ஒரு மண்டலம் கொண்டால் சித்திபுரியும் தன்மை உண்டாகும். தேகம் கதிர்போல் பிரகாசிக்கும். கெவுன சித்தி உண்டாகும். முத்தி கிட்டும்.

575-583 வீரபாஷாண களங்குவேதை : வீரபாஷாணத்தில் ஆதிஉப்பு, காரம் இவை மூன்றையும் கூட்டி செயநீரில் அரைத்து உருண்டை செய்து ஓட்டில் வைத்துப் புடமிட உருகிநிற்கும். அந்த எடைக்கு தங்கம் சேர்த்து உருக்கினால் களங்காகும். இதை செம்பிலும், வெள்ளியிலும், குடவனிலும் கொடுக்க மாற்று அதிகம் காணும். மதியுடன்

விதியையும் சேர்த்து வணங்கினால் விதியே மதி என்று புலப்படும். பிறகு வீரக்களங்குடன் கெந்தி, வீரம் இரண்டையும் கூட்டி நாதநீர் விட்டு அரைத்துப் புடம் போட செந்தூரமாகும். இதை வெள்ளி, செம்பு, குடவன் இவற்றில் ஊட்ட மாற்று அதிகம்கிட்டும். இச்செந்தூரத்தை ஒரு மண்டலம் உண்ண வாசி எல்லாம் ஒடுங்கி தேகசித்தி உண்டாகும். ஏகாந்த தீபத்தின் தரிசனம் உண்டாகும்.

584-588 **கெவுரி பாசாண களங்கு வேதை :** கெவுரி பாசாணம், ஆதிஉப்பு, பச்சை இவை மூன்றையும் விந்து நீரில் அரைத்து உருட்டிப் புடம்போட உருகிக் கட்டும். இந்த எடைக்கு சரியாகத் தங்கம் கூட்டி உருக்கினால் களங்காகும். இதை லோகத்தில் ஏற்ற வேதையாகும். எந்த லோகத்தில் கொடுத்தாலும் அது பழுக்கும். இந்த களங்குடன் கெந்தி, வீரம் சேர்த்து நாதநீர் விட்டரைத்துப் புடம்போட செந்தூரமாகும். இதை லோகத்தில் கொடுக்க பழுத்து தங்கமாகும். இதை உண்டு முத்தி வழியில் நில்.

589 596 **வெள்ளைப் பாசாண களங்கு வேதை :** வெள்ளை பாஷாணம், ஆதிஉப்பு பச்சை, வீரம் இவை மூன்றையும் விந்துநீர் விட்டரைத்து புடம்போட உருகி நிற்கும். அதன் உடன் வெள்ளி சரிஎடை கூட்டி உருக்க களங்காகும். இதைச் செம்பில் நூற்றுக்கு ஒன்று கொடுக்க வெள்ளியாகும். இந்தக் களங்குடன் சூதம் சேர்த்து அதனுடன் வீரமும் சேர்த்து (சரி எடையாக) விந்துநீர் விட்டு அரைத்து புடம்போட பற்பமாகும். இதை செம்பில் நூற்றுக்கு ஒன்று கொடுக்க வெள்ளியாகும். இந்த வெள்ளி அதிக வெள்ளியாகும். இதனுடன் வங்கம் சேர்ந்து அதனுடன் குருபற்பம் சேர்த்து உருக்க எல்லாம் சேர்ந்து உருகும். உருகி நின்ற வெள்ளி குரு வெள்ளி ஆகும். சாதாரண வெள்ளி என்று நினையாதே. செம்பில் நூறில் ஒன்று இட அதுவும் வெள்ளியாகும்.

597-607 **ரசசிங்கி களங்கு :** கெந்தகம், அரிதாரம், துருசு, லிங்கம், வீரம் இவையுடன் ஆதிஉப்பையும் சேர்த்து

செயநீரில் அரைத்து வில்லை செய்து உலர வைத்து செப்பு அகலில் வைத்துப் புடம்போட உருகிநிற்கும். அதனுடன் தங்கம் சேர்த்து உருக்கினால் களங்காகும். அந்தக் களங்குடன் கெந்தகம், வீரமும் நேர் சரியாகக் காரமும் கூட்டி விந்துநீரில் அரைத்து பிறகு நாதநீர் விட்டு அரைத்து பிறகு பால்விட்டு அரைத்தால் மெழுகாகும். அதை நவலோகத்தில் செய்த அகலில் அடக்கி சீலைமண் செய்து கமலம் போல் தீயெரிக்க புகையெழும்பி லோகம் பழுத்து உருகி மெழுகாக நிற்கும். அதையெடுத்து உடலில் தடவினால் தேகம் உறுதியாகும். நரம்புகள் இருகும். உன் தேகத்தில் உண்டாகும் அழுக்கை வெள்ளியில் தாக்கினால் பழுக்கும். நீ மலையில் சஞ்சரி. சித்தர் செய்த அனைத்துவித பொருள்களையும் பார். அம்பரத்தில் நின்று பூசித்தால் சித்தர்கள் வந்து உனதிடம் எல்லாவற்றையும் கூறுவார்கள்.

608-614 அஞ்சன பாஷாண மை : அஞ்சன பாஷாணத்தை கூறுகிறேன் கேள். தொட்டி, கற்பரி, கார்முகில் லிங்கம், சிலாமதம், அஞ்சனக்கல் போன்ற ஆறு பாஷாணத்தையும் ஒன்றாகச் சேர்த்துப் பொடித்துப் போட்டு வாய் நீர் விட்டு நாற்சாமம் வருக்க சிவக்கும். இதை கல்வத்தில் போட்டு (சிவந்தநீர்) விட்டு சாமம் ஒன்று அரைக்க வேண்டும். இதனுடன் சிவந்த உப்பும் தேனும் சேர்த்து அரைக்க மையாகும். இந்த மையின் மார்க்கம் எவரும் இதுவரைஅறிந்ததில்லை. இதை சிமிழில் வைத்து அஞ்சனா தேவியைப் போற்றி நெற்றியில் பொட்டு இட்டால் பூமி திறந்து பாதாளம் தெரியும். பகலில் வானத்தை நோக்கினால் நட்சத்திரம் தெரியும். அது மட்டுமின்றி கோடி காதம் வரை சுற்று வட்டாரம் தெரியும். இந்த மையை நெற்றியில் திலதம் போட்டு யோகம் புரிய அதாவது (அஷ்டாங்க யோகத்தில்) ஸகஸ்ராரத்தில் நின்றால் உயிரின் பலம் அதிகரித்து மனதால் உயிரை அறியும் ஆற்றல் உண்டாகும்.

615 622 லிங்க பாஷாண களங்கு செந்தூரம்: உயிருடன் மனதை அறிந்தால் அனைத்தும் வசியமாகும். வெய்யிலும் பனியும் ஒன்றாகத் தோன்றும். வேண்டிய இடத்தில் வசிக்கலாம். லிங்க பாஷாணக் களங்கு சொல்கிறேன் கேள். லிங்க பாஷாணத்துடன் கெவுரி, பச்சை, ஆதிஉப்பு, இவை மூன்றையும் கூட்டி அதை நாதநீரில் அரைத்து உலர்த்திப் பின் செப்பு அகலில் இட்டுப் புடம் போட உருகி நிற்கும். அதனுடன் தங்கத்தைச் சேர்த்து குகையில் உருக்க களங்காகும், இந்த களங்கை வெள்ளியில் கொடுக்க அதிகமாற்று உண்டாகும். இந்த களங்குடன் கெந்தி, வீரம், காரம் இவை மூன்றையும் சேர்த்து விந்து நீரில் அரைத்து உருட்டிக் காய வைத்து செம்பு அகலில் இட்டுப் புடம்போட சிவந்த செந்தூரமாகும். இந்த செந்தூரத்தைப் பணவிடை மண்டலம் கொண்டால் மனம் திடப்பட்டு தேக சித்தி ஏற்பட்டு கெவுனசித்தி ஏற்படும்.

623 629 உவருப்புச் செந்தூரம்: லிங்கம், பச்சை, தாரம், அயத்தொட்டிப் பாஷாணம், கெந்தகம், காரம், வீரம் இவைகளை ஒன்றாகச் சேர்த்து நன்றாகப் பொடிக்க வேண்டும் அந்தப் பொடியில் வாய் நீர் விட்டுப் பிசறிக் கொண்டு இரும்புச் சட்டியில் போட்டு வறுக்க வேண்டும். வறுக்கும்போது முதலில் கறுப்பாகும். பிறகு சற்று நேரத்தில் வெளுப்பாகும். மேலும் வறுத்துக் கொண்டே இருந்தால் சிவப்பு நிறமடைந்து செந்தூரமாகும். இந்தச் செந்தூரத்தை அறிந்தவர்கள் யாரும் இல்லை. என் குருநாதர் எனக்கு உபதேசித்த முறை இது. இந்தச் செந்தூரத்தை வெள்ளித் தகட்டில் பூசி நன்றாகப் புடம் போட்டு ஆறியபின் எடுத்துப் பார்க்க அதன் வேதை கண் கூசச் செய்யும். இது எல்லா லோகங்களையும் பழுக்கச் செய்யும். மக்கள் உரைத்த இந்த முறையை யாருக்கும் சொல்லாதே. உத்தமர்களிடத்தில் மட்டுமே பேசு. மத்திமமான மாந்தர்களை விட்டு விலகிச் செல். தன் நிலை மறந்து உள்ளமொடுங்கித் தியானத்தில் நின்றிட விண்ணில்

மனோன்மணித் தாய் தோன்றுவாள் சிரத்தின் நடுவில் (நெற்றிப் பொட்டில்) தீப ஒளியும் தோன்றுமாம்.

630-637 கோடாசூரி பாஷாண செந்தூரம் : சூரியனைப் போல் பிரகாசிக்கும் கோடாசூரி பாஷாணத்தை எடுத்து அதனுடன் கார்முகில், தீமுறுவல், கெந்தி, லிங்கம் இவை ஐந்து சரக்கையும் சரிஎடை கூட்டி வெங்கலத் தகட்டில் வைத்து செயநீர் தெளித்து ரவியில் உலர்த்தி, பின் அதை வாய்நீர் விட்டு அரைத்து சூரிய புடம் இடப் புகைந்து கருகிச் சிவந்து செந்தூரமாகும். இதைக் குப்பியில் பதனமாக வைத்துக் கொண்டு போற்று. இதை வெள்ளி யிலும் செம்பிலும் தடவிப் புடம் இட அதிகமாற்று கிடைக்கும். இந்த செந்தூரத்தை பணவிடை கொண்டால் தேகம் ஒருநாளும் குன்றாது. வாசி மூலத்தில் ஒடுங்கும். எத்தனை நாள் ஆனாலும் தேகம் இருக்கும். தேகத்தைக் காத்து சத்தி சிவத்தை பூசி. இவ்வாறு பூசித்தால் தீவினை தீரும். சிந்தை வளரும். சுழுமுனையை தாண்டி அதற்கு அப்பால் சகஸ்ராரத்தில் நின்று சுடரொளி காண்பாய்.

638-643 பற்பம் : வீரம், நாகம், லிங்கம், காரம், ரசம், சலாசத்து இந்த ஆறு சரக்கையும் கூட்டி செயநீர் விட்டு ஆறு சாமம் அரைத்து அடைதட்டி ரவியில் உலர வைத்து ஓட்டில் இட்டு மூடிச் சீலைமண் செய்து புடம்இட பற்பமாகும். இதை வெள்ளித் தகட்டில் பூசிப் புடம்இடப் பழுக்கும். இதைத் தவிர குடவன் செம்பு போன்ற லோகங் களும் பழுக்கும். இந்தப் பற்பத்தை பணஎடை எடுத்து ஒரு மண்டலம் கொண்டால் தேகம் நிலைத்து நிற்கும். வாசி மூலாதாரத்தில் சென்று சேரும். சுழுமுனை கண்திறக்கும்.

644-649 நாக பற்பம் : நாகம், ரசம், தாரம், வீரம், சலாசத்து, காரம் இவை எல்லாவற்றையும் இடித்து அதனுடன் செயநீர்விட்டு அரைத்து வழித்து உலர்த்தி ஓட்டில் வைத்துப் புடம்இட பற்பமாகும். மல்லிகைப் பூப்போல இருக்கும். இது நாக குருபற்பமாகும். இதை



வெள்ளியில் நூற்றுக்கு ஒன்று தாக்கப் பழுத்துத் தங்க

மாகும். செம்பில் கொடுக்க ஏமமாகும். (தங்கமாகும்). இந்த பற்பத்தை பணஎடை ஒரு மண்டலம் தேனில் உண்டால் மனம் உறுதியடைந்து சிவயோகம் கிட்டும்.

650-653 தாரபற்பம் : வீரம், நாகம், ரசம், பச்சை, சலாசத்து, சாரம் இவற்றை எல்லாம் ஒன்றாகச் சேர்த்து செயநீர் விட்டு அரைத்து ரவியில் உலர்த்தி எடுத்துக் கொண்டு அதை ஒரு ஓட்டில் வைத்து மூடி சீலைமண் செய்து புடம்போட பற்பமாகும். இந்த பற்பம் அதிக வேதை புரியும்.

654-664 சகலசரக்கிலும் சத்தெடுக்க செயநீர்! உலோகம் உபரசம், அறுபத்துநாலு சரக்கு, சாரம், பழச்சாறு, ஆதி சரக்கு இவற்றை எல்லாம் கண்டு இதிலிருந்து சத்து எடுக்க ஒரு செயநீர் சொல்கிறேன் கேள். அண்டம் பிண்டம் இரண்டையும் ஐம்பது பலம் எடுத்து, அதை ஒரு பாண்டத்தில் இட்டு அதனுடன் வீரம், பச்சை பாஷாணம், பூரம், காரம், சாரம், சீனம், துத்தம், அன்னபேதி, கெந்தி, தாரம், கார்முகில், தொட்டி, மீன் அம்பர், கம்பி உப்பு இவை பதினைந்து சரக்கையும் வகைக்கு ஐந்து பலம் எடுத்துச் சேர்த்து உரலில் இட்டு நன்றாகப் பொடித்துக் கொண்டு ஒரு .பானையில் இட்டுச் சும்மா பிசைந்து கொண்டு அதனுடன் அமுரியும், காரநீரும் கூட்டிக் கிண்டி ரவியில் வைத்துக் காய்ந்தபின் மீண்டும் கிண்டினால் சுண்டி வரும். அதை அடுப்பில் வைத்துக் கடுகத் தீமூட்டி எரித்தால் சுன்னமாகும். இந்த சுன்னத்திற்கு நாலில் ஒன்று சாரம் சேர்த்துக் கலந்து பனியில் வைத்தால் செயநீர் கிடைக்கும். இதில் சாரம், காரம் பாஷாணம், லோகம் இவை எல்லாவற்றையும் முக்கி எடுத்து உருக்கினால் சத்தாகும். இந்த செயநீரின் பெருமையை எவரும் அறிய மாட்டார். கோடியில் ஒருவரே குரு பக்தியின் கூர்மையால் இந்த எண்ணூறு என்ற நூலில் உள்ளபடி அறிவார்,

665-668 கருட பச்சை பற்பம் : கருட பச்சையை செயநீர் விட்டு அரைத்து உருட்டி ஓட்டில் வைத்துச் சீலை

மண் செய்து புடம் போட பற்பமாகும். இந்த பற்பத்தை ஒரு மண்டலம் குருவை நினைத்து உட்கொண்டால் நோய்கள் எல்லாம் பறக்கும். போன இடம் தெரியாமல் ஓடிவிடும். நீ இருக்கும் ஊரில் விஷம் என்ற சொல்லே இருக்காது. இந்த கருடன் முட்டைக் கருவினால் படம் கொண்டு நிற்கும் பாம்பு நடுக்கம் கொண்டு வசியமாகும்.

669-672 நத்தை பற்பம்: நத்தைச் சிப்பியை எடுத்து அதனுடன் சத்தி சேர்த்து செயநீரில் அரைத்து வழித்து வில்லை தட்டி உலர்த்தி ஓட்டில் வைத்து மூடிச் சீலை மண் செய்து புடம்போட பற்பமாகும். இதை மண்டலம் கொண்டால் நாக்கானது குழந்தை நாக்கு போல் ஆகும். எல்லாச் சொற்களும் நன்றாகப் பேச வரும். மதியமுதம் தானே பிரகாசிக்கும், தூக்கம் அகன்றுவிடும்.

673-677 ஆமை ஓட்டு பற்பம்: ஆமை ஓடு எடுத்து அதை அமுரியில் சுத்திசெய்து அதனுடன் சத்திசாரம், பூரம் சேர்த்து அரைத்து உருட்டி ரவியில் உலர வைத்து அதை ஓட்டில் இட்டு ஓடு மூடிச் சீலைமண் செய்து புடம் போட பற்பமாகும். இதை குருவைப் போற்றி மண்டலம் கொண்டால் மேனி தளராது. வாசியும் திடப்படும். மனோ வேகத்தில் பூமண்டலம் முழுதும் சுற்றலாம்.

உண்ணும் முறை: தேன் பால் இரண்டும் இதனுடன் சேர்த்துப் பணவிடை மண்டலம் கொள்ள வேண்டும்.

678-682 அஸ்தி பற்பம்: முத்து, கழுதையின் எலும்பு இவை இரண்டையும் அமுரியில் ஊறவைத்து எடுத்து உலர்த்தி அதனுடன் காரீயம்,—அஸ்திபற்பம் சொல்லபட்ட முறை தெளிவாக இல்லை.

683-687 சுக்கான் பற்பம்: சுக்கான் என்ற கல்லை எடுத்து அதைப் பொடித்து நீரில் பிசிறி உலர்த்தவேண்டும். இவ்வாறு மூன்று முறை அல்லது அஞ்சு முறை செய்தால் சுத்தமாகும். இதனுடன் கல்லுப்பு, சலாசத்து, சத்திசாரம்,

மூன்றையும் சமஎடை சேர்த்து உமிழ்நீர் விட்டு அரைத்து உலர்த்தி ஓட்டில் வைத்துப் புடம்இட பற்பமாகும். இதில் பணவிடை வீதம் நெய்யில் மண்டலம் கொண்டால் தேகம் வலுவாகும் குளுமையாகும். விந்து கட்டும்.

688-692 கபால பற்பம் : நல்ல மண்டை ஓட்டைக் கொண்டு வந்து சுத்திசெய்து அதைச் சுட்டு சத்தெடுத்து நவச்சாரம், சத்திசாரம், சரிஎடை எடுத்துக் கொண்டு சுத்தகெங்கை நீரில் அரைத்து உலர்த்தி உருட்டி ஓட்டில் வைத்துச் சிலைமண் செய்து புடம்இட சத்து வெளுத்து குற்றமில்லாத பற்பமாகும். இதை தேனில் மண்டலம் கொண்டால் தேகம் திடப்படும். கண்கள் பிரகாசிக்கும். வெகுதூரத்தில் உள்ள பொருள்கள் எல்லாம் தோன்றும். தீபந் தோன்றும்.

693-698 கல்நார் பற்பம் : கல்நாரை எடுத்து இடித்து ஆவின் பாலில் போட்டு ஊறவைத்து எடுத்தால் சுத்தியாகும். அதனுடன் பூரம், காசுக்கட்டி, சலாசத்து சேர்த்து காரநீரில் அரைத்து உருட்டி உலர்த்தி ஓட்டில் இட்டுச் சீலைமண் செய்து எருவில் வைத்துப் புடம்போட பற்பமாகும். இந்த பற்பம் வெளுப்பாய் இருக்கும். இதைக் கொண்டு பல் விளக்கினால் பல் நேராகி திடப்படும். தந்தம் வலுக்கும். கல்லை வாயில் போட்டுக் கடித்தாலும் பல் அசையாது நிற்கும். கபத்தை அறுக்கும். பித்தம் போக்கும். வாய்நாற்றம் போகும். விந்துகட்டி திடப்படும்.

699-703 சலாசத்து பற்பம் : சலாசத்தைத் தண்ணீரில் போட்டுக் காய்ச்சினால் சுத்தியாகும். இதனுடன் கருவாப் பட்டை, வெடிஉப்பு, வீரம் இவற்றை சேர்த்து குருவான செயநீரில் அரைத்து வழித்து உருட்டி உலர்த்தி ஓட்டில் வைத்துப் புடம்போட வெளுத்து பற்பமாகும். இந்த பற்பத்தை பணஎடை மண்டலம் கொண்டால் தேகம் பலக்கும். பிரகாசம் உண்டாகும். வாசி மூலத்தில் சென்று அடையும். சுடரொளி தோன்றும்.

704-707 முத்து பற்பம்: முத்து, வெடி உப்பு, பூரம், வீரம் இவை நான்கையும் காரநிரில் நான்கு சாமம் அரைத்து வழித்து உருட்டி உலர்த்திப் புடம் இட சுன்ன மாகும். இதைப் பண எடை வீதம் மண்டலம் கொண் டால் கண்கள் இரண்டும் பிரகாசமாகி தூரம் தொலைவில் உள்ள பொருள்கள் எல்லாம் தெரியும். பகலில் நட்சத்திரம் தெரியும்.

708-710 பவள பற்பம்: பவளத்தை சுத்தி செய்து அதனுடன் முத்துச் சுன்னம் சேர்த்து காரநீரில் அரைத்து வழித்து உருட்டி உலர்த்திப் புடம்இட வெளுத்துச் சுன்ன மாகும். குருவை வணங்கி இந்த சுன்னத்தை ஒரு மண்டலம் கொண்டால் மனம் திடப்படும். மலம் இளகும். விந்து கட்டி யாகி சுழுமுனை அடையும்.

711-715 கோமேதகச் சுன்னம்: கோமேதகத்தை எடுத்து நெய்யில் போட்டுக் காய்ச்சி பாலில் போட்டுக் கழுவினால் சுத்தியாகும். சுத்தி செய்த கோமேதகத்தை எடுத்துக் கொண்டு அதனுடன், பூரம், கம்பி உப்பு, சரி எடை சேர்த்து வாய்நீர் விட்டு அரைத்து வழித்து உலர்த்தி ஓட்டில் வைத்துப் புடம் போட சுன்னமாகும். இதைப் பணஎடை முலைப்பாலில் உண்டால் தேகம் வச்சிர காய மாகும். வாசி தீபத்தில் ஒடுங்கும். அந்தத் தீபத்தில் மனம் லயமாகும். கடல் நீரில் நடக்கலாம்.

716-719 புஷ்பராக சுன்னம்: புஷ்பராகத்தை எடுத்து நெய்யில் காய்ச்சி பாலில் கழுவி அதனுடன் வீரம், பூரம் சேர்த்துக் காரநீர் விட்டு அரைத்து வட்டுப் பண்ணி உலர்த்தி ஒட்டில் இட்டு மூடிச் சீலைமண் செய்து புடம்இட சுன்னமாகும். (பற்பமாகும்) இதை மண்டலம் நெய்யில் பணஎடை கொண்டால் பூமி பிரிந்து பாதாளம் தோன்றும்.

720-725 வைர பற்பம்: வைரத்தை எடுத்து அதனுடன் வீரம், பூரம், கம்பிஉப்பு, வெள்ளை இவை நான்கையும் காரநீரில் அரைத்து முன்போல் பண்ணி உலர்த்திப் பின்

அதை ஓட்டில் வைத்து மூடிச் சீலைமண் வலுவாய்ச் செய்து புடம்இட வைரம் வெளுத்து நீறி பற்பமாகும். இதை மண்டலம் முலைப்பாலில் கலந்து உட்கொண்டால் தேகம் வலுத்து வைரம்போல் ஆகும். வாசி மூலத்தில் சென்று லயமாகும். திக்விஜயம் செய்யும் அரசனாகவும் சித்தனாகவும் ஆவாய். இதுவே, வைரபற்பத்தின் மகிமை.

726-730 பச்சைபற்பம் : பச்சைக் கல்லை எடுத்து அதனுடன் வீரம், பூரம் சரிஎடை எடுத்துச் சேர்த்து காரநீர் விட்டு நன்றாக அரைத்து அடைபோல் உருட்டி ஓட்டில் இட்டுப் புடம்போட்டு ஆறினபின் எடுத்துப்பார்க்க பச்சை நீறி பற்பமாய் நிற்கும். அந்த பற்பத்தை குருவைப் போற்றி தினமும் பணஎடை கொள்ள தேகம் வலுக்கும். ஒருநாளும் இளைக்காது படை முகத்தில் நீ சென்று போர் புரிந்தால் அல்லது வேறு விதத்தில் உன்தேகத்தில் வெட்டுப் பட்டால் வெட்டிய இடம் உடனே ஒட்டிக்கொள்ளும். இதுவே பச்சை பற்பத்தின் மகிமையாகும்.

731-735 நீலச்சுன்னம் : நீலம், வீரம், கம்பிஉப்பு, அண்டம், துத்தம் இவை எல்லாம் சேர்த்து காரநீரில் அரைத்து உருட்டி உலர்த்தி ஓட்டில் இட்டுச் சீலைமண் செய்து புடம்இட வெளுத்துச் சுன்னமாகும். இதை மண்டலம் தேனில் கொண்டால் வாசி ஓடாது. மூலத்தில் ஒடுங்கும். உலகில் உள்ள அனைத்து உயிர்களும் வசியமாகும்.

736-740 வைடூரிய பற்பம் : வைடூர்யத்தை எடுத்து அதனுடன் சத்தி என்ற சரக்கையும், சிவம் என்ற சரக்கையும் (நாதம் விந்து) வீரத்தையும், அண்டத்தையும் சரி எடை சேர்த்து கல்வத்தில் காரநீர் விட்டு அரைத்து உலர்த்தி ஓட்டில் இட்டுச் சீலைமண் செய்து புடம் போட பற்பமாகும். இந்த பற்பத்தை அமுரியில் மண்டலம் கொண்டால் வாசியோகம் சித்தியாகும். சித்து விளையாடும் வல்லமை கிட்டும். (சக்தி—நாதம்; (சிவன்—விந்து) மேலும்

கிழங்கு, காய், மூலிகை இவை எல்லாம் உண்டால் அமுர்த மாகும். உண்ணும்போது இனிக்கும்.

741-745 சிகப்பு பற்பம் : சிகப்புக் கல்லை எடுத்து அதனுடன் வீரம் அண்டம் இரண்டையும் சேர்த்துக் கார நீரில் அரைத்து வழித்து உலர்த்தி ஓட்டில் வைத்து மூடிச் சீலைமண் செய்து புடம் போட வெளுத்து பற்பமாகும். இதைப் பாலுடன் மண்டலம் கொண்டால் காயம் சிவந்து வாசி அசையாது நிற்கும். வாசியோகம் கை கூடும். தீபச் சுடர் தோன்றும். இதனால் பல சித்துகள் கைகூடும். மேலும் உள் அன்பு கொண்டு பார்த்தால் மௌனம் திடப் படும். இதன் பிறகு பஞ்சபூதங்கள் பற்றி அறிந்து கொள்.

746-748 ஆதி சரக்கிரல் பஞ்சபூதம் : பிருதிவி என்ற பூதம் சத்தி உப்பாகும். அப்பு என்ற பூதம் சிவம் என்ற உப்பாகும். தேயு என்ற பூதம் நாதநீராகும். வாயு என்ற பூதம் வாய் நீராகும். ஆகாசம் என்ற பூதம் விந்து என்ற நீராகும். ஐந்து பூதம் இந்த ஐந்து சரக்காக நிற்கிறது. இதை அறிந்து செய்தால் வாதம் கைக்குள்ளாகும். (இரச வாதம்) இதை அறிந்து செய்தால் உறுதியுள்ள செயநீர் கிடைக்கும் இதை கண்டு முடித்துக் கொள்.

749-750 உப்பில் பஞ்ச பூதம் : பூமி என்ற பூதம் கல்லுப்பு, இந்துப்பு, ஆகும். அப்பு என்ற பூதம்: நவச் சாரம், சக்திச்சாரம். தேயுஎன்ற பூதம் சவுட்டுப்பு, வெடியுப் பாகும். வாயு என்ற பூதம் துருசும் வெங்காரமும் ஆகும். ஆகாயம் என்ற பூதம் பூதமும் சவுக்காரமுமாய் நிற்கும்.

751.752 லோகத்தில் அஞ்சு பூதம் : பூமி என்ற பூதம் தங்கமாகும். அப்பு என்ற பூதம் காரீயமாகும். தேயு என்ற பூதம் இரும்பாகும். ஆகாயம் என்ற பூதம் நாகமாகும். இதை அறிந்து வாதம் (இரசவாதம்) செய்தால் வாதம் சித்தியாகும்.

753-757 பாஷாணத்தில் பூதம் : தொட்டி பாஷாணம் கார்முகில், மிருதார்சிங்கி, பவளபுத்து இவை எல்லாம் பூமி என்ற பூதமாகும்.

கெவுரி. வெள்ளை, குதிரைப் பல் பாஷாணம் கோழு பாஷாணம், கோழித்தலை கெந்தி இவை எல்லாம் அப்பு என்ற பூதமாகும். கெந்தகம் (நெல்லிக்காய் கெந்தி, சுரை கெந்தி) அரிதாரம் மனோசிலை, வீரம், செப்பு தொட்டி பாஷாணம் இவை எல்லாம் தேயு எறை பூதமாகும்.

சரகண்ட பாஷாணம், லிங்கம், பஞ்சபட்சி பாஷாணம் (கெவுரி) இவை எல்லாம் வாயு என்ற பூதமாகும். குதி பாஷாணம், நாகபாஷாணம, இது ரெண்டும் ஆகாசமாகும்.

758-763 உபரசத்தில் பஞ்சபூதம் : காரம், சலாசத்து, அப்ரகம், பூநாகம், சுக்கான்கல், ஈரல்கல் இவை எல்லாம் பூமியாகும். சங்கு. நண்டு நத்தை, கிளிஞ்சல், ஆமை இவை எல்லாம் அப்பு என்ற பூதமாகும். முட்டையும் அப்புவாகும் இந்திரகோபம், நிமிளை எலும்பு, கொம்பு இவை தேயுவாகும். கல்மதம், கல்நார், அன்னபேதி, ரோமம் சகத்திர பேதி இவை எல்லாம் வாயு என்ற பூதமாகும். துத்தம், கெண்டகசிலை, அயக்காந்தம், ரசிதபாஷாணம் இவை எல்லாம் ஆகாசம் என்ற பூதமாகும்.

765-776 பஞ்சபூத ஒடுங்கம் : உபரசம், காரசாரம், பாசாணம் இவற்றில் எல்லாம் பஞ்சபூதம் அறிந்து வாதமும் வசியமும் செய்தால் சித்தியாகும். அஞ்சனம் சித்தியாகும். ஒரு பூதம் மற்றொன்றில் அடங்கில் பல சித்துக்கள் புரியும், அந்த பூதங்கள் அடங்கும் முறையை கேள் பிருதிவி என்ற பூமி சலத்திலு ம் (நீரிலும்) நீரானது தேயு என்ற நெருப்பிலும் தேயுவானது வாயு என்ற காற்றிலும் காற்றானது ஆகாசம் என்ற பரவெளியிலும் ஒடுங்கும் இந்த ஒடுக்கத்தை அறிந்து எதைச் செய்தாலும் பலிக்கும். தேக சித்தியும் உண்டாகும். அருமையான இந்த ஐந்நூறு என்ற நூலை முறையாகப் பயின்றால் சித்துக்கள் பலிக்கும். போவதும் வருவதும் புரியும். இதைப் புரிந்து கொண்டு தருவான மூலத்தில் நின்றால் தொண்டன் என்று எல்லோரும் உன்னை வணங்குவார்கள். அண்டத்தையும்

பிண்டத்தையும் கண்டு அண்டத்தில் உள்ளவை அனைத்தையும் பிண்டத்தில் கண்டறிந்து பிண்டமான உடலைப் பேணிக் காத்தால் மூலம் திறந்து சோதி தோன்றும் வாசியும் மூலத்தில் சென்று அடையும். அந்த வாசியின் வீட்டை அறிந்து சிவயோகம் செய்ய வேண்டும்.

771-800 கபால தீட்சை : உச்சியில் ''றீம்'' என்றும் புருவ மையத்தில், ''ஓம்'' என்றும் கண்டத்தில் அங் என்றும், '' ''மங்'' என்று மார்பிலும், ;''சிங் வங்'' உந்தியிலும் (நாபியில்) இட்டு தியானித்தால் சிங்கென்று மூலாதாரம் திறக்கும். இதுவே கபால தீட்சையாகும். இவ்வாறு தீட்சை செய்து தினமும் வணங்கி நின்றால் தேகம் கயிலாசமாய் ஏகாந்தமாய் நிற்கும். ஏகாந்தமாய் நிற்கும் சிவசக்தியை நீ பணிந்து வணங்கி நின்று தீட்சை செய்து விபூதியைப் பூசு. விபூதியை உத்தளமாய்ப் பூசி யோகத்தில் நின்று மூலத்தானமான குண்டலியை எழுப்ப வேண்டும். எழுப்புவதற்கு ரேசகம் ரெண்டரை மாத்திரை பூரகம் ஒன்றரை மாத்திரையும் செய்து கண்டத்தில் அங்கென்று சேர்த்தால் மூலவாசல் சீக்கிரமே திறந்து தீப ஒளி காணும். அந்த ஒளியில் பரமபதியைப் பார்க்கலாம். இவ்வாறு வாசியோகம் செய்தால் வாசி ஆனந்தமயமாய் நிற்கும். இந்த தேசியான வாசியைக் காண எங்கு அலைந்தாலும் காண முடியாது. பரம குருவை அறிந்து அவரை அடைந்தால்தான் முடியும். அறிவால் அண்டத்தைப் பார்த்தால் குருவை அறியலாம். இவ்வாறு பார்க்கும்போது அண்டமும் பிண்டமும் ஒன்றில் ஒன்று சேர்ந்து கண்டத்தில் நிற்கும் சூட்சத்தை சொல்பவர் சற்குரு ஆவார். விந்து, பூரணம், உடல் உருவான காரணம் இவற்றை தவறு இல்லாமல் பார்ப்பவர்தான் குருநாதனாவார். நாதமும் விந்தும் ஒன்று சேர்ந்து பூரணமாய் நிற்கும் பொருளைக் கண்டவர்கள் பேதம் அற்ற பெரியோர் ஆவர். சிவபதியில் நின்று ருசிகளைத் தள்ளி அமுதரசத்தை அறிந்தவர்கள் பராபரமாவார். வித்தில் மரம் எவ்வாறு தோன்றுகிறது என்றும் முரத்தில் எவ்வாறு ஓசை எழும்புகிறது என்றும்

பெற்ற வரத்தால் எவ்வாறு எல்லாம் சித்திக்கிறது என்றும் யார் அறிகிறாரோ அவருக்கு எல்லா சித்தியும் கைநெல்லிக் கனி ஆகும். பழத்தின் குணத்திற்கு அதன் ருசியே காரணம், மணியின் குணத்திற்கு அதன் ஒளியே காரணம். மூலாதாரத்தில் உள்ள போத மயமான பூரணத்தை அடைந்தவர் குரு ஆவார். தீட்சையை அறிந்து நந்தி ஒளியைக் கண்டு வாசி சுடரில் ஒடுங்கும் விதத்தையும் பார்த்து மூலத்தை அறிபவர் முத்தர். உப்பு துருசாக மாறும் விதத்தையும் அப்புவான நீர் பல செய்கை புரியும் விதத்தையும் சித்து காலத்தில் தெரிகின்ற உண்மையை அறிந்து அத்தனை சிவபெருமான் திருஉருவத்தை அறிபவர் ஞானியாவார். நாதம், விந்து பூரண கற்பம் இவற்றைக் கண்டு வாதம் புரிந்து பேதம் பார்ப்பவர் பித்தராவார். வாதம் பித்தம் சிலேற்பனம் ஆகியவற்றின் நன்மை தீமை கண்டு அதை விடுத்துசத்துவ குணத்தில் நிலை பெற்றவர் முத்தராவார். முத்தியான மோட்சப்பேறு அடைவதற்கு ஆதிகாரணம் என்னவென்றால் தத்துவங்கள் அகன்று நாத விந்தை அறிந்து பரியான வாசியை உணர்வதேயாகும். அவ்வாறு உணர்ந்தால் சக்தியும் சிவமும் தானாய் நிற்பார். சித்தான சித்தம் மயேஸ்வர வடிவமாய் குருநாதனாய் இவ்வுடலில் நிற்கும் உண்மையை அறிந்து தேகத்தை சித்திசெய்பவர் சித்தராவார். ஆசானின் உண்மையான ரூபத்தை அறிபவர் உடலில் உள்ள ஆதார மலர்களை முறையாக அறிபவரும் வாசி பிறந்த இடத்தையும் செல்லும் இடத்தையும் அறிந்தவரும் வாசி நிலைக்கும் இடத்தை அறிபவரும் ஆசானான குருபதத்தை அறிந்தவரும் ஆவார். அவரே தேசி எனப் படுவர். தேசியானவர் குருவை தெரிசிக்கும் இடத்தை அறிவார். வாசியோகம் அறிபவர் நல்ல காயத்தை அடைவார். உள் இருக்கும் நாதனான பொருளை அறிபவர் இந்தக் காயமான மனையை அறிவார்கள். அறிவான பூரணத்தை அறியாதசித்தர்கள், எதையும் அறியமாட்டார்கள். ஆதனால் அறிவான [illegible]த்தை அறிந்து பேணி[illegible] பேணுபவரும் பூரண மயமாவார்,

பூரணமான நில உப்புக்கு, பூநீறுக்கு ஆதிகாரணம், கருவை அறிந்தவர் அறிவில் சேர்ந்து தேக சித்தியை அடைவார். சித்தி பெற்று சிவமான குருவை அறிந்து பித்தர்களைப் போல் தற்பெருமை பேசாமல் அகற்றி உலகத்தோடு ஒன்றி நின்றால் குழந்தைப் போல் ஆனந்தம் அடைவான். மௌனியானவன் தரிசித்தால் தரிசித்த மாத்திரத்தில் பாவம் தொலையும். பூரணத்தின் அருள் கிட்டும். கோபம் தொலையும். முத்தான குரு மொழி எண்ணூறை முதலில் இருந்து கடைசி வரை பார்த்த பேர்க்கு வித்தை பெருகும். சிவஞானம் ஓங்கும். சுடரொளி தீபம் துலங்கும், சுடரொளியான இந்த எண்ணூறு பாடலைக் கண்டவனுடைய களங்கம் அகன்று வாசி யோகத்தில் மனம் லயிக்கும் ஈடுபடும் அல்லது விரும்பும். அதுமற்றும் இன்றி மூலச் சுடரொளி தீபம் தோன்றி முத்தி அடைவான்.

ஓம் தத் ஸத்

# ரோமரிஷி 500

என்ற நூலில் காணப்படும் சரக்கு வைப்புகள் பற்றிய பாடல்கள் மட்டும் இந்நூலுடன் ஒப்பிட்டுப் பார்ப்பதற்காக இங்கே தரப்படுகின்றன.

## கொங்கணவர் சரக்கு வைப்பு
## தனி நூலாக வெளிவரும்

### துருசு வைப்பு

காட்டுவேன் வாதத்திலாதியென்ன
கருவான துருசினுடவைப்பு கேளுஞ்
சூட்டுவேன் சினமது பலந்தானாலு
துப்பறவாம் வெடியுப்புப் பலந்தானாலு
கூட்டுவாய் கல்லுப்புச் சேர்தானெட்டு
குமுறவே பொடிபண்ணி சொல்லக்கேளும்
பூட்டுவேன் செம்பான பாண்டந்தன்னில்
பொடித்திட்டுப் பழச்சாறுந் தயிரும் வாரே. 1

வார்த்துமே பழச்சாறுபடி தான்ரெண்டு
மைந்தனே கரிமேதைத் தயிர்தானொன்று
பார்த்துமே கலக்கிட்டுச் சீலைமண்செய்து
பக்குவமா யரையளவு குழிதான்வெட்டி
கார்த்துமே யொட்டைலெத்தி குதிரைலெத்தி
கவியவே தான்மூடி மண்ணுங்கொட்டி
தூர்த்துமேன் மூடிவிட்டாறு திங்கட் 2
டொக்கமறக் கலத்தியெடு சொல்லக்கேளே

சொல்லுவேன் துருசென்று பேருமாச்சு
சொற்பெரிய மூலரென்று பேருமாச்சு
வெல்லுவேன் வாதவித்தை தனக்கேயாதி
வேதாந்த சாரமென்று மிதற்கேபேரு
கொல்லுதேன் சூதத்தை யென்றுநின்ற
குடரோமுள்ள மதயானைக் கோவிக்கோவி
மில்லுவேன் சரக்குகளைத் தலைதூக்காமல் 3
மீரடங்கக் கட்டுகிற குருவுமாமே.

வீரவைப்பு

இனியதொரு சரக்குவகை யின்னங்கேளு
இயல்பான கல்லுப்புப் பலந்தானாறு
கனியதொரு பூநீறு பலந்தான்ரெண்டு
கண்டரென்ற துருசுதான் பலமும்நாலு
வனியனெனுஞ் சினமது சொல்லக்கேளு
மைந்தனே பலமது தானொன் றரையுமாகும்
பிணியனென்று நோயகலுஞ் சாரந்தானும் 4
போக்கோடே பலமரை தான் புகழாய்க் கூட்டே.

கூட்டவே வெடியுப்புப் பலந்தான்கேளு
குறையாம லொன்றரையாம் பலமேதூக்கி
வாட்டவேயிவை யெல்லாம் கல்வத்திட்டு
அப்பனே துருசுப்பு வறுத்துப்போடு
காட்டவே யொன்றுமில்லை திராவகத்தினாலே
கனக்கவே யரையாதே மத்தித்தப்பா
ஊட்டவே சிறுதணலில் வறுத்துக்கொண்டு 5
உத்தமனே குப்பிதனி லடைத்திடாயே.

அடைத்துமே யரைவாசி மட்டும்போட்டு
அப்பனே வாலுகையில் முன்போல்வைத்து
படைத்துமே முச்சாமந்தீயைப் போட்டுப்
பருவமாய் ராக்காலமாறப் போட்டு
விடைத்துமே நாலாநாள்தீயைப் போடு
விடாமடன் பன்னிரண்டு சாமமாகும்
[illegible]
உடைத்துமே யைந்தாநாள் [illegible] 6
உற்றுநீ பார்த்திடவே வீரந்தானே.

## பூர(ண) வைப்பு

கேளடா சூடனது பலந்தானொன்று
    கெட்டியாய்ப் பூநீறு பலமதொன்று
நாளடா வெடிஉப்புக் கழஞ்சுரெண்டும்
    நாட்டுவாய் கல்லுப்புக் கழஞ்சியொன்று
சூளடா சாரமது கழஞ்சியொன்று
    துப்புறவாய் வெங்காரம் கழஞ்சியொன்று
கேளடா வாராமற் கல்வந்தன்னில்
    கொட்டியே தானரைக்கக் கூறுவேனே. 7

கூறுவேன் கல்லுப்பை வறுத்துப்போட்டுக்
    கொடியதொரு சரக்கையெல்லாஞ் சுகமாய்ப்போடு
ஆலவே பசுவின் நெய்யதிலே கொஞ்சம்
    அப்பனே விட்டுநீ ரவியிற்போடு
ஊறவே சாமமது சென்றபின்பு
    உத்தமனே சூடனது பொங்கிநிற்குந்
தேறவே பதமென்று மறுகால் நீயுந்
    தீர்க்கமாஞ் சூடனதிற் கழஞ்சிபோடே. 8

போட்டுமே புழுகதிலே கழஞ்சுகூட்டிப்
    பொங்காமல் நெய்யைவிட்டு மறுகாலாட்டு
ஊட்டுமே யுறுதியாயாட்டிக் கொண்டு
    உத்தமனே சாமமது சென்றபின்பு
நாட்டுமே காசியென்ற மேருக்கேற்றி
    நாதாந்த சக்தியைநீ பூசைபண்ணி
நேட்டுமே யிதையிட்டால் தேட்டமுண்டே
    சிவசிவா தாளிதனில் மணலைக்கொட்டே. 9

கொட்டியே நாலுவிரல் கனந்தானப்பா
    கூறுவேன் கல்லுப்பைப் பொடியாய்ப்பண்ணி
எட்டியே நெற்கனமாயதன் மேலிட்டு
    உறுதிபெறக் குப்பிதனை நடுவில்வைத்து
கட்டியே மணலைக் கழுத்துமட்டுங்
    கனக்கவே செய்[illegible]

பட்டியாய்த் திரியாதே குப்பிவாயை
    வழக்கமாய்த் திறந்துநீ வைத்திடாயே, 10

வைத்திட்டு வாலுகையில் தீபம்போல்
மைந்தனே கடிகையது சென்றயின்பு
பொய்த்திட்டுப் போகாது புகைமேற் செல்லும்
பொருமியே குப்பிவா யுடைத்துப் போகுங்
கைத்திட்டமாகவேதான் கமலத்தியாய்க்
கவனமாய்ப் போட்டுவிடு சாமமூன்று
மெய்த்திட்ட மாகவேதானனல் தான்மீறி
வெடித்துவிடுங் குப்பியது வீழ்வாய்ப் போமே. 11

போகாமற் பத்திரமா யிருந்துகொண்டு
பூரணியை மனதில்வைத்துத் தியானஞ்செய்து
ஏகாமற் சாக்குகளைப் பார்த்துக்கொண்டு
என்மக்காள் கவனமதா யிருந்துகொண்டு
சாகாமல்நின் றதொரு தலையுமாகுந்
தண்ணுடா சரக்குகளை யிந்தபூரம்
வேகாமற் சரக்குகளை வேகவைக்கும்
வெகுசுருக்குச் சுண்ணத்திற் காதியாமே. 12

ஆதியாங் குப்பிதனையாறப் போடு
அப்பனே யுடைத்துப்பார் பூரந்தானுஞ்
சோதியா மிளந்தேங்காய் போலநிற்குஞ்
சொல்லுவே னிதன்பெருமை சுண்ணத்தாதி
வாதிகளே யிதையிடித்து வைத்துக்கொண்டு
மகத்தான சரக்குகளைச் சுன்னம்பண்ணும்
பாதியாய் நின்றதொருமதியைச்சூடும்
பரனெனக்குச் சொன்னவித்தை பார்த்
தோம்நாமே. 13

## சூடன் வைப்பு

கேளடா சூடனுட வைப்புதானுங்
கீர்த்தியாய்ச் சித்தர் சொல்லவே யான்
தாளடா வாழையைத்தான் வெட்டிப்போட்டு
நலமாகக் கிழங்கதனைக் குடைந்து வைத்தாற்
சாளடா மறுநாள்தான் உற்றுப்பாரு
சலமதுதான் நிரம்பிநிற்குமெடுத்துக் கொண்டு
வாளடா படிதானும் இருபதாகு
மைந்தனே யெடுத்துந் [illegible] 14

ஊத்தடா செப்பினுட பாண்டந்தன்னில்
உத்தமனே வெடியுப்பு ஐந்தாங்காய்ச்சல்
சேத்தடா உப்பதுதான் முறிக்கக்கேளுந்
திறமையாய் உப்புத்தான் பாண்டத்திட்டு
வாத்தடா காடியதுமமுங்கவிட்டு
மைந்தனே குங்குலியம் பத்துக்கொன்று
பாத்தடா வெள்ளையாய் எடுத்துக்கொண்டு
பக்குவமாய் உருக்கியதில் இட்டிடாயே 15

இட்டுமே அடுப்பிலிட்டுக் காய்ச்சும்போது
இதமாகக் குழம்பதுபோற் பதத்தைப்பார்த்து
தொட்டுமே எலுமிச்சம் பழத்தின்சாறு
சுருக்கிடவே குத்திநீ காய்ச்சும்போது
கட்டுமே உலையதனிற் கருதிப்பாரு
கணக்கவேஉறைந்து விடும்பத மென்றேதாம்
ஒட்டுமே புதுச்சட்டி தன்னிலேதான்
புகழ்பெறவே ஊற்றிவிடு உப்புநீரே. 16

நீரிட்ட சட்டியைத்தான் மூடிப்போடு
நிறைந்துமே மூன்றுநாளான பின்பு
காரிட்ட உப்பதுதானென்ன சொல்வேன்
கம்பியென்றால் பெருங்கம்பி யாகும்பாரு
சீரிட்ட உப்பதனைக் காயப்போடு
தீர்க்கமா எட்டுசேர் நிறுத்துக்கொண்டு
வாரிட்ட வாழையுட ஜலத்திலேதான்
மைந்தனே கலக்கிவிடு வகையிதாமே. 17

வகையான தொன்றுமில்லை பாண்டந்தன்னை
மைந்தனே அடுப்பில் வைத்துக்காய்ச்சும்போது
இகையான கருவாப்பட்டை தன்னை
யிதமாகத் தானெடுப்பாய் வீசையொன்று
துகையான விதையிடித்துப் பாண்டத்திட்டுத்
துப்புறவாய்க் காடியது தூணிவிட்டுப்
பகையில்லா வெல்லமடா பனையின்வெல்லம்
பாங்குடனே சேர்த்தன்று [illegible] 18

போட்டுமே கலக்கி நீறப்போட்டு
போக்கோடே மத்தைவிட்டு கிண்டும்போது
ஊட்டுமே கையிடையில் சிறியதானால்
உத்தமனே மறுபாண்டந் தன்னிலூற்றி
காட்டுமே யடுப்பிலிட்டுப் பாலைமூடி
கவிழ்த்தியே குழையிலிட்டு வாங்குவாங்கு
தீட்டுமே திராவகம் போலிறங்கும்பாரு
திறமான பீங்கானிற் பதனம்பண்ணே. 19

பண்ணவே முன்னுரைத்த வாழைநீர்தான்
பற்றியே வருகையிலே திராவகத்தைவாரு
எண்ணவே படிரெண்டு கூடவாரு
இதமாகக் கிண்டியே மூடிப்போடு
கண்ணவே காற்றில்லா விடத்திலேதான்
கனமதாய் மூடியடா சொல்லக்கேளு
வண்ணவே யொன்பது நாட்கழிந்ததானால்
வாங்கு பெறத்திறந்துபார் சூடனாமே. 20

ஆகுமே யாலத்திப் பூரமாச்சு
அப்பனே யுதைக்கட்ட யாராலாகும்
போகுமே சுண்ணமென்ற கட்டுக்கெல்லாம்
போக்கோடே பாறையுப்பு பண்ணினாக்கால்
ஏகுமே கலையென்று மிதற்குப்பேரு
எண்ணமென்றுந் தீயென்று மிதற்குப்பேரு
தாகுமே யக்கினியாங் கூர்மமாச்சு
சச்சிதாநந்த வெளிதானே பாரே. 21

சவ்வீர வைப்பு

கேளப்பா கல்லுப்பு வெடியுப்புச்சாரங்
கெடியான பேதியுடன் சினாக்காரம்
நாளப்பா துருசினுட னாறுங்கூட்டி
நலமாக விந்தெடைக்கு ரசந்தான் வாங்கிச்
சூளப்பா திராவத்தால் ரஸத்தைக்கொன்று
துடியாக இதனோடே கலந்துகொண்டு
நீளப்பா குப்பியிட்டு வெரிக்கமேலே
நெருங்கிநின்ற பதங்கமது வீரந்தானே. 22

வீரனென்றால் மகாவீரன் சுத்தவீரன்
வேதைக்கோ ரணவீரன் சுண்ணவீரன்
காரமென்றால் கடுங்காரங் காணியுண்ணாச்
சார்வான கைமுறையாயிதை விட்டால்
வேதைபோச்சு
சாரமென்றால் கடுஞ்சாரம் பட்டவிடம்வேகுஞ்
சரக்கினொடு சூதநின்ற சையோக வேகந்
தூரமென்றால் வெகுதூரமிதைத் தொட்டாலோடுந்
துடியான வீரத்தைக்கட்டக் கேளே. 23

முற்றும்

